# காவேரி

## பொருளடக்கம்

| விக்ருதி மலர் 10 | | மார்கழி இதழ் 5 |
|---|---|---|

# ARMSTRONG
## THE BETTER BICYCLE

# ஆம்ஸ்டிராங்
## சிறந்த பைஸைகிள்



சிறந்த பைஸைகிளாகிய ஆம்ஸ்டிராங் ஒன்று உங்களிடம் இருந்தால் போதும்; வேலை நிமித்தமாகவோ வேடிக்கையாகவோ எவ்வித தொந்தரவும் இன்றி நீங்கள் ராஜ பாட்டை போல சவாரி செய்யலாம். ஒரு ஆம்ஸ்டிராங் வாங்குங்கள். ஸைகிள் தொழிலில் பிரசித்திபெற்ற தயாரிப்பாளர்களின் சிறந்த தயாரிப்பு உங்களுக்குச் சொந்தமாயிருக்கிறது என்கிற பெருமை உங்களுக்கு விரைவில் ஏற்படும். அதன் பெயரே குறிப்பிடுவதுபோல், வலிவாகவும், இந்தியாவின் கரடுமுரடான ரஸ்தாக்களில் நீடித்து நின்று வருஷக்கணக்கில் நம்பிக்கையளிக்கத் தக்கவாறு உழைப்பதாகவும் அது விளங்குகிறது. ஆம்ஸ்டிராங் — மிகவும் பிரபலமான பைஸைகிள் — ரஸ்தாவில் அதை நம்புங்கள். அதற்குக் கொடுக்கும் விலை அதற்குத்தகும்.




விநியோகஸ்தர்கள் :

**ராயல் ஸைகிள் அண்டு மோட்டார் கம்பெனி**

13/14, பிராட்வே, தபால் பெட்டி நெ. 219, சென்னை-1.

# காவேரி

விக்ருதி மலர் 10

"சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்—"பாரதியார்

மார்கழி
இதழ் 5




## தென் நாட்டின் நஷ்டம்

நேயர்களுக்கு நமஸ்காரம். யோகி அரவிந்தர் மறைந்தார். இதற்கு முன் ரமண மஹரிஷி. இது தென் நாட்டிற்குப் பெருத்த நஷ்டம். ஏன் உலகத்திற்கே. மேல் நாடுகளிலிருந்து அனேகர் அரவிந்தரைக் காண வந்துகொண்டிருந்தனர். அவருடைய புகழும் யோகமுறையும் பல அறிஞர்களைக் கவர்ந்துவந்தன. புதுச்சேரி பெரிய யாத்திரை ஸ்தலமாக இருந்துவந்தது. இனி அங்கே அந்த ஜோதியைக் காணமுடியாது.

அரவிந்தர் ஆச்ரமத்தில் எண்ணூறு பக்தர்கள் இருக்கின்றனராம். இந் நாட்டில் பெரும்புகழ்பெற்ற மஹரிஷிகள் இருந்திருக்கின்றனர். தற்காலத்திலுள்ளன போல அவர்களுக்கு இவ்வளவு பிரகடனமும், பிரசாரபலமும், பக்தர்களும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆயினும் அவர்கள் புரிந்த தொண்டு, ஆஸ்திக மக்களுக்கு அவர்கள் காட்டிய வழி, இன்றும் ஓர் ஜகத் ஜோதியாகப் பிரகாசிக்கின்றது. ரமண மஹரிஷி, அரவிந்தர் இம் மஹான்கள் காட்டிய வழிகள் அம்மாதிரியே நீடூழிகாலம் திகழவேண்டும், நவீன மோகங்கொண்ட மக்கள் அகக் கண்ணைத் திறக்க உதவி வரவேண்டும் என்று விரும்புகிறோம்.

நவீன மக்களுக்கு மஹான்களைக் கண்டு தரிசிப்பதில் பக்தி அதிகம் உள்ளது. ஆனால் அம் மஹான்களின் பூதவுடல் மறைந்தபின் இவர்கள் அவர்கள்பால் கொண்ட பக்தியும் மறைய ஆரம்பித்துவிடுகிறது. அரவிந்தரையும் ரமணமஹரிஷியையும் தரிசிப்பது ஓர் கடமையாகவும் நன்மையாகவும் கருதிவந்த மக்கள் அவர்கள் காட்டிய வழி நடக்கிறார்களா என்று பார்த்தால் பெரும்பாலும் இல்லை என்றே கூறவேண்டும். எனவேதான் ரமணமஹரிஷியும் யோகி அரவிந்தரும் சீக்கிரத்தில் மறக்கப்பட்டு விடுவார்கள் என்று ஐயப்பாடடைகிறோம். அஃது நேராமலிருக்க வேண்டுமென்று இறைவனை வேண்டுவோமாக.

* * *

இந்த இதழிலே ரா. ஸ்ரீ தேசிகன் அ[illegible]கள் 'மலையுளே' என்ற அற்பு[illegible] ச்ருஷ்டியைச் செய்துள்ளார். 'மாரா[illegible] மணல் மேட்டில் நடக்கும் சம்பாஷணை மூலம் உங்கள் சிந்தனையைக் கிளறுகிறார். முக்கியமான சிக்கலுள்ள பிரச்னைகள் அலசப்படுகின்றன. லீலா கோபாலன் அவர்கள் லண்டனிலிருந்து இரண்டாவது கடிதம் எழுதியிருக்கிறார். மாயாவி எழுதிவரும் தொடர் கதை—தெய்வம் தந்தது—மிகுரஸமாக ஓடுகிறது. ஓர் இளநங்கை வயதான, ஆனால் வலுவுற்ற சரீரம் படைத்த, ஒருவரை மணக்கிறாள், மனப்பூர்வமாக. வயதான கணவர் அவளுடன் இல்லற வாழ்க்கை நடத்தினாலும், அவளை மனைவி என்று பாவித்து நடந்துவர மறுக்கிறார். அவருடைய பிடிவாதத்திற்கு மருந்தென்ன? ஆண்தன்மைக்குக் குறைவில்லை என்று டாக்டர்கள் கூறுகின்றனர். வயதான தாம் இளம்பெண்ணை மணந்தது தெய்வ சம்மதமில்லை என்ற திட நம்பிக்கையுடன் இருந்து வருகிறார். மனோதத்வ நிபுணர் டே இச்சிக்கலான கேஸை எப்படி முடித்துவைக்கிறார் பாருங்கள். பி. எஸ். பாரதி சித்திரித்துள்ள "குறை" மிகவும் ருசிகரமானது. அவசரக்காரப் பெண் தன் கணவனுக்குத் தீராத வியாதி இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு அவதிப்பட்டு, சுகத்தைக் கெடுத்துக் கொண்டு பின்பு தன் தவறை உணர்கிறாள்.

வ. அ. இராசரத்தினம் எழுதியுள்ள "காதற் பரிசு", வங்கத் தமிழன் எழுதியுள்ள "விட்டு விடுதலையாகி", எம். எஸ். சுப்பிரமணிய ஐயரின் "ஆனந்த மடத் தியாகி", ராமகுமாரின் "மாப்பிள்ளை" எல்லாம் ரஸமான கதைகள். "ஜெய் ஸோம்நாத்' தொடர்கதை முக்கியமான கட்டத்தை அடைந்துள்ளது.



டிரேட் மார்க்கை
கவனியுங்கள்!



ஒவ்வொரு
வீட்டிலும்
உட்வார்ட்ஸ்
க்ரைப் வாட்டர்
இருக்கவேண்டும்






# WOODWARD'S GRIPE WATER

*keeps baby well*

1-WW112-111

W. WOODWARD LTD. LONDON ENGLAND

Agent:— T. T. KRISHNAMACHARI & Co.
12 A, Lingha Chetty Street, — G. T. MADRAS.




ஏது தீது? எது நலம்? என்றதை நாம் அறியோம். கடவுள் விட்டவழியே நலமெனத் தேர்ந்து வாளாவிருப்பதே நமக்கழகாகும். தெய்வத்தினிடம் போய் ஒன்றையும் வேண்டிவிடாதே, ஒன்றுக்குப் பத்தாய் விளைந்துவிடும் என்பது உண்மையே. இது என்னிடத்திலும் பலித்து விட்டது—என்னிடம் மட்டுமா?—இல்லை. என் அத்தையிடத்திலும் இது பலித்து விட்டது.

எனக்குக் கல்யாணமாகிப் பல ஆண்டுகள் தேய்ந்துவிட்டன. பிள்ளைப் பேற்றை அடைதற்பொருட்டு ஆண்டவனை இறைஞ்சினேன். ஒன்றுக்குப் பத்தாய் எனக்குக் குழந்தைகள் பிறந்தன. ஆண்டுக்கொரு குழந்தையைப் பெற்றாள் என் மனைவி. அதனால் உடல் நைந்து அவள் மாண்டாள்.

அவள் மாண்டதற்கு நானே காரணம் என்று தேர்ந்தேன். என் பெண்கள் புக்ககம் புகுந்துவிட்டனர். என் பிள்ளைகள் எங்கேயிருக்கின்றார்கள் என்பது எனக்குத் தெரியாது. பல இடங்களில் அவர்கள் வேலைபார்த்து வருகிறார்கள் என்பதை மட்டும் அறிவேன். பெற்ற பாசத்தால் என் சிந்தை அவர்கள்பால் பாய்ந்தோடும். அவர்கள் என்னை நினைக்கிறார்களா? தகப்பன் ஒருவன் இருக்கிறான் என்ற எண்ணம் அவர்களுக்கு வருகின்றதா? ஓர்ந்திலேன். என்னுடைய சிற்றின்பத்திற்குக் கருவியாக என் மனைவியை ஆக்கினேனே! என்னை வாட்டத் தொடங்கிவிட்டது. அவளுடைய பேரின்ப வாழ்வை மாய்த்த பாதகன், கொலைகாரன் நான்; எனக்கு உய்விடமுண்டோ? என்ற கேள்வியை என்னிடமே பலமுறை கேட்டதுண்டு. அதற்கு என் மனம் மௌனம் சாதித்துவிட்டது. புண்ணியத்துறைகளாடிப், பல மூர்த்திகளின் தரிசனம் கிடைக்குமானால் ஒரு பிராயச்சித்தமாகுமென்று கருதிக் கன்னியா குமாரியிலிருந்து இமயம் வரையில் போனேன். ஒரு நாள் சாயந்திரம் ஒரு குன்றின்மேல் ஏறி நின்றேன். ஒரு தனி எழில் எங்கும் தாண்டவம் புரிந்தது. சூழ்ந்துள்ள வரைக் காட்சிகள் என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டுவிட்டன. பல அருவியில் பாய்ந்தோடும் அரவம் என் மனத்தில் ஒரு நல்லிசைக் கானம்போல ஒலித்தது. சேணில் கம்பீரமாய்ச் சுழித்தோடும் அளக நந்தாவின் வனப்பில் என் உள்ளமும் தோய்ந்தது. மலையிலுள்ள வளங்களை வாரிக்கொண்டு ஆறுகளும் அருவிகளும் சென்றன. அந்திப்பொழுதும் விரைந்துவரும் அந்தகாரத்தில் சட்டென மறைந்தது. குழவித் திங்களும் தோன்றிற்று. விண் மீன்கள் காவல் புரியத் தொடங்கின. ஓர் அமைதி எங்கும் அரசு செலுத்திற்று. இமயமும்

"உன் பிள்ளைகள் சௌக்கியமா?"

"அவர்களைப்பற்றி ஒன்றுமே தெரியாது"

"என்னடா அப்படிச் சொல்லுகிறாய்? என் ஜாதகம் போலவா உன் ஜாதகமும் அமையவேண்டும்?"

"என்ன செய்யலாம்? எல்லாம் என் விதிதான். அத்திம்பேர் போய் எத்தனை நாளாகிறது?"

"ஆறு வருஷத்திற்கு மேலாகிறது"

"கிட்டு எங்கே?"

"டெல்லியில் இருக்கிறான்."

"சுப்பு எங்கே இருக்கிறானோ?"

"அவன்தான் பெரிய சங்கீத வித்வானாய் ஆயிரக் கணக்கில் சமபாதிக்கிறான்."

"சாம்பசிவன் எங்கே?"

"அவன் ரங்கூனில் பெரிய உத்தியோகத்தில் இருக்கிறான்."

"மீனா சௌக்கியமாயிருக்கிறாளா?"

"அவள் டேராடூனில் இருக்கிறாள்."

"குழந்தைகளுண்டா?"

"இல்லை, இல்லாமலிருப்பது தேவலை அப்பா, இருந்தும் ஒன்றுதான் இல்லாமலிருப்பதும் ஒன்றுதான்"

"விசாலம் எங்கே?"

"அவள்தான் காசியிலிருக்கிறாள் குட்டி குழந்தைகளுக்குக் குறைவில்லை. நம்மைப் போல அவளும் ஆகாமலிருக்க வேண்டும். அதுதான் என் பிரார்த்தனை"

"உடம்பு இத்தனை மோசமாயிருக்கிறதே, பிள்ளைகளுக்குத் தந்தி கொடுக்கலாமா?"

"வேண்டாமப்பா. இதோ இருக்கிறாளே இந்த அம்மா. அவள் எனக்காகப் படாதபாடெல்லாம் படுகிறாள். மலம் ஜலம் எல்லாவற்றையும் வாரிக்கொட்டுகிறாள். முந்தின ஜன்மத்தில் கூடப் பிறந்தவள்போலத்தோன்றுகின்றது. என் பிள்ளைகளிடம் நான் போய்த் தங்கமாட்டேன். மாதத் தவணை அவர்கள் வைக்கின்றார்கள். நான் ஒரு பந்தா? அவர்கள் ஆட்டத்திற்கெல்லாம் நான் ஆளாவதற்கு. ஒரு பிள்ளையும் சேர்ந்தாற்போலச் சோறுபோட முன்வரவில்லை. நீதான் வந்திருக்கிறாயே கொள்ளிபோட. இத்தனை பேர்கள் மத்தியில் நான் அநாதியாகிவிட்டேன். நான் ஒரு மலை. மலையிலே பிறக்கிறதெல்லாம மலையைப் பற்றி நினைக்கிறதா? மலைக்கு வேணுமென்றால் அஞ்ஞானம் போகாது, புலம்பியே பார்த்துக்கொண்டிருக்கும். அந்தக் கதிதான் எனக்கும்"

என் அத்தை எத்தனையோ எண்ண அலைகள்மீது மிதந்துகொண்டே போனாள். அத்தையின் உருவம் என்முன் நிற்கவில்லை. அன்றிரவு சூழ் அமைதியில் சிந்தை தேக்கிய முகத்தோடு நின்ற இமயந்தான் என் முன் விரிந்தது. பத்துக்குழந்தைகளின் நடுவிலேதானா? நமக்குத் தனி நடை. பல்லாயிரக் கணக்கான ஜீவராசிகளின் மத்தியிலும் நாம் தனிவழி நடக்கத்தான் வேண்டும் என்ற எண்ணமும் வந்தது.

மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா
மென்செய்யும்.

என்ற வரியில் அவ்வெண்ணமும் மெல்லக் கரையக் கண்டேன்.



# மணல் மேடு

## மாரார்

**வி**யாஸாசார் : ஐயங்கார்வாள், உங்கள் பேரனை மதராஸ் ஜெனரல் ஹாஸ்பிடலுக்கு அழைத்துக்கொண்டுபோய்க் காண்பிக்கப் போகிறதாகச் சொன்னீரே, அழைத்துக்கொண்டு போனார்களா? என்ன சொன்னார்கள்?

சுதரிசனம் ஐயங்கார் : அங்கே **எக்ஸ்ரே** யில் வைத்துப் பார்த்தார்களாம். முழங்கால் சில்லு உள்ளே ஒரு இடத்தில் உடைந்திருந்ததாகத் தெரிந்ததாம் : உடனே க்ளோரோபாம் கொடுத்து ஆபரேஷன் செய்தார்களாம். கட்டுக் கட்டியிருக்கிறது. இனி குணமாகிவிடும் என்று கடிதம் வந்திருக்கிறது.

ஜாபாலிரத்னம் ஐயர் : ராயர்வாள், நம் மகரிஷிகள் மகா மேதாவிகள். அவர்கள் அறியாத விஷயம் ஒன்றுமில்லை என்று சொல்லுகிறீரே. அந்த ரிஷிகள் நாளில் **எக்ஸ்ரே** மாதிரி உடலுக்குள்ளிருப்பதை நேராகப் பார்க்கக்கூடிய ஒரு உபாயம் உண்டா? க்ளோரோபாம் மாதிரி ஒரு மருந்து நம் மகரிஷிகளுக்குக் கண்டுபிடிக்க முடியவில்லையே. இதெல்லாம் இக்காலத்து மேல்நாட்டு மேதாவிகளே கண்டுபிடித்திருக்கின்றனர். இவர்கள் தான் இப்போதைய மகரிஷிகள்.

வியாஸாசார் : அதென்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? நம் ரிஷிகள் ஞான திருஷ்டியினால் உடலுக்குள் என்ன கோளாறு என்று தெரிந்துகொள்வார்கள். அயோத்தியில் நடந்ததை ஆயிரம் மைலுக்கு அப்பால் தவம் செய்துகொண்டிருந்த பரத்துவாஜ முனிவர் அறிந்தார் என்று இராமாயணத்தில் சொல்லியிருக்கிறதே.

ஜாபாலி : காவியங்களிலும் புராணங்களிலும் வருணித்திருப்பதை உண்மையாக நடந்ததென்று எப்படி எண்ணுகிறது? அப்படியே பரத்துவாஜர் தாம் மாத்திரம் தூரத்தில் நடந்ததைப் பார்க்கும் சக்தியுள்ளவராயிருந்தார் என்று வைத்துக்கொள்வோம். மற்றவரும் அதைப் பார்க்கும்படி அவர் செய்யவில்லையே. இப்போது **எக்ஸ்ரே**யில் வைத்தால் உடலுக்குள் இருக்கும் எலும்புகளை விக்ஞானி மாத்திரமல்ல, பக்கத்தில் நிற்கும் பாமர ஜனங்களும் கண்கூடாகக் காணலாம். இது ஒரு நூதனமான ஆச்சரியம் அல்லவா! அமெரிக்காவில் ட்ருமன் பேசுகிறார். அதே நிமிஷத்தில் இந்தியாவில் உள்ள நம் எல்லோருக்கும் அவர் குரல் ஸ்பஷ்டமாய்க் கேட்கிறது. ரிஷிக்கு மாத்திரம் கேட்டால் போதுமா? இக்காலத்து மேதாவிகள் விக்ஞானத்தின் பலத்தினால் மற்றவரும் ஒரு சிறு யந்திரத்தைக் கொண்டு கேட்கும்படி செய்துவிட்டார்களே. அதல்லவா ஸாமர்த்தியம்.

குருதாஸ் நாயுடு: க்ளோரோபாம் என்று ஐயங்கார் சொன்னாரே. அதன் அபார சக்தி எவ்வளவு ஆச்சரியமானது? ஆபரேஷன் செய்கிறபோது வியாதிக்காரன் சொஸ்தமாகத் தூங்குபவன் போல் மயங்கிக் கிடக்கிறான். ஆபரேஷன் முடிந்து அரை மணியானதும் விழித்துக்கொண்டு, ஆய்விட்டதா என்று மெதுவாய்க் கேட்கிறான். வலியே இல்லை.

ஜாபாலி: ஸிம்ப்ஸன் என்று ஒரு வெள்ளைக்கார விக்ஞானி ரணங்களுக்குச் சத்திரம் வைக்கும்போது, வலியில்லாமல் எப்படி ஆபரேஷன் செய்யலாம் என்று வெகுநாள் ஆராய்ச்சி செய்துவந்தாராம். ஒரு நாள் இதற்கு வேண்டிய பரீக்ஷை செய்துகொண்டிருக்கும்போது நாலு

ஐந்து குப்பிகள் மேஜையின்மேல் இருந்தன. அவைகளில் ஒரு குப்பியிலிருக்கும் திரவத்தை ஒரு கோப்பையில் ஊற்றினார். உடனே அதனுள்ளிருந்த திரவத்தின் காற்று மூக்கில் வீசிற்று. நாற்காலியில் உட்கார்ந்திருந்தவர் கீழே சாய்ந்து விழுந்துவிட்டார். பதினைந்து நிமிஷம் ஆனபிறகு விழித்துக்கொண்டதும் ஏன் விழுந்தோம் என்று ஆலோசித்தார். சரி, இந்தத் திரவம்தான். தமக்கு மயக்கம் தந்தது என்று நிச்சயித்தார். அது முதல் க்ளோரோபாம் இல்லாமல் ஒரு டாக்டரும் ஆபரேஷன் செய்வதே இல்லை. அதற்கு முன்னால் டாக்டர்கள் எவ்வளவு சாமர்த்தியமாய் ஆபரேஷன் செய்தாலும் அந்த வலி பொறுக்கமாட்டாமல் நோயாளிகள் நூற்றுக்கு ஐம்பதுபேர் சாவார்கள். க்ளோரோபாமை விட உலகத்துக்கு மகத்தான உபகாரம் வேறு என்ன இருக்கிறது?

சுதரிசனம்: ஆகாசத்தில் பறக்கிறது இப்போது ஸர்வ ஸாதாரணமாய்விட்டது. ஏரோப்ளேன் செய்ததும் மேல்நாட்டு மேதாவிகள்தானே.

வியாஸாசார்: முன் காலத்தில் ஆகாசத்தில் பறக்கும் விமானம் ராவணனிடமிருந்ததாக ராமாயணம் சொல்லுகிறது. முன் யுகத்திலேயே நம் தேசத்தில் புஷ்பக விமானம் இல்லையா என்ன?

ஜாபாலி: புராணத்தில் சொல்லியிருப்பதையெல்லாம் உண்மையென்று எப்படி சொல்லுகிறது? அரபிக் கதையொன்றில் பாக்தாத் மன்னன் முன்பு, ஒரு மந்திரவாதி வந்து, ஒரு மரக்குதிரையைக் காண்பித்தான். அதன் காதின் கீழ் ஒரு சிறு ஆணி இருந்தது. அதைத் திருகினால் உடனே குதிரை ஆகாய மார்க்கமாகப் பறக்கும் என்று சொல்லி, அப்படியே குதிரை மேலேறிப் பறந்துகாட்டினான் என்று ஒரு கதை இருக்கிறது. அதிலிருந்து அந்தத் தேசத்தாருக்கு ஏரோப்ளேன் செய்யத் தெரியும் என்று நாம் ஊகிக்கலாமா? அப்படியே ராவணனிடம் ஒரு விமானம் இருந்ததாக வைத்துக்கொள்வோம். அதைச் செய்து கொடுத்தவன் மற்றும் வேறு விமானங்களை ஏன் செய்யவில்லை? தசரத சக்கரவர்த்தி ஏன் ஒரு விமானம் செய்வித்துக்கொள்ளவில்லை? பட்டாபிஷேகம் ஆனவுடன் புஷ்பக விமானத்தை ராமன் லங்கைக்கு அனுப்பிவிட்டதாகச் சொல்லியிருக்கிறது. அதே மாதிரி சிற்பிகளைக்கொண்டு ஏன் தமக்கும் ஒன்று தயாரித்துக் கொள்ளவில்லை?

வியாஸாசார்: நம் பூர்வீகர் இந்த உலகத்துச்சுகசாதனங்களில் அதிக மதிப்பு வைக்கவில்லை. இவ்வுலகத்துச் சுகங்கள் அற்பமானவை, சாசுவதமல்ல. மோட்சமே சாசுவதமான ஆநந்தத்தைத் தரும். ஆகையால் அற்ப சுகங்களை வெறுத்து, நன்னெறியைக் கைப்பிடித்து, இனி பிறப்பு, இறப்பு என்கிற துக்கம் வராதபடி மோட்ச மார்க்கத்தையே நம் முன்னோர்கள் தேடினார்கள். அதற்காக எவ்வளவு சாஸ்திரங்கள் எழுதியிருக்கிறார்கள்? வேதாந்த விசாரத்தில் மேல் நாட்டார் நம் உபநிஷத்துக்கள், ஆசாரியர்கள் அருளியுள்ள பாஷ்யங்கள் இந்த மாதிரி என்ன செய்திருக்கிறார்கள்? அவர்கள் விக்ஞானத்தில் ஏதோ கொஞ்சம் உழைத்து வருகிறார்கள். ஆனால் வேதாந்தத்தில் நம்மவருக்கு அவர்கள் நிகராவரோ? உலக சுகம் எல்லாம் துக்கம் கலந்தே காண்கிறது. அதற்காகப் பாடுபாடுவது என்ன பிரயோஜனம்?

ஜாபாலி: வேதாந்தம், வேதாந்தம் என்று சொல்லிக்கொண்டு நம் நாட்டில் புத்திசாலிகளாயிருந்தவர் ஒரு ஆயிர வருஷ காலமாக விக்ஞானத்தையே மறந்து, மோட்சம் என்றால் என்ன என்று பலவாறாக விசாரம் செய்தார்கள். ஒரு முடிவுக்கும் இன்னும் வந்ததாகத் தெரியவில்லை. ஒரு வேதாந்தி சொன்னதை இன்னொரு வேதாந்தி சுத்தத் தப்பு என்கிறார். இறந்து போனவர் ஒருவரும் திரும்பிவந்து இறந்த பிறகு ஆத்மாவுக்கு என்னவாகிறது என்று தெரிவிக்கவுமில்லை. விக்ஞானத்தில் நாம் மேல் நாட்டாருக்கு எவ்வளவோ கீழ்ப்பட்டு நிற்கிறோம்.

சுதரிசனம்: நம் தேசத்திலும் வானசாஸ்திரத்தில் நிபுணர்கள் இருந்திருக்கிறார்

கள். கிரகங்களின் சாரத்தையும் கிரக ணங்கள் முதலிய விஷயங்களேயும் கணக்குப் பண்ணி முன்னுலேயே பஞ் சாங்கங்களில் சொல்லவில்லேயா?

ஜாபாலி: சரிதான் ஐயா, ஆனுல் இதெல் லாம் ஆயிரம் வருஷத்துக்கு முன்னி ருந்தவர்கள் கண்டது. இந்த வேதாந் தப் பித்து வந்த பிற்பாடு, விக்ஞான ஆராய்ச்சியே நின்றுவிட்டது. நம் தேசத் தார் அப்போது மேல் நாட்டாருக்கு ஜ்யோதிஸ் சாஸ்திரம், வைத்தியம், கணி தம், முதலிய துறைகளில் எவ்வ ளவோ மேம்பட்டு நின்றனர், இப்பொ ழுதோ நமக்கும் ஆபிரிக்காவிலுள்ள நீக் ரோவுக்கும் வித்தியாசமில்லே. இன் னும் நவக்கிரகங்களென்றே சொல்லிக் கொண்டிருக்கிருேம். யூரேனஸ், நெப்ட் யூன் என்ற கிரகங்கள் மேல்நாட்டார் கண்டுள்ளனர். டெலஸ்கோப் நிர்மித்த வர் அவரே. டெலஸ்கோப்பில்லாமல் வான சாஸ்திரத்தில் என்ன பயிற்சி செய்ய முடியும்?

சுதரிசனம்: டெலஸ்கோப் இல்லாமலே பல விஷயங்களேக் கண்களின் உதவி யைக் கொண்டே நம் முன்ஞேர் ஆராய்ச்சி செய்தார்களல்லவா?

ஜாபாலி: ஆயிரம் வருஷத்துக்கு முன் தங் கள் புத்திக் கூர்மையை உபயோகித்து, உலகத்தின் தத்துவத்தை அறிந்தனர். பிறகு வேதாந்தம் பேசுவதோடு நின்று விட்டது. பௌதிகம், ரஸாயனம், பிராணி சாஸ்திரம், தாவரம் இத்துறை களில் நம்மவர் என்ன ஐயா செய்திருக் கிருர்கள்? யூரேனஸ் என்ற கிரகம் கண்டுபிடித்தபின்னர், அதன் சாரத் தைப்பற்றி மேல் நாட்டு நிபுணர்கள் கணக்கெடுத்து, அந்தக் கிரகம் எப் போதெப்போது எங்கெங்கே வானத் தில் இருக்கவேண்டும் என்று தீர்மா னித்தார்கள். ஆனுல் இவர்கள் கணக்குக் கொஞ்சம் தவறின இடத் தில் யூரேனஸ் நின்றது. ஏன் இப்படி என்று ஆராய்ச்சி உண்டாயிற்று. வேறு ஏதோ ஒரு கிரகம் அண் டையிலிருந்து அதை ஆகர்ஷிக்கி றது, அதனுல்தான் நம் கணக்குக்கு மாறிக்காண்கிறது என்று இரண்டு மேல்நாட்டுக் கணித நிபுணர்கள் நிச்ச யம் செய்தனர். பிறகு அந்தக் கிரகம் எங்கே இருக்கவேண்டும், எவ்வளவு பரி மாணம் கொண்டது என்றெல்லாம் காகிதத்திலே கணக்குப் போட்டுச் சொன்ஞர்கள். பிற்பாடு அவர்கள் முந்திச் சொன்னபடியே இந்த நெப்ட் யூன் என்ற புதுக்கிரகம் அவர்கள் குறிப் பிட்ட இடத்திலேயே வானத்தில் டெலஸ்கோப்பைக்கொண்டு பார்க்கப் பட்டது. இவர்கள் அல்லவா மேதாவி கள், மகரிஷிகள்.

சுதரிசனம்: மைக்ராஸ் கோப்பை வைத் துக்கொண்டு புதிசு புதிசான எத்த ஐேயோ கிருமிகளேயும் அவைகளால் நமக்கு உண்டாகும் நன்மை தீமைகளே யும் பார்த்துச் சொல்லுகிருர்கள். தாவ ரங்களின் தத்துவத்தையும் அவைகள் எப்படி வளர்கின்றன எப்படிப் பூக்கின் றன, காய்க்கின்றன, ஏன் அவரைபோட் டால் துவரை முளேத்துக் காய்ப்ப தில்லே, புதிதான தானியங்களேயோ, கனிவர்க்கங்களேயோ உண்டாக்க முடி யுமா? என்றெல்லாம் ஆராய்ச்சி செய்கி ருர்கள். வெள்ளேக்காரன் கெட்டிக்கா ரன் தான் ஐயா.

வியாஸாசார்: அதென்ன அப்படிச் சொல்லிவிட்டீர்கள்? கர்ப்போபரிஷத் என்று ஒரு உபரிஷத் இருக்கிறது. அதில் கருப்பம் ஆரம்பித்தது முதல் ஒன்பது மாதம் வரை கருவுக்கு ஏற் படும் மாறுதல்களேயும், அவயவங்கள் ஒன்றுென்ருக உண்டாகி வளர்வதை யும் விஸ்தாரமாக வர்ணித்திருக்கிறது. மைக்ராஸ்கோப் இல்லாமலே இவ்வ ளவு விஷயங்கள் நம்மவர் அறிந்தது ஆச்சரியம். நம் வைத்திய சாஸ்திரம் என்ன சாமான்யப்பட்டதா? சரகர்— சுச்ருதர் எழுதிய கிரந்தங்கள் இன்றைக் கும் கொண்டாடப்படுகின்றன. சத் திரம் வைத்துச் சிகித்ஸை செய்வதற்கு நூற்றுக்கு மேலான ஆயுதங்கள் இருந் ததாகத் தெரிகிறது.

ஜாபாலி: இருந்தது என்று பழங்கதை பேசுவதில் என்ன பிரயோஜனம்? அந்த ஆயுதங்கள் எங்கே போயின? ஏன் பிந்தி இருக்கிறவர்கள் இவை களேக் கைவிட்டு, மேலும் மேலும் மோட்ச சாஸ்திரங்களுக்கு வியாக்கி

யானம், வியாக்கியனத்துக்கு வியாக்கியானம் இப்படி எழுதத் தொடங்கினுர்கள்? அதனுல் நம் தேசத்துக்கு ஐசுவரியத்தில் எவ்வளவு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்று யோசித்துப் பாருங்கள்.

குருதாஸ்: அந்த நாளில் நம் ராஜாக்கள் கலைகளையும் சாஸ்திரங்களையும் பயிலும் வித்துவான்களுக்குப் பணம் கொடுத்து ஆதரித்தார்கள். பிறகு மகம்மதியர் ஆதிக்கம் வந்த பிறகு ஆதரவு இல்லாமல் போயிற்று.

ஜாபாலி: காரணம் ஏதோ பல இருக்கலாம். இப்போதுதான் வெள்ளைக்காரன் அரசியல் ஆரம்பித்து காலேஜ்களில் விஞ்ஞானப் படிப்புக்கு மதிப்பு அளித்த பிறகு, சிலர் தங்கள் மேதையை ஒருவாறு பௌதிகம், ரஸாயனம் முதலிய சாஸ்திரங்களில் காண்பித்திருக்கிறுர்கள். ஸீ. வி. ராமன், கே. எஸ். கிருஷ்ணன், டீ. எஸ். வேங்கடராமன், பாட்நகர் முதலிய மகான்கள் நம் தேசத்துக்குக் கௌரவம் சம்பாதித்துக் கொடுத்திருக்கிறுர்கள்.

சுதரிசனம்: ஏன் கும்பகோணம் ராமானுஜத்தை விட்டுவிட்டீர்கள்? கணிதத்தில் அவர் நிகரற்றவர் என்று சொல்லுகிறுர்களே.

ஜாபாலி: அவருக்குத்தான் ஐயா மகரிஷி என்ற பெயர் தகும். கணிதத்தின் தத்துவங்கள் அவர் மனத்தில் தாமாகவே உதிக்குமாம். உலகத்தில் பிரசித்தி பெற்ற கணித நிபுணர்கள்கூடச் சுலபமாக அவர் வெளியிட்ட விஷயங்களை அறிய முடியாதாம். அவர் சரிதையும் ஒரு ரிஷியின் சரிதை. தத்துவத்தை அறிந்து வெளியிடுவதே அவர் உண்ணும் சோறு, குடிக்கும் நீர் எனலாம். அங்கேயும் பாருங்கள். வெள்ளைக்காரர்தான் அவர் மகிமையை முதலில் அறிந்தவர். சீமைக்கு அழைத்துச் சென்று அவர் கௌரவத்தை உலகத்துக்கு வெளிப்படுத்தினவர் ப்ரொபஸர் ஹார்டி முதலிய வெள்ளைக்காரர்தான். ராமானுஜம் அற்பாயுளில் இறந்தது இந்தியாவின் துரதிருஷ்டம் என்றே சொல்லவேணும்.

வியாஸாசார்: ஸயன்ஸ், ஸயன்ஸ் என்று ரொம்ப, ரொம்ப சிலாகித்துப் பேசுகிறீர்களே. அந்த ஸயன்ஸினுல் ஏற்பட்டிருக்கும் ஆபத்தும் நாசமும் மகாகோரம். ஒரு அணுகுண்டு விழுந்து ஐந்து நிமிஷத்திற்குள் பத்து லக்ஷம் ஜனத்தைச் சாம்பலாக்கிவிட்டது. இன்னும் எங்கே அணுகுண்டு எப்போது விழுமோ என்று மக்கள் மதிகலங்கி நடுங்கி நிற்கிறுர்கள். விஞ்ஞானம் இல்லாமலிருந்தால் எவ்வளவோ தேவலை என்று தோன்றுகிறது.

ஜாபாலி: ஸயன்ஸினுல் உண்டான சிற்சில கெடுதலை மாத்திரம் வர்ணிக்கிறீரே. ஸயன்ஸின் உதவியால் ஜப்பான், அமெரிக்கா முதலிய தேசங்களில் பூமி ஒரு ஏகராவுக்கு நம் நாட்டிற்குமேல் மூன்று பங்கு நெல் விளையும்படி செய்கிறுர்கள். இலெக்டிரிக் கரெண்டைக் கொண்டு தெருக்களில் விளக்குகள் எங்கும் பிரகாசிக்கும்படி செய்திருக்கிறுர்கள். கரெண்டினுல் ஆலைகளில் யந்திரங்கள் ஓடுகின்றன—துணி நெய்கிறுர்கள். நெல் குத்துகிறுர்கள். சர்க்கரை எண்ணெய், இன்னும் என்னென்னவோ உற்பத்தி செய்யப்படுகின்றன. அதையெல்லாம் மறந்து அணுகுண்டு பண்ணின சேதத்தை மாத்திரம் சொல்லுகிறீரே. நெருப்பு மிகவும் உபயோகமான வஸ்துதான். அதைக்கொண்டு சோறு சமைக்கலாம்; நீரை நீராவியாக்கி ரெயில் ஓடும்படி செய்யலாம்; அடுத்த வீட்டுக்காரன் வைக்கோல் போரைப் பத்து நிமிஷத்தில் சாம்பலாக்கலாம். அதனுல் 'நெருப்பு கெட்டது, வேண்டவே வேண்டாம்' என்று யார் சொல்லுவார்? உபயோகிக்கிறவன் நல்லவனுயிருந்தால் நன்மை பெருகும், கெட்டவனுயிருந்தால் கேடு பெருகும். இலெக்டிரிக் கரெண்டை வெறுங்கையால் தொட்டால் ஆள் பைசலாவான். அதற்காக, கரெண்டே வேண்டாம் என்று சொல்வது மூடத்தனமல்லவா?

வியாஸாசார்: இந்த ஜன்மம் அற்ப சுகமும், மிகுந்த துக்கமும் கொண்டது. இதை விட்டு விலகி முக்தியடைய மார்க்கம் தேடுவதே நற்புத்தியாகும் என்று நம்மவர் எண்ணினுர்கள்.

சுதரிசனம்: ஆனல் இருக்கிறவரையில் எவ்வளவு சுகமாய் இருக்கமுடியுமோ, அப்படி இருக்கவேண்டாமா? நெல்லில் உமி இருக்கிறது, ஆனதால் அது எனக்கு வேண்டாம் என்று ஒருவன் சொல்லலாமா? உமியைக் குத்தித் தள்ளிவிட்டு அரிசியை எடுத்துக்கொள்வதுதான் புத்திசாலித்தனம்.

ஜாபாலி: மைகேல் பாரடே உங்களைப் போலப் பெரிய ஆஸ்திகர். கிறிஸ்தவ மதத்தில் அவருக்கு உண்மையான நம்பிக்கை. இந்த ஜன்மத்துக்குப் பிறகு மோட்சமோ நரகமோ சாசுவதமாக ஏற்படும் என்று உறுதியாக நம்பினர். அதனல் "ஏன் ஸயன்ஸில் ஆராய்ச்சி செய்ய வேண்டும்? இதனல் உண்டாகும் நலன் அற்ப காலத்துக்குத் தான்," என்று அவர் எண்ணவில்லை. அவர் இலெக்ட்ரிக் கரெண்ட் விஷயமாகச் செய்த ஆராய்ச்சியினல்தான் இப்போது இலெக்ட்ரிக் வெளிச்சம், விசிறி, இலெக்ட்ரிக் மோட்டார், டிராம் வண்டி, ஆலையந்திரம், இப்படிப்பட்ட பல ஸாதனங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. மூக்கைப் பிடித்துக்கொண்டு மோட்சம், மோட்சம் என்று சொல்லிக்கொண்டிருந்தால் மாத்திரம் போதுமா? கிறிஸ்தவர்களும் மோட்சம் வேண்டுகிறர்கள். ஆனல் அதற்கு வேறுவிதமாகப் பாடுபடுகிறர்கள். பாதிரிமார் மற்றக் கிறிஸ்தவரிடம் பொருள் யாசித்துத் திரட்டி, அதைக்கொண்டு பள்ளிக்கூடம், தரும ஆஸ்பத்திரி, தொழிற் கல்விச்சாலை முதலிய ஏற்படுத்தி ஏழைகளை முன்னுக்குக் கொண்டுவருகிறர்கள்.

சுதரிசனம்: ஆமாம் ஐயா, அவர்கள் செய்யும் தொண்டு ஆச்சர்யமாக இருக்கிறது. பாளையம்பட்டியில் குஷ்டரோகிகளுக்கு ஒரு ஆஸ்பத்திரி வைத்திருக்கிறர்கள். வியாதிக்காரரில் ஏழைகள் தங்குவதற்கு வசதி, மூன்று வேளை சோறு, தேகத்துக்கு வைத்தியம் இவ்வளவும் இலவசமாகக் கொடுக்கிறர்கள். கிறிஸ்தவக் கன்னியா மடத்திலுள்ள தாயாரம்மா இருவர் ரோகிகளுக்குத் தங்கள் தங்கள் கையினலேயே மருந்து போடுகின்றனர். அவர்கள் வெள்ளைக்காரர். நாம் கறுப்பு மனுஷர். இருந்தாலும் கொஞ்சம்கூட வெறுப்புக் காட்டாமல் ரோகிகளைத் தொட்டுச் சிகிச்சை செய்கிறர்கள்.

ஜாபாலி: நான் உத்தியோகத்தில் இருக்கும்போது போலீஸ்காரர் ஒரு நாள் ஒரு அநாதைக் குழந்தையை என் முன் கொண்டு வந்தார். தாயுமில்லை, தகப்பனுமில்லை—நாதி ஒன்றுமில்லை. என்ன செய்வது என்று யோசித்தேன். பிறகு கிறிஸ்தவர் நடத்திவரும் ஒரு அநாதை ஆசிரமத்திற்குக்கொண்டு போனேன். அங்கிருந்த ஒரு தாயாரம்மா உடனே சந்தோஷத்துடன் அந்தக் குழந்தையை வாங்கி மார்பில் அணைத்துக்கொண்டு, நாங்கள் வளர்க்கிறேம். கவலைப்படவேண்டாம் என்றார். அப்படியே செவ்வையாய் வளர்த்து, படிக்கவைத்துத் தொழிலும் பயிலும்படி செய்வார்கள். இதல்லவா மோட்சத்துக்குப் போகும் மார்க்கம்?

குருதாஸ்: நம் மடங்களுள் சில மடங்களுக்கு ஏராளமான சொத்து இருக்கிறதே. ஏன் அங்குள்ள சன்யாசிகள், சாமியார்கள் இப்பேர்ப்பட்ட தொண்டு செய்யக்கூடாது?

வியாஸாசார்: நம் மடங்களின் சொத்து மதப்பிரசாரத்துக்குக் கொடுக்கப்பட்டது. அதைப் பள்ளிக்கூடம் ஆஸ்பத்திரிக்காக எப்படிச் செலவு செய்யலாம்?

ஜாபாலி: கிறிஸ்தவர் மதப்பிரசாரம் செய்யவில்லையா என்ன? அதனேடு இவ்வித ஸமூகஸேவையும் நடத்துகின்றனர். இதைவிடப் பெரிய தருமம் வேறு என்ன இருக்கிறது? மதத்துக்கு முக்கியமான அம்சம் ஜீவகாருண்யம்தானே. இப்படி நம் மடத்தினர் தொண்டு செய்திருந்தால் சர்க்கார் அவர்கள் சொத்து விநியோகத்தைப்பற்றிச் சட்டம் கொண்டுவரத் துணிவார்களா? இந்தப் புது மசோதா இந்து மடங்களுக்கு மாத்திரம்தான்; கிறிஸ்தவ மடங்களைப்பற்றி மசோதா ஒருவரும் கொண்டுவரவில்லை. மசோதா வந்தபிறகு பள்ளிக்கூடம் வைக்கிறேன், வாசகசாலைக்குப் பணந் தருகிறேன் என்று முன் வருகிறர்கள். முன்னரே தருமச் செலவு செய்திருந்தால் இந்தச் சங்கடம் வந்திராது. நாயுடு!—முன்னிருட்டு—வீட்டுக்குப் போவோம்—உம் இலெக்டிரிக் டார்ச்சைப் பிடியும்—அந்த டார்ச்கூட வெள்ளைக்காரன் செய்து கொடுத்ததுதான் ஐயா!

# லண்டன் கடிதம்

### லீலா கோபாலன்

இம் நாட்டு மக்கள் அனைவரும் தீபாவளியை நன்கு கொண்டாடி இருப்பீர்கள் என்று நினைக்கிறேன். லண்டனில் யாராவது தீபாவளிபோன்ற நம் பண்டிகைகளைக் கொண்டாடுவது வழக்கமாஎன்று பலநண்பர்கள் என்னைக்கேட்டு எழுதி இருக்கிறார்கள். இங்கு நம் பழக்க வழக்கங்களையும் நம் ஆசார அனுஷ்டானங்களையும் கடைப்பிடிப்பதில் ஒரு கஷ்டமும் இல்லை. இங்கும் இவைகளைக் கைக்கொண்டு வசிக்கும் பல மக்கள், அதாவது நம் நாட்டு மக்கள்தான் இருக்கின்றனர். ஆனால் என்னைப்போல் தாற்காலிகமாக வாசம் செய்பவர் அநேகமாக நம் பண்டிகைகளைக் கொண்டாடுவதில்லை. காரணம் ரொம்ப அல்பம்தான். நம் ஜனங்களிடையே வசித்துக்கொண்டு இருந்தால் எதற்கும் நமக்கு ஒரு உற்சாகம் உண்டு. தனியாகத் தாய்நாட்டைவிட்டுப் பலமைல்களுக்கு அப்பால் வாசம் செய்யும் எங்களுக்கு ஒரு குஷி கிடையாது. தீபாவளி தினத்தில் என் உறவினர்களும் என் தாய்நாட்டு மக்களும் எவ்வாறு குதூகலத்துடன் இப்புதுத் தினத்தைக் கழித்துக் கொண்டாடி இருப்பார்கள் என்பதை நினைத்துநினைத்து எங்களையே சாந்தப்படுத்திக் கொள்ளவேண்டி இருந்தது. மேலும் நடுக்கும் குளிரில் விடியற்காலை 5 மணிக்கு எழுந்து மங்கள ஸ்னானம் செய்வது எவ்வளவு கஷ்டம் தெரியுமா? தினம் தோறுமே ஒருமுறை இந்தக்குளிரில்பொங்கும் வெந்நீரில் குளிபபதுகூடக் கஷ்டம் என்பதை நான் உங்களுக்குச்சொல்லாமல் இருக்க முடியாது. எனினும் தீபாவளி கொண்டாடிய மக்கள் இங்கும் அநேகர் இருக்கின்றனர். என்னைப் போன்றவரும் இருக்கின்றனர்.

தீபாவளியைப் பற்றி உங்களுக்கு எழுதும்போது லண்டனில் கிறிஸ்மஸ் பண்டிகையின் அமர்க்களத்தைப் பற்றி உங்களுக்கு எழுதாமல் இருக்கமுடியாது. போன மாதக் கடைசியிலிருந்தே கடைகள் எல்லாம் விசேஷ அலங்காரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. புதுப்புது விதமான ஆடைகள், புதுவிதமான ஆபரணங்கள். ஒவ்வொரு பெரிய கடை வீதிகளிலும் கூட்டம் சொல்லிமுடியாது. வீதிகளில் செல்லும் பஸ் வண்டிகளும், மோட்டார்களும் மெள்ள மெள்ள ஊர்ந்துசெல்கின்றன. காரணம் ஜனக் கூட்டம்தான். குழந்தைகள், பெரியவர்கள் எல்லோர் பாடும் கொண்டாட்டம்தான். சாப்பாட்டு விஷயத்தில் இந்த டிசம்பர் மாதம் மட்டும் எங்களுக்கு எல்லாம் சர்க்கரை, வெண்ணெய் இன்னம் சமையல் செய்யும் Cooking Fats என்னும் எண்ணெய் வகைகள் எல்லாம் கிறிஸ்மஸ் பண்டிகைக்காக ரேஷன் கூட்டிக்கொடுக்கப்படுகின்றன. ஏன் மிட்டாய் ரேஷன்கூட அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது.

நம் நாட்டுத் தீபாவளிப் பண்டிகையும் கிறிஸ்மஸ் பண்டிகையும் கிட்டத்தட்ட ஒன்றுதான். ஆனால் பழக்கவழக்க மாறுதல்கள் அநேகம் உண்டு. நம் குடும்பத்தில் பொதுவாக ஒரு புதிய உடை வாங்கி எல்லோரும் உடுத்தி வயிறார உண்டு களிப்போம். ஆனால் இங்கே கிறிஸ்மஸ் பண்டிகைக்காக ஒவ்வொரு குடும்பத்திலும் அநேக வெகுமதிகள் கிடைக்கும். அதாவது தாயார் தகப்பனருக்கு ஒன்று, பிள்ளைக்கு ஒன்று, பெண்ணுக்கு ஒன்று, இன்னம் மருமகன் இருந்தால் அவனுக்கு ஒன்று என்றெல்லாம் வெகுமதி தயார் செய்வாள். அதேவிதம் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் மற்றவருக்கு ஏதாவது வாங்கி வருவார்கள். ஏது பணம் நிறைய வேண்டும் போல் இருக்கிறதே என்று யோசிக்கிறீர்கள், அல்லவா? வாஸ்தவம்தான். பண்டிகை கொண்டாடாத எங்களுக்கே எங்கள் நண்பர்களுக்காக வெகுமதிகளும் கிறிஸ்மஸ் பத்திரிகைகளும் தேடவேண்டி இருக்கிறது. வருஷத்திற்கு ஒருமுறை வரும் இந்த ஒரே பண்டிகைக்கு இந்நாட்டு

மக்கள் அநேகம் பவுன்கள் செலவுசெய்யத் தயங்குவதில்லை. நாமும் நம் வாழ்த்துக்களை அவர்களுக்கு அளிப்போம்.

கிறிஸ்மஸ் பண்டிகை என்றால், கூடவே பனி மழையும் வரும் என்று இந் நாட்டு ஐதீகமாம். சென்ற வருஷக் குளிர் காலத்தைவிட இவ்வருஷம் குளிர் இந்த நவம்பர் மாதத்திலேயே கடுமையாக இருக்கிறது. பத்திரிகைகள் எல்லாம் "சென்ற 8 வருஷங்களில் அதிக குளிர் உள்ள நவம்பர் மாதம் இந்தவருஷம்தான்" என்று பிரசுரித்திருந்தன. எங்கள் பாடு எப்படி இருக்குமோ தெரியவில்லை. நேரம் கிடைக்கும்பொழுதெல்லாம் கணப்பு அடியில் அடைக்கலம் புகுகின்றோம்.

சமீபத்தில் பாரிஸ் நகரத்தில் உண்டாக்கப்படும் புதுப்புது தலை அலங்கார மாதிரிகள் "கீழ் நாட்டுக்கும் மேல் நாட்டுக்கும் சம்பந்தம் நிறைய இருக்கிறது " என்பதை நன்கு நமக்குத் தெரியப் படுத்துகின்றன. **Guillaume** என்ற **Paris** நகரத் தலை அலங்கார நிபுணர் **Corkscrew coils** என்ற ஒரு மாதிரியும் **El Greco** என்ற மற்றொரு மாதிரியும் புதிதாக உண்டாக்கி இருக்கிறாராம். பெயர் என்னவோ பெரிதும் புரியாத விஷயமாய் இருக்கிறதே என்று யோசிக்கிறீர்களா? முதல் விதம் தான் நம் நாட்டு நாரதர் கொண்டை. குட்டையாக வெட்டப்பட்டிருக்கும் எல்லா முடியையும் தூக்கிவாரி ஒருங்கே உச்சியில் சேர்த்து முறுக்கி, கொண்டையாகச் சுற்றப்பட்டிருக்கிறது. இந்தக் கொண்டையைச் சுற்றி அலங்கரிக்கப் பலவித ஆபரணங்கள். நாரதர் கொண்டைக்கும் இந்தப் புது மோஸ்தருக்கும் எள்ளளவும் வித்யாசம் இல்லை. இரண்டாவது மோஸ்தர் நம் கோடாலிக் கொண்டைதான். வழ வழவென்று வாரி விடப்பட்ட கூந்தல் அழகாகப் பிடரியில் முடித்து இருக்கிறது. இதைப் பத்திரிகையில் பெரிய படங்களுடன் பிரசுரித்திருந்ததைப் பார்த்த நான் என் நண்பர்களிடம் நம் நாட்டில் இது எவ்வளவோ வருஷங்களாக இருந்து வரும் மோஸ்தர் என்றதும் அவர்கள் நம்பவில்லை. ஆனால் திடீரென்று ஒருநாள் முன்னறிவிப்பு இல்லாமல் என் வீட்டிற்கு விஜயம் செய்த இதே நண்பர்கள் அலக்ஷியமாகக் கோதி, கோடாலி முடி இடப்பட்ட என் தலை மயிரைப் பார்த்து ஆச்சரியப் பட்டுப் போனார்கள். எங்கள் நாட்டிலும் நாகரிகம் உண்டு என்பதை நாங்கள் எவ்வளவோ விளம்பரப் படுத்திச் சொன்னால் கூட அவர்கள் நம்மைப் பட்டிக்காடு என்றும் கலை உணர்ச்சி இல்லாத பாமர ஜனங்கள் என்றும் எண்ணுகின்றனர்.

இந்த மாதத்திய என் கடிதத்தில்—தற்போது பொக்கிஷ மந்திரியாக இருக்கும் **Mr Hugh Gaitskell** என்பவரின் மனைவி பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த ஒரு ரசமான பேட்டியைப்பற்றி எழுதாமல் இருக்கமுடியாது. **Sir Stafford Cripps** தம் பதவியை ராஜிநாமா செய்ததும் இந்தப் புது மந்திரி பதவியேற்றதும் உங்களுக்கெல்லாம் தெரிந்த விஷயம்தானே. ஒவ்வொரு பொக்கிஷ மந்திரிக்கும் **11, Downing** வீதியில் வசிக்க இடம் இலவசமாக அளிக்கப்படுகிறது. வீடு மிகப் பெரியது என்பதில் சந்தேகம் இல்லை. அதில் போடப்பட்டிருக்கும் மரச் சாமான்களுக்கோ குறைவில்லை. ஆனால் இந்த அழகு மாளிகையில் வசிக்க இந்த **Gait-skell** குடும்பத்திற்கு இஷ்டமில்லை. இவர்களுக்கு இரண்டு பள்ளி செல்லும் பெண்கள் இருக்கின்றனர். மேற்சொன்ன விடுதிக்குக் குடிவர மறுத்த இந்த மந்திரி குடும்பத்தைப் பேட்டிகாண நிருபர்கள் போட்டி இட்டதில் ஆச்சர்யம் என்ன?

பேட்டியின் விபரத்தைச் சொல்லுங்களேன் என்று நீங்கள் அவசரப்படுமுன்பே நான் எழுதுகிறேன்.

**நிருபர்:** நீங்கள் ஏன் **Downing** வீதிக்குக் குடி போகவில்லை.

**மந்திரி மனைவி:** எனக்கு 10,000 பவுன் விலைகொடுத்து வாங்கிய வீடு ஒன்று இருக்கிறது. அதில் 12 அறைகள் உண்டு. 7 அறைகளை நான் உபயோகப் படுத்திக்கொண்டு மற்றவைகளை வாடகைக்கு விடுகிறேன். வீட்டு வரியைக் கொடுத்துவிட்டு வருஷக் கடைசியில் சில்லறைச் செலவு வீட்டுக்காகச் செய்யும் பொழுது, என் வீட்டுச் செலவுக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கும் பணம் போதவில்லை. குழந்தைகள் படிப்பிற்கு வருஷம் 100 பவுன் செலவாகிறது.

**நிருபர்:** மந்திரியின் சம்பளம் வருஷத்திற்கு 5000 பவுன் இருக்கும்பொழுதும்

வீடு உங்களுக்கு இலவசமாகக் கிடைக்கும் போது அங்கே போக மறுப்பது ஏன்?

**மந்திரியின் மனைவி:** 5000 பவுன் வருஷ வருமானத்தில் சரிபாதி 2500 பவுன் வருமானவரியில் சென்றுவிடுகிறது. நான் அந்தப் பெரிய மாளிகையில் குடி-புகுந்தால் வேலைக்காரர் குறைந்தது 5, 6 பெயராவது வேண்டும். குழந்தை பள்ளி செல்ல மோட்டார்வண்டி வேண்டும். மேலும் அதி சீக்கிரம் புதிய தேர்தல் உண்டு என்று நாட்டு மக்கள் கர்ஜனை செய்யும்பொழுது என் கணவருக்கு மந்திரி பதவி தற்காலிகமாகத்தான் என்று தோன்றுகிறது. மேலும் எனக்கு வீட்டில் 5, 6 வேலைக்காரர்களைக் கட்டிச் சமாளிக்க முடியாது. பணப்பையை இடிப்பதோடு அல்லாமல், வேலைக்காரர் அட்டகாசம் என்னுல் தாங்கமுடியாது. மந்திரி மனைவி என்றுல் உயர்ந்த பதவி என்றும் அவளுக்குக் கஷ்ட நஷ்டங்கள் இல்லை என்றும் எண்ணுதீர்கள். வீட்டுக்கவலை, பணக்கவலை எல்லாம் எங்களுக்கும் உண்டு என்று சொல்லி முடித்தார்.

நான் இந்தப் பேட்டியைப்பற்றி எதற்கு எழுதுகிறேன் என்றுல் இந் நாட்டுப் பெண்களின் மனுேபாவமும இவர்கள் கஷ்டமும் உங்களுக்குத் தெரியவேண்டும் என்பதற்குத்தான். ஒவ்வொரு பெண்ணும் தன் தன் குடும்பத்திற்கென்று பாடுபடுவது கொஞ்சம்நஞ்சமல்ல. வாழ்க்கைத் தரமோ நம் நாட்டிற்கும் இந் நாட்டிற்கும் பத்து மடங்கு வித்யாசம். அரசாங்கம் தொழிற் கட்சி ஆதலால் வேலைக்காரர் தொல்லை அதிகம். பெண்கள் எங்கும் பெண்கள்தாம். மற்றவை அடுத்த மாதக் கடிதத்தில்.



# தெய்வம் தந்தது

மாயாவி

4

“ராம், கேசின் போக்கை நன்றாகக் கவனித்து வாருங்கள். இதுவரை நடந்தவையெல்லாம், அபூர்வமான நிகழ்ச்சிகள் தாம் என்றாலும், உலகில் நடைபெறாத அதிசயமல்ல; ஆனால், மேலே நடந்ததோ? அது, மிகவும் அதிசயமானது! எவருமே நினைத்திராதது. அதுதான் என் கேசும்கூட.

வாழ்க்கை மலராது என்ற நிலையை எய்திய ஓர் பெண்ணை, மலரச் செய்துவிட ஐயர் மணந்து வந்தார் அல்லவா? ஆனால், அவர் அவளை மலரச் செய்யவே இல்லை. மாறாக அந்த மொக்கைச் சென்ற ஒன்றரை வருட காலமாக, முன்னிலும் கேவலமான நிலையில் வாடிக் கருகத்தான் விட்டிருக்கிறார்.

நான் சொல்வது புரிகிறதா, உங்களுக்கு? அதாவது அவரையும் பத்மினியையும் ஒருநாள் கூடத் தாம்பத்திய உறவு இணைக்கவே இல்லை. ஆரம்பத்தில் சில நாட்கள் கணவன்—மனைவி முறை அவர்களிடையே பேச்சளவிலாவது இருந்தது; பம்பாய்க்கு வந்தபிறகு அதுவும் போய்விட்டது.

பத்மினி முதல்நாள் ஏமாற்றத்தைச் சமாளித்துக்கொண்டாள். “நேற்றுவரை என்னை மகளென அணைத்த கரங்கள், எப்படிச் சடுதி

யில் மனைவியாக அணைக்க முன்வரும், எல்லாம் இரண்டொரு நாட்களில் சரியாகிவிடுவார்'' எனச் சமாதானம் கற்பித்துக்கொண்டாள். ஆனால், மண முடிந்து ஊரில் தங்கியிருந்தவரையில் ஒருநாளாவது ஐயர் அவளைத் தொடவில்லை. பத்மினிக்கு ஓரளவு கலக்கம் ஏற்பட்டபோது, ஐயரின் லீவு முடிந்துவிட்டபடியால், அவர்கள் பம்பாய்க்குப் புறப்பட்டுவிட்டார்கள்.

தனிமைப் பழக்கம் கணவரின் மனதுக்குக் குளு குளுப்பை ஊட்டிவிடுமென்று பம்பாய்க்கு வந்த அன்று அவள் நினைத்தாள். ஆனால் இங்கேயும் பழைய கதைதான். முதல் நாள் போயிற்று: இரண்டாம் நாளும் சென்றது. மூன்றாம் நாள் அவளால் பொறுக்க முடியவில்லை. வெட்கத்தைவிட்டுக் கேட்டேவிட்டாள்.

''ராம், என்ன. முகத்தை 'உர்ராங்-உட்டாங்' மாதிரி வைத்துக்கொண்டிருக்கிறீர்கள்?'' டே கதையை நிறுத்திவிட்டு என்னை நோக்கி இவ்வாறு கேட்டார்.

''என் முகத்தைக் கவனியாதீர்கள் பாபூஜி; மேலே சொல்லுங்கள். கதையின் போக்கில் லயித்துவிட்ட மனது, முகத்தைத் தனது உணர்ச்சிக்கு ஒப்ப மாற்றியிருக்கிறது. அதிருக்கட்டும், நீங்கள் இதுபோன்ற ரசமான கட்டங்களில் இப்படி இடைச் செருகல்களை நுழைக்காமல், கதையைக் கூறப்போகிறீர்களா, இல்லையா?''

இந்த இடைச் செருகல்கள் அவசியம்வேண்டும், ராம்; இவை உங்களிடம் வஞ்சம் தீர்த்துக் கொள்ள நுழைக்கப்படுபவை அல்லவா?''

''என்ன?''

''ஆமாம்; நெடுங்கதைகள் எழுதும்போது நீங்களோ, உங்கள் ஆசிரியர்களோ, என்ன செய்கிறீர்கள்? இப்படித்தானே வாசகர்களை ரசமான கட்டத்திற்கு இழுத்து வந்து விட்டுவிட்டு, 'அடுத்த இதழில் சந்திப்போம்' என்று திரை அடிக்கிறீர்கள். அதற்கு இப்போது அந்த வாசகர்களின் சார்பில் நான் பழிதீர்த்துக் கொள்ளுகிறேன்.''

டே, ஏதோ பெரிய ஹாஸ்யத்தைச் சொல்லிவிட்டவர்போல, விழுந்து விழுந்து சிரித்தார். ஆனால், எனக்குச் சிரிப்பா வந்தது?

கரடு முரடான பாதையைக் கடந்து வந்துவிட்ட குழந்தை நல்ல ரஸ்தாவை எட்டிய பிறகு இடறி விழுந்ததென்றால், அந்த ரஸ்தாவோடு போகிறவர்கள் வேண்டுமானால் சிரிப்பார்கள், குழந்தையைப் பெற்றவள் சிரிப்பாளா? அவளுக்கு உடனே திகில் அல்லவா ஏற்படும்? 'நல்ல வழியில் விழுந்துவிட்டானே? இதற்கு என்ன காரணம்? அவன் களைத்து விட்டானா! கால்கள் தடுமாறி விட்டனவா?' என்ற பற்பல கவலைகள் அன்றோ அவள் மனத்தில் எழுந்து வருத்தும்?

ஆமாம்; கதாசிரியனான நான் மாத்திரமென்ன? கதையை ரசிப்பவர்கள் ஒவ்வொருவரும் இத்தகைய தாயைப் போன்றவர்கள் தான். பாத்திரங்களோடு ஒன்றுகிவிட்ட அவர்களுக்கு அவற்றில் ஒன்றி, துயரான நிலையில் நிற்கும்போது சிரிப்பு எப்படி வரும்?

ஆனால், டே கதாசிரியர் அல்ல, கதையை ரசிப்பவரும் அல்லர். அவர் ஒரு வைத்தியர். மனப்புண்ணில் சொல்லம்புகளைப் புகுத்தி ஆணிவேரைக் கிளறுவதிலே நோக்கமுடைய அவருக்கு என் மனப்பாங்கு எவ்வாறு புரியும்? அவர் சொன்னார்: ''கொஞ்சம் சிரியுங்கள் மிஸ்டர் ராம்; உங்கள் முகத்தோற்றத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை.''

''இந்த மனிதருக்குச் சமயசந்தர்ப்பமே தெரியவில்லையே?'' என்று எனக்குக் கோபம் வந்தது. சொன்னேன்: ''விளையாடியது போதும் பாபூஜி; நேரமாகிவிட்டது. சீக்கிரம் கதையைக் கூறுங்கள்.''

டே எதிர்ச்சுவரிலிருந்த கடிகாரத்தைப் பார்த்துவிட்டுச் சொன்னார்: ''சரி; நீங்கள் சிரிக்க மாட்டீர்கள், இல்லையா? இப்பொழுது பாருங்கள்; ஒரு நொடியில் உங்களை வயிறு வெடிக்கச் சிரிக்கவைக்கிறேன். கதையை எங்கே நிறுத்தினேன்?''

''அதைக்கூட மறந்துவிட்டீர்களா! விசித்திரமான பேர்வழிதான் பாபூஜி, நீங்கள். அந்தப் பெண் பத்மினி, வெட்கத்தை விட்டுக் கணவனிடம் என்னை ஏன் நீங்கள் தீண்டுவதே இல்லை என்று ஒரு நாள் கேட்டுவிட்டாள்.''

''ஆமாம், கேட்டாளல்லவா? ஐயர் உடனே அதற்குப் பதிலையும் அளித்துவிட்டார். சொன்னார்: ''நான் மகா பாதகன் அம்மா பத்மினி. உனக்கு உபகாரம் செய்வதாக நினைத்து, பெரிய அபகாரத்தைச் செய்துவிட்டேன். பத்மி, திருமண தினத்தன்று இரவு நாம் மீனாட்சி அம்மன் கோவிலுக்குப் போயிருந்தோம், அல்லவா? அப்போது ஒரு அசரீரி தோன்றியதை நீ கவனித்தாயோ இல்லையோ? ஆனால் என் செவிகளில் அது ஓங்கி விழுந்தது. செவிகளில் மாத்திரமல்ல; மனத்தில் கூட, வெண்கல மணி கல-கல வென்றொலிக்க, பூசை செய்பவர் சுந்தரேசருக்குக் கர்ப்பூர தீபம் காட்ட, நாம் பக்தி பரவசத்தில் மூழ்கி,

கின்ற தருணத்தில் எழுந்த அந்த எச்சரிக்கை —"அடே கிழவா! இரண்டு பெண்களின் வாழ்வைக் குடித்தது போதாது என்று, இந்தப் பிராயத்தில் இன்னொருத்தியை தேடத் துணிந்தாய்? இந்த அநியாயத்தை நான் பொறுக்கமாட்டேன். மூன்றாமவளை இனி மனத்தால் நினைத்தாலும், உன் உயிரை உடனே உறிஞ்சிவிடுவேன்"

டே மேலே கூறாது மீண்டும் அடக்க முடியாது சிரிக்கலானார்,

எனக்கும் சிரிப்புத்தான் வந்தது. ஆனால் சிரிக்கவில்லை! இந்தக் கலிகாலத்தில் அசரீரியாவது, ஒன்றாவது! வேடிக்கையாக அல்லவா இருக்கிறது.

டே நகைப்பு அடங்காமலே பேசினார். "என்ன இன்னுமா உங்களுக்குச் சிரிப்பு வரவில்லை, ராம்? சரி; இப்பொழுதேனும் சிரியுங்கள். ஐயர் அசரீரி வாக்கு என்று குறிப்பிட்டாரே, அது என்ன தெரியுமா? அங்கே பேயாடிக்கொண்டிருந்த பெண் ஒருத்தியிடமிருந்து வந்த வாக்குத்தான், அது?"

இப்பொழுது என்னால் சிரிக்காது இருக்க முடியவில்லை, வாய்விட்டுக் கல கலவென நகைத்தேன்.

சிரிக்கிறீர்களா, ராம்? சிரியுங்கள்; நன்றாகச் சிரியுங்கள், உங்கள் தமிழரின் மடமையை நினைத்து வயிறு வெடிக்கச் சிரியுங்கள். ஏன்? அந்தப் பெண் பத்மினிகூட அப்போது சிரிக்கத்தான் சிரித்தாளாம். "நல்ல கேலிக் கூத்து! அவள் பேய்கொண்ட பெண் அல்லவா? எங்கள் தெருக்காரி. இளைய தாரமாக ஒரு கிழவருக்கு வாழ்க்கைப்பட்டிருந்தாள். என்ன பிராரத்துவமோ, கலியாணம் ஆன உடனே, மூத்த தாரத்துக்காரி பிசாசாக அவளைப் பிடித்து ஆட்ட ஆரம்பித்தாள். ஆனால் பெண் ஆசை கொண்ட அவள் கணவரோ, அவளைப் பிறந்தகத்துக்கு அனுப்பிவிட்டு, மூன்றாந்தாரத்தைத் தேட முயன்றார். இந்தச் செய்தி எங்கும் பரவிப் பேய்கொண்ட பெண்ணின் காதுகளிலும் அடிக்கடி விழவே அவளுடைய ஆட்டம் பெரிதாகிவிட்டது. பெற்றோர் பல சிகிச்சைகள் செய்தும் பயனடையாது என்றுதான் அவளைக் கோவிலில் *'வசனம்' போட்டிருந்தார்கள். அப்பொழுதுமாத்திரமல்ல; எப்பொழுதும் அப்பெண் இதே வார்த்தைகளைக் கூறித்தான் கத்திக்கொண்டிருப்பாள். அதைக் கேட்டு விட்டா நீங்கள் இப்படிக் கூத்து அடிக்கிறீர்கள்? ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது போங்கள், உங்கள் சபல புத்தி" என்று கூறி இன்னும் அதிகமாகச் சிரித்தாள்.

ஆனால் ஐயர் அளித்த பதில் அவள் சிரிப்பை மறுகணத்தில் அழுகையாக மாற்றிவிட்டது. அவர் ஒரு சிறிய பிரசங்கமே செய்துவிட்டார்; என்னைச் சபலபுத்திக்காரன் என்றோ, மடையன் என்றோ, அல்லது வேறு எவ்விதமாக வேண்டுமானாலும் அழை, பத்மினி. ஆனால் அவ்வார்த்தைகளை மாத்திரம் பேய்கொண்ட பெண்ணிடமிருந்து வந்தனவாக என்னால் கொள்ள முடியாது, அது தெய்வவாக்கு என்ற புரளா நம்பிக்கை எனக்கு ஏற்பட்டுவிட்டது. பத்மினி. அப்பொழுது நான் என்ன மனநிலையோடு இருந்தேன்? எதற்காக உன்னை அத்தனை அவசரமாகக் கோவிலுக்கு இட்டுச் சென்றேன் என்பதை அறிந்தால், நீயும் அப்பெண்ணின் மொழிகளை, தெய்வம் அவள் வழியே விடுத்த எச்சரிக்கை என்றுதான் கூறுவாய். ஒரு வகையில் நான் சபலபுத்திக்காரன்தான் பத்மி. அந்தச் சபலந்தான் ஐம்பது வயதை எட்டிக்கொண்டிருந்த என்னை, உன்னைக் கைப்பிடிக்கத் தூண்டிற்று. என் சபல நினைவு அளவுகடந்து செல்லுவதை நீயும் உன் தந்தையும் கலியாணத்துக்குக் கட்டாயப்படுத்தியபோது நான் உணரவில்லை, சோகமே உருவாக, மணப்பெண்ணின் மகிழ்ச்சி இம்மிகூட இன்றி, மாங்கலியத்தை ஏற்று மணப் பந்தலில் என் கையைப்பற்றி நின்ற உன்னை ஒருதடவை பார்த்த பிறகுதான் நான் எத்தனை மகத்தான தவறைச் செய்துவிட்டேன் என்ற உணர்ச்சி ஏற்பட்டு என்னை உலுக்க ஆரம்பித்தது. நான் தெய்வத்தை நம்புபவன், பத்மி; எனவே அந்தத் தெய்வத்திடம் நான் இத் தவறை இயற்ற நேர்ந்த இக்கட்டை விளக்கி அதன் மன்னிப்பைப் பெற்றாலன்றி, மன ஆறுதலுடன் உன்னோடு வாழ இயலாது என்று தோன்றிற்று. அதற்காகவே அன்று உன்னையும் அழைத்துக்கொண்டு தெய்வத்திடம் வந்தேன். சுந்தரேசப்பெருமாளின் முன்னின்று, 'ஆண்டவனே, நான் பத்மினியை மணந்தது தவறா? வாழ்க்கை அறவே இருளடைந்துவிட்ட நிலையை எட்டிய அவள் என்னை வலியவந்து வேண்டினாள்; அவள் தந்தை, 'பெண்ணைக வேணும்

---

* தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு இருந்து வரும் வழக்கம் இந்த 'வசனம் கிடத்தல்.' வைத்தியத்துக்கும் மாந்திரீகத்துக்கும் மசியாத பேயபிடித்தவர்களைக் கடைசி முறையாகத் தமிழகத்தின குறிப்பிட்ட சில ஆலயங்களில் ஒன்றுககு அழைத்துச் சென்று 'இந்தப் பேய் விலகும்வரையில் இவளை அல்லது இவனை உன் பாதத்தடியிலிருந்து அகற்ற மாட்டோம்' என்ற சங்கறபத்துடன், கோவிலிலே கிடக்கச் செய்வது வழககம். இதைத் 'தவங்கிடத்தல்' என்றும் கூறுவது உண்டு. இந்த அட்டுழியம் நிறைந்த உலகில் தெய்வம் இனனும் இருக்கிறது என்பதற்குச் சான்றாக அத்தகைய பேய்கொண்டவர்களில் பெரும்பானமையோர் அவை விலகிப் பூரணகுணம் அடைந்திருக்கிறார்கள் என்பது இக் கதைக்குச் சம்பந்தமில்லாத உண்மை.

ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று வற்புறுத்தினார். அதன் நிமித்தம் அவளை நான் கைப் பிடித்தது தவறானல், சுந்தரேசா, என்னை மன்னித்துவிடும்" என்று வேண்டி முடித்தஉடனே அசரீரி போலவந்த அந்தப் பதில், பேய் கொண்டவளிடமிருந்து வந்தால் என்ன? பைத்தியத்தின் வழி வந்தால் என்ன? அது அவளைப் பற்றியதாகவே இருக்கட்டுமே, ஆயினும், அச்சந்தர்ப்பத்தில் ஆண்டவன் எனக்கு அனுப்பிய எச்சரிக்கை அன்றோ? மேலும் விஷப் பரீட்சை செய்யும் விஷயமா, இது, பத்மி? உன்னைத் தொட்டால் நான் சாவேன் என்றிருந்தால்கூட, உன் பிஞ்சுமனம் இப்படி நோகவிட்டிருக்க மாட்டேன். ஆனல் இந்தக் கிழம் கட்டிய தாலியும் அதனல் அகற்றப்பட்டுவிடும் என்ற நிலை ஏற்பட்டிருக்கும்போது, 'கெடுத்ததுதான் கெடுத்துவிட்டோம்; இன்னும் அந்த அலங்கோலத்தையும் உடனே உனக்குச் செய்துவைக்க வேண்டாம்' என்று ஒதுங்கி விடாமல், நான் வேறு என்ன செய்வது? நீயே சொல். பத்மினி, இது எனக்கு மாத்திரமல்ல, உனக்கும் ஆண்டவன் ஏற்படுத்தி விட்டிருக்கும் பெரும் சோதனை. அதை நாம் பரீட்சிக்கக் கூடாது; அதற்குப் பலியாகி விடவும் கூடாது. பொறுமையுடன் சகித்துக்கொண்டு அவரையே வேண்டுவோம். என்று அவர் மனம் இரங்கி நம்மை ஒன்று சேர அநுமதிக்கிறரோ, அன்று ஒன்று கூடுவோம். பத்மினி, என் உள்ளத்து வருத்தம் அனைத்தையும், உனக்கு விளக்கிக் கூறமுடியாது. ஆனலும், ஆசைக்கடல் கொந்தளித்த உன் இளமை பாழாக்கப் பட்டுவிட்டதே என்ற துயரம் அன்றிலிருந்து எனக்குப் பெரிய மனநோயையே ஏற்படுத்தி வீட்டது. அந்த நோயைச் சகித்து, இந்தத் தெய்வச் சோதனையிலிருந்து மீள நீதான் எனக்கு ஊக்கம் அளிக்கவேண்டும். இனி, என்னை உன் தந்தையாகவே கொள்ளவேண்டும்,"

அந்த அதிர்ஷ்டம்கெட்ட பெண் பத்மினிக்கு இதைக் கேட்டபோது வாய் அடைத்தே போய் விட்டது. கணவர் கொண்டிருக்கும் தீர்மானம் முழுவதும் மடமையானது என்பதைத் திடமாக உணர்ந்திருப்பினும், தன்னைத் தீண்டினல் இறந்து விடுவோம் என்ற பீதி அவருடைய உள்ளத்தில் வேரூன்றி விட்டதை நிதரிசனமாகக் கண்டபிறகு கணவன்-மனைவி உறவை அவளும் முழுவதும் மறந்துவிடத்தான் வேண்டியதாயிற்று.

## 5

இந்த ரீதியில் அவர்கள் வெளியுலகத்துக்குக் கணவன் மனைவியராகவும், அந்தரங்கத்தில் தந்தை-மகளாகவும் பழகி வந்தனர். ஐயர் வேறெவ்வகையிலும் அவளுக்குக்குறை வைக்கவில்லை. விதவிதமாக ஆடைகளை வாங்கிக் குவித்தார். புதுப்புது ஆபரணங்களைச் செய்து பூட்டினர். உவப்பூட்டும், சினிமா, நாடகம், கச்சேரி முதலியவற்றுக்கு அழைத்துச் சென்றார். வெளியில் உள்ளோர் "கிழவர் மனைவியைப் பூவாக வைத்துப் போஷித்து வருகிறரே" என்று போற்றினர். அவர்களுக்கு எப்படித் தெரியும்—அவர் அவளைக் கைபடாத மலராக வைத்திருக்கிறர் என்பது. பத்மினியின் குமரியுள்ளம் குமுறிக் குமுறி வழிந்தது, இந்த அந்தரங்க அவதியை அவள் யாரிடம் சொல்லி ஆற்றிக் கொள்ள முடியும்? ஆயினும், அவளால் அதை ஒரேயடியாக மனத்தினுள்ளே குமைந்து கொண்டிருக்க விட்டுவிடவும் முடியவில்லை. ஆற்றமுடியாமல், ஒரு சமயம் ஒரே ஒருவர்-தனது தந்தையிடம் அதை வெளியிட்டுவிட்டாள்; அதன் பலன்.

திடகாத்திரமாகத்தான் இருந்தார், சர்மா. முன்னைக்கு இப்பொழுது கவலையின்றி இருந்தார் என்றுகூடச் சொல்லலாம் ஆம்; அவர் தேவைகளை ஐயர் பம்பாயில் இருந்தவாறு ஊகித்தே பூர்த்தி செய்து வந்தார். மாதந் தவறினும் சர்மாவின் செலவுக்குப் பணம் வருவது தவருது, இடையிடையே இளைய பெண் சாந்திக்கு ஆடை, நகைப்போன்ற வெகுமதிகளும் வரும். அவள் இப்போது பெரியவளாகிவிட்டாள். அவள் கலியாணக் கவலை கூடச் சர்மாவுக்குப் பெரிதாக எழவில்லை, பணப் பிரச்னையைத் தீர்த்துவிட ஐயர் இருந்தபோது, ஒரு மாப்பிள்ளையைத் தேடிப் பிடிப்பதுதான, பிரமாதம்?

ஆனல், ஒரு நாள் பகலில் சர்மா வைகையில் நீராடிவிட்டு, திரும்பிக்கொண்டிருந்தபோது ரஸ்தாவோடு சென்ற மோட்டார் லாரி ஒன்று அவர்மீது மோதிக் கீழே தள்ளிவிட்டுச் சென்றது. காயம் ஒன்றும் பலமாகப் படவில்லை. வயிற்றிலும் கை கால்களிலும் கொஞ்சம் சிராய்த்து, இருந்தது; அவ்வளவுதான். ஆனல் சர்மா நீரழிவு வியாதி உடையவர். அதன் பயனக அந்த லேசான சிராய்ப்பு ஆருமல் பெருகத் தொடங்கிற்று. ரணம் முற்றி, இனிப் பிழைக்கமாட்டோம் என்ற நிலை ஏற்பட்டபோதுதான், அவர் பம்பாய்க்குத் தந்தி அனுப்பச் செய்தார். ஐயரும் பத்மினியும் அடித்துப் புரண்டு ஓடிவந்தனர்.

மரணத்தின் பிடியில் சிக்கியிருந்த தந்தையைக் கட்டிக்கொண்டு அழுது கதறினள், பத்மினி. தனது அவல வாழ்வு அனைத்தும் அந்தத் துயர நிலையிலே அவள்முன் தலைவிரித்தாடிற்று. நெடுநாட்களாகத் தேங்கிநின்ற சோகத் தேக்கத்தைத் தந்தையின் அணைப்பிலே

சர்மாவின் சகோதரர் ஒரு பதற்றப்பேர்வழி; முன் கோபக்காரர். உபாத்தியாயர் வேலை பார்த்துத் தொட்டதற்கெல்லாம், அதட்டலும், மிரட்டலும், பிரம்படிப் பிரயோகமுமாகக் காலங்கடத்தி வந்தவருக்கு, இதுபோன்ற சிக்கலான விஷயத்தைக் நளினமாகக் கையாளப் பழக்கம் எப்படி இருக்கும்? மரணச் சடங்குகள் முழுவதும் நிறைவேறும் வரையில் கூட அவரால் பொறுத்திருக்க முடியவில்லை. அதனிடையிலே ஐயரிடம் பெரிதாகச் சண்டைக்குக் கிளம்பிவிட்டார். எடுத்த எடுப்பிலே ஐயரைப் பலவாறு பழித்துப்பேசி அவருக்கு ரோசத்தை மூட்டிவிட்டார். வாக்குத் தர்க்கம் முற்றிக் கைகலக்கும் நிலைகூட ஏற்பட்டுவிடும் போலிருந்தது. உபாத்தியாயரும் அவருடைய பிள்ளைகளும் ஒரு கட்சி; ஐயர் தனி நபராக எதிர்க்கட்சி. ஆனால் ஐயரோ, இன்னும் தமது முடிவிலிருந்து துளிகூடப் பின் வாங்கவில்லை. கடைசியில் என்ன? விசேஷங்கள் முடியும் வரையில் நில்லாது, "உங்கள் முகத்திலே விழிக்கமாட்டேன்" என்று ஆவேசத்தோடு அப்பொழுதே கிளம்பிவிட்டார். பத்மினியைக் கூடத் திரும்பிப் பார்க்கவில்லை.

அவள்தான் இத்தகைய விபரீதம் பிறக்கும் என்று எதிர்பார்த்திருந்தாளா? ஓடிச்சென்று கணவனை வழிமறித்தாள். "இவர்கள் உறவை அடியோடு மறந்துவிட்டுப் பழைய நிலையில் என்னுடன் வாழப் பிரியமிருந்தால், வா; இல்லாவிட்டால், இங்கேயே இரு" என்று கூறினார் ஐயர்.

"தெய்வத்தை வேண்டுமானாலும் மறந்துவிடுகிறேன். உங்களைப் பிரிந்திருக்க முடியுமா? உங்கள் இச்சைப்படிதான் வாழ்ந்துவந்தேன். இனியும் அப்படியே வாழ்கிறேன்" என்று புறப்பட்டுவிட்டாள், அவள்.

ராம், கதையின் தொடக்கத்தில் அறிமுகப்படுத்தினேனே; அந்த வாலிபன்தான், உபாத்தியாயரின் மூத்த பிள்ளை பாஸ்கரன். அவள்தான் பத்மினி.

பாஸ்கரனுக்குப் பத்மினியிடம் அளவற்ற வாஞ்சை. கிட்டத்தட்ட சமவயதுடைய அவர்கள், வீட்டுக்குத் தலைக் குழந்தைகளாக இருந்ததால், அவ்வயதுக்கேற்ற பொறுப்புடனும் பாசத்துடனும் பழகிவந்தனர். வேறு வழியேயில்லை என்றான பிறகே பத்மினி ஐயருக்கு வாழ்க்கைப்பட்டாள் என்பதைப் பாஸ்கரன் நன்றாக அறிந்திருந்தாலும், அந்த இணைப்பு அவனுக்குத் திருப்தியை அளித்துவிடவில்லை. ரொம்பவும் கட்டாயப்படுத்தித்தான் ஐயரை அக் கலியாணத்துக்கு இசையச் செய்யவேண்டியிருந்தது என்பதை நேரிலே கண்டிருந்தான்; இருந்தாலும், ஓரளவாவது பெண்ணாசை இல்லாவிட்டால், அவர் அவளைக் கைப்பிடித்திருக்கமாட்டாரென்றும், எனவே ஒரு யுவதி சாதாரணமாக எதிர்பார்க்கும் புத்தம் புதுத் தாம்பத்திய இன்பம் பத்மினிக்குக் கிட்டாவிட்டாலும், ஐயர் தமது பெண்ணாசையை நிறைவேற்றிக்கொள்ள அவளைப் பேணிப் போற்றி வருவார் என்றும் அவன் கருதியிருந்தான். ஆனால் அதுவும் இல்லாது அவளை அவல நிலையில் நிறுத்தி வைத்திருக்கிறார் என்று அறிந்தபோது அவனால் தாளவே முடியவில்லை. ஐயரின் மடமையான முடிவை அவன் கொஞ்சங்கூட நம்பவில்லை. அவனுடைய வாலிப உள்ளம் பத்மினியை அவர் தொடாது இருந்துவந்ததற்கு முற்றிலும் வேறுபட்ட காரணம் ஒன்றையே இப்பொழுது கண்டது. ஆரம்பத்திலிருந்தே அவர் ஆண்மை அற்றவராக இருந்திருக்கவேண்டும். அதனால்தான் போலும், இரண்டு மனைவியருடன் பலகாலம் வாழ்க்கை நடத்தியும் அவருக்குச் சந்தானமே



சர்மாவின் சகோதரர் ஒரு பதற்றப்பேர்வழி; முன் கோபக்காரர். உபாத்தியாயர் வேலை பார்த்துத் தொட்டதற்கெல்லாம், அதட்டலும், மிரட்டலும், பிரம்படிப் பிரயோகமுமாகக் காலங்கடத்தி வந்தவருக்கு, இதுபோன்ற சிக் கலான விஷயத்தைக் நளினமாகக் கையாளப் பழக்கம் எப்படி இருக்கும்? மரணச் சடங்குகள் முழுவதும் நிறைவேறும் வரையில் கூட அவரால் பொறுத்திருக்க முடியவில்லை. அதனிடையிலே ஐயரிடம் பெரிதாகச் சண் டைக்குக் கிளம்பிவிட்டார். எடுத்த எடுப்பிலே ஐயரைப் பலவாறு பழித்துப்பேசி அவருக்கு ரோசத்தை மூட்டிவிட்டார். வாக்குத் தர்க்கம் முற்றிக் கைகலக்கும் நிலைகூட ஏற்பட்டுவிடும் போலிருந்தது. உபாத்தியாயரும் அவருடைய பிள்ளைகளும் ஒரு கட்சி; ஐயர் தனி நபராக எதிர்க்கட்சி. ஆனால் ஐயரோ, இன்னும் தமது முடிவிலிருந்து துளிகூடப் பின் வாங்கவில்லை. கடைசியில் என்ன? விசேஷங்கள் முடியும் வரையில் நில்லாது, "உங்கள் முகத்திலே விழிக்கமாட்டேன்" என்று ஆவேசத்தோடு அப்பொழுதே கிளம்பிவிட்டார். பத்மினியைக் கூடத் திரும்பிப் பார்க்கவில்லை.

அவள்தான் இத்தகைய விபரீதம் பிறக்கும் என்று எதிர்பார்த்திருந்தாளா? ஓடிச்சென்று கணவனை வழிமறித்தாள். "இவர்கள் உறவை அடியோடு மறந்துவிட்டுப் பழைய நிலையில் என்னுடன் வாழப் பிரியமிருந்தால், வா; இல்லாவிட்டால், இங்கேயே இரு" என்று கூறினார் ஐயர்.

"தெய்வத்தை வேண்டுமானாலும் மறந்துவிடு கிறேன். உங்களைப் பிரிந்திருக்க முடியுமா? உங்கள் இச்சைப்படிதான் வாழ்ந்துவந் தேன். இனியும் அப்படியே வாழ்கிறேன்" என்று புறப்பட்டுவிட்டாள், அவள்.

ராம், கதையின் தொடக்கத்தில் அறிமுகப் படுத்தினேனே; அந்த வாலிபன்தான், உபாத் தியாயரின் மூத்த பிள்ளை பாஸ்கரன். அவள் தான் பத்மினி.

பாஸ்கரனுக்குப் பத்மினியிடம் அளவற்ற வாஞ்சை. கிட்டத்தட்ட சமவயதுடைய அவர் கள், வீட்டுக்குத் தலைக் குழந்தைகளாக இருந்த தால், அவ்வயதுக்கேற்ற பொறுப்புடனும் பாசத்துடனும் பழகிவந்தனர். வேறு வழியே யில்லை என்றான பிறகே பத்மினி ஐயருக்கு வாழ்க்கைப்பட்டாள் என்பதைப் பாஸ்கரன் நன்றாக அறிந்திருந்தாலும், அந்த இணைப்பு அவனுக்குத் திருப்தியை அளித்துவிடவில்லை. ரொம்பவும் கட்டாயப்படுத்தித்தான் ஐயரை அக் கலியாணத்துக்கு இசையச் செய்யவேண்டி யிருந்தது என்பதை நேரிலே கண்டிருந்தான்; இருந்தாலும், ஓரளவாவது பெண்ணாசை இல்லாவிட்டால், அவர் அவளைக் கைப்பிடித் திருக்கமாட்டாரென்றும், எனவே ஒரு யுவதி சாதாரணமாக எதிர்பார்க்கும் புத்தம் புதுத் தாம்பத்திய இன்பம் பத்மினிக்குக் கிட்டாவிட் டாலும், ஐயர் தமது பெண்ணாசையை நிறை வேற்றிக்கொள்ள அவளைப் பேணிப் போற்றி வருவார் என்றும் அவன் கருதியிருந்தான். ஆனால் அதுவும் இல்லாது அவளை அவல நிலை யில் நிறுத்தி வைத்திருக்கிறார் என்று அறிந்த போது அவனால் தாளவே முடியவில்லை. ஐய ரின் மடமையான முடிவை அவன் கொஞ்சங் கூட நம்பவில்லை. அவனுடைய வாலிப உள் ளம் பத்மினியை அவர் தொடாது இருந்து வந் ததற்கு முற்றிலும் வேறுபட்ட காரணம் ஒன் றையே இப்பொழுது கண்டது. ஆரம்பத்தி லிருந்தே அவர் ஆண்மை அற்றவராக இருந்திருக்கவேண்டும். அதனால்தான் போலும், இரண்டு மனைவியருடன் பலகாலம் வாழ்க்கை நடத்தியும் அவருக்குச் சந்தானமே



ஏற்படவில்லை. ஒருகால் முன் மனைவியர் இறந்ததற்கு, இல்லறத்தில் அடைந்த இந்த ஏமாற்றமே காரணமாக இருந்திருக்கலாம்.

அப்படியிருந்தால் அவர் எதற்காகப் பத்மினியை மணக்கச் சம்மதிக்க வேண்டும்?

பாஸ்கரன் ஆதாரமின்றி மேற்கண்ட முடிவை எட்டிவிடவில்லை. தன் வயதுடைய வாலிபர்களைப் போன்று, அவனும் ஆண்-பெண் உறவைப்பற்றிய பல நுட்பங்களைப் புத்தக வாயிலாக அறிந்துகொண்டிருந்தான். அவ்வாறு அறிந்த விஷயங்களில் ஒன்று, ஆண்மை அற்றவனுக்கும் பெண்ணாசை உண்டு என்பது.

"இல்லறத்தைப் பூர்த்திசெய்யத் திறமை அற்றவனுக்குத்தான் தணியாத பருவ வேட்கை முதுமை வரையில் நீடித்திருக்கும்; தற்குறிப் பேர்வழிக்குப் புத்தகத்தால் பயனில்லைதான். இருந்தாலும் தான் தற்குறி யென்பதைப் பிறர் அறியாதிருக்கவேண்டி அவன் புத்தகத்தையோ பத்திரிகையையோ கண்டால் தாவிவந்து எடுத்துக்கொள்ளுகிறான். இதனால், பிறர் முன்னிலையில் கல்வி அறிவுள்ளவனாகப் பாவனை செய்துவிடுவதோடு, தானும் ஓரளவு திருப்தியை அடைகிறான், ஆம், அவன் எழுத்தைத்தான் புரிந்துகொள்ள முடியாதேதவிர, அதிலுள்ள சித்திரங்களைக் கண்டுமா ஆனந்தப்பட முடியாது?......"

இவ்வாறு அவன், ஒரு புத்தகத்தில் படித்திருந்தான். ஆகவே, இந்த வயதில் பத்மினியைக் கைப்பிடிக்க இசைந்தபோது அவளைப் பொம்மை மனைவியாக்கிவைக்கவேண்டும் என்பதை ஐயர் நன்கு உணர்ந்தே செய்திருக்கிறார் என்று அவன் முடிவுறுத்திவிட்டான். இந்த முடிவு ஏற்பட்ட பிறகு அவனுக்குக் கோபம் வரக் கேட்பானேன்? அந்தக் கோபத்தை அவன் அன்று ஐயரிடம் வசைமொழிகளாகக் கொட்டித் தீர்த்து, அவருடைய நிரந்தர வெறுப்புக்குப் பாத்திரமாகிவிட்டான்.



"பாவம்! பத்மினிக்கு இல்லற இன்பமே கிடையாதா? அவள் இப்படியே மடியவேண்டியதுதானா?" இதுதான் இப்பொழுது அவன் நெடுஞ் சிந்தனை ஆயிற்று. ஐயர் சண்டையிட்டுக் கொண்டு பம்பாய்க்குச் சென்றுவிட்டாலும், எவ்வழியிலாவது அவருக்கு ஆண்மை பிறக்கச்செய்து பத்மினிக்கு விடிவு ஏற்படுத்திவிட முடியாதா என்று துழாவலானான். பல வைத்தியர்களை இவ்விஷயமாக விசாரித்தான். ஒருவரேனும் நம்பிக்கையூட்டும் பதிலளிக்கவில்லை. இறுதியில் ஒரே ஒரு டாக்டர் மாத்திரம், பம்பாயில் பிரபல மேல்நாட்டு 'ஸ்பெஷலிஸ்டு' ஒருவர் இருப்பதாகவும் அவர் குரங்கின் ஈரலை மனிதருக்கு ஒட்டி, சிகிச்சை செய்வதில் வல்லவர் என்றும், அந்தச் சிகிச்சை பெரும்பாலும் இழந்த ஆண்மையை ஐயருக்குத் திருப்பித் தந்துவிடலாமென்றும் அறிவித்தார்.

பாஸ்கரன் உடனே பம்பாய்க்குப் புறப்பட்டு வந்தான். ஐயர் வீட்டில் இல்லாத சமயத்தில் பத்மினியைச் சந்தித்தான். "ஐயோ, இங்கே எதற்காக வந்தாய், அண்ணா? அவருக்கு உன்மீது இருக்கும் ஆத்திரத்துக்கு நாம் சந்தித்தது தெரிந்தால், என்னை அடித்துத் துரத்தினாலும் துரத்திவிடுவாரே" என்று பதறினாள், பத்மினி.

பாஸ்கரன் தான் வந்த காரியத்தைச் சொன்னான்.

"உனக்குப் பைத்தியமா அண்ணா? அவருக்கு அப்படி ஒரு குறையும் இல்லை; சபலநினைவும், பீதியும் அல்லவா, அப்படி என்னைப் புறக்கணிக்க வைத்திருக்கிறது" என்றாள், அவள்.

ஆனால் அதை அவன் நம்பத் தயாராயில்லை. "நீ எப்படியாவது அவரை ஒரு தடவை அந்த ஷ்பெஷலிஸ்டிடம் பரிசோதனைக்குப் போகச் சொல்லேன்" என்றான்.

பத்மினிக்கும் ஒரு கால் அவன் ஊகம் சரியாக இருக்கலாமோ என்ற ஐயம் ஏற்பட்டது. அவள் ஐயர் உற்சாகமாக இருக்கும் சமயம் பார்த்து மதுரையில் இப்படி ஒரு வதந்தி உலாவுவதாகச் சமீபத்தில் ஊர் சென்று திரும்பிய மாமி ஒருத்தி கூறினாள் எனவும், அப்படியிருந்தால், அதைக் குணப்படுத்திவிடும் ஸ்பெஷலிஸ்டு ஒருவர் பம்பாயிலே இருப்பதாகக் கூறி அவளுடைய விலாசமும் தந்துவிட்டுப் போயிருக்

இருள்' எனவும், மெல்ல ஒரு சரடு திரித்தாள்.

ஐயர் சிரித்தார்; உனக்கு என்மீது நம்பிக்கை இல்லை; இல்லையா? என்று கேட்டார், பிறகு.

"நான் உங்களை நம்புகிறேன், ஆனால், ஊர் வாயை அடைக்கவாவது............"

"அதை அடைக்க யாரால் ஆகும், பத்மி? டாக்டர் என்னை ஆண்மையுடையவன் என்று சொல்லிவிட்டார், அல்லது உங்கள் சந்தேகப்படி ஆண்மையற்றவனென்று சிகிச்சைசெய்து எனக்கு அதை மீண்டும் பிறக்கச் செய்துவிட்டார் என்றே வைத்துக்கொள். அப்பொழுது மாத்திரம் நமது இந்நிலையை மாற்றிக்கொண்டு விடமுடியுமா? அல்லது ஊர் வாய்தான் அடைத்து விடுமா?"

"நம் நிலையில் மாற்றம் ஏற்படவே வேண்டாம்; நீங்கள் என்னைத் தொடவும் வேண்டாம். இருந்தாலும் என்மனச் சாந்திக்காகவாவது அந்த ஸ்பெஷலிஸ்டிடம் சென்று உங்கள் உடல் நிலையைப் பரிசோதிக்கச் செய்யலாகாதா?"

தெய்வத்தின் கோபத்துக்கு அஞ்சி அவளை அண்டாதிருப்பதைப் பத்மினி உண்மையெனக் கருதவில்லை யென்றுதான் ஐயர் நினைத்தார் போலும். அவர் அவள் கோரிக்கைக்கு இணங்கி, அவளையும் கூட்டிக்கொண்டே அந்த ஸ்பெஷலிஸ்டிடம் சென்றார். அவன் அவரைச் சோதித்துவிட்டுப் 'பூரண புருஷன்' என்று கூறிவிட்டான்.

"இனியாவது என்னை நம்புகிறாயா பத்மி? எத்தகைய நிர்ப்பந்தத்தில், எவ்வளவு தூரம் நீயும் உன் தந்தையும் வற்புறுத்தியபிறகு உன்னைக் கைப்பிடிக்க இசைந்தேன் என்பது தெரிந்திருந்தும், உன் இளமை வாழ்வை வேண்டுமென்று பாழடித்து வருபவனாக என்னைத் தீர்மானித்து விட்டதைக்கண்டு மனம் வருந்துகிறேன். எனக்கு எவ்வித உடல் நோயும் இல்லை; வயதானவனே என்றாலும் திடகாத்திரம் குன்றாதவன்தான். எனக்கு ஏற்பட்டிருப்பதெல்லாம், பிழையற்ற உன்னைத் தண்டிக்க நேர்ந்திருக்கிறதேயென்ற மனநோய் தான். அந்நோயை, அதைத் தந்த ஆண்டவனால்தான் போக்கமுடியும். அதிலும் உனக்கு நம்பிக்கையில்லை யென்றால், வேறு எவரேனும் அதைப் போக்கி, என் உள்ளத்தில் ஆண்டவனிட்ட சாபம் விலகிவிட்டதென்ற உணர்ச்சியை ஊட்டமுடியும் என்று நீ சொல்வதாக இருந்தால், அவரிடமும், எத்தனை பணம் வேண்டுமானாலும் செலவு செய்து, எவ்விதச் சிகிச்சையினும் ஏற்கச் சித்தமாக இருக்கிறேன்" என்று மனைவியின் பரிதாப நிலைக்கு இரங்கிய ஐயர் சொன்னார்.

பத்மினி, இதை மறுநாள் பாஸ்கரனிடம் சொன்னாள். ஐயர் புருஷத்தன்மை குறையாதவர் என்று டாக்டரே அத்தாட்சி அளித்துவிட்டபிறகு, அவனும் அவருடைய மடமை நினைவுதான், இந்தப் புறக்கணிப்புக்கு அடிப்படையாக இருக்கவேண்டும் என்று தீர்மானிக்க வேண்டியதாயிற்று. எனவே அதைப்போக்க என்ன செய்யலாமென்று அவன் விசாரிக்கலானான். இச் சந்தர்ப்பத்தில், யாரோ ஒருவர், அவனுக்கு என் சிகிச்சை நிலையத்தைப்பற்றிக் கூறியிருக்கிறார். மறுநாளே, ஐயர் காரியாலயம் சென்றபிறகு பத்மினியை அழைத்துக்கொண்டு என்னைத் தேடி வந்துவிட்டான்.

## 6

மிஸ்டர் ராம், இந்தக் கதை முழுவதையும் அந்த வாலிபன் பாஸ்கரனே கூறினான். விளக்கம் வேண்டியிருந்த இடங்களைமாத்திரம் அவ்வப்போது பத்மினியிடம் கேட்டு அறிந்து கொண்டேன். கதையை முடித்துவிட்டு அவன் சொன்னான்: "புரொபஸர், இதுதான் ஐயரின் கேசின் விவரம். ஆரம்பத்திலிருந்து முடிவுவரை எதுவும் விடாது அறிவித்துவிட்டேன். தங்கள் மனச் சிகிச்சையினால் குணமடைந்த பலர், ஐயரின் இந்த மனமாற்றத்தை நீங்கள் எளிதில் போக்கி விடுவீர்கள் என உறுதி கூறினர். நம்பிக்கை இழந்து, வாழ்வின் சுகத்தை அணு அளவும் நுகராத பேதைப் பத்மினிக்கு வாழ்வளிப்பது, இனி உங்கள் கையில்தான் இருக்கிறது."

பத்மினியின் சோக வதனத்திலும் நம்பிக்கை மிதந்தது. அவள் மெல்லிய குரலில் சொன்னாள்: "உங்களை என் தந்தையென வணங்குகிறேன். உங்களுக்கு என் வயதில் ஒரு மகள் இருந்து அவளுக்கு இத்தகைய நிலை ஏற்பட்டிருந்தால், எவ்வாறு அதை போக்கக் கருத்துக் கொள்வீர்களோ, அவ்வாறு எனக்கும் உதவ வேண்டும். சாதாரணக் கேசு ஒன்றாகக் கருதி விடாது, தனிச் சலுகைக் காட்டி, என் கணவரின் மனநோயை நீங்கள்தான் தீர்க்கவேண்டும். என்னுடைய இந்த இறுதி நம்பிக்கையையாவது உருப்பெறச் செய்யவேண்டும்" என்று கூறிவிட்டு என்னைக் கையெடுத்துக் கும்பிட்டாள்.

"ராம், நான் வைத்தியன்தான். இரக்கமின்றி நொந்த புண்ணில் கோலிட்டு அதைச் சொஸ்தப்படுத்துபவன்தான். ஆயினும், உங்களைப்போல் மனித இதயம்தானே எனக்கும் இருக்கிறது? அதனால்தான் இந்தக் கேசின் ஆரம்பமே என்னை ஏமாற்றிவிட்டிருந்தும்

வெற்றி தோல்விகளைப் பரீட்சித்து விடுவ தென்றதிடம் கொண்டேன். சொன்னேன்: பத்மினி அம்மா, உங்கள் துயரக் கதை, கடின இதய முடைய என்னையும் உருக்கிவிட்டது. எனினும், இதுபோன்றதொரு விசித்திரக்கேசு என் வைத்திய வரம்புக்குள் இதுவரை வந்த தில்லை. எனவே இதைப் புதிய அனுபவமாகத் தான் நான் கொள்ளவேண்டும் வெற்றியைப் பற்றி இப்பொழுது எதுவும் உறுதிகூற முடியாது. மேலும் உங்கள் கணவர் சித்த சுவாதீனத்தோடு இருப்பவர் என்றபோதில் அவர் என் சிகிச்சையில் சிறிதளவாவது நம்பிக்கை வைக்கவேண்டும். அந்த நம்பிக்கை ஆத்மார்த்தமாக இல்லாவிட்டால், சிகிச்சைக்குத் தேவையான உண்மைகள் அவரிடமிருந்து வெளிப்படா. கேசின் தன்மை நூதனமானது ஆதலால் எனக்குத் தெரிந்த எல்லாச் சிகிச்சைகளையும் பிரயோகித்துப் பார்க்க நேரிடும். நெடுங்காலம் நான் குறிப்பிடும் நேரம் தவருது, அவர் இங்குவந்து போகவேண்டியிருக்கும். இவற்றிற்கெல்லாம் அவரை உடன்படச்செய்வதாக இருந்தால் என்ருல் இயன்றவரையில் வஞ்சனையின்றி முயன்று பார்க்கிறேன்.

"அவர் பரமோத்தமர் புரொபஸர், அதை யார் மறுத்தாலும் நான் மறுக்க முடியாது. என்னை வேறு எவ்விதக் குரோத நினைவோடும் விலக்கிவைத்திருக்கவில்லை யென்பதை உறுதிப்படுத்தவாவது அவர் நிச்சயமாகத் தங்கள் வைத்தியத்தில் நம்பிக்கைவைத்து எவ்விதச் சிகிச்சைக்கும் உள்படுவார். உண்மையும் அது தான். புரொபஸர், அவருக்கு ஏற்பட்டிருப்பது சபல முடிவும் அதன் விளைவான பீதியும் அல்லாது வேறு எதுவுமே இல்லை. அதை இந்த ஒன்றரை வருடத்துப் பழக்கம் எனக்குத் தெள்ளத் தெளிவாக்கி யிருக்கிறது. ஆம், கணவர் என்ற உரிமையுடன் என்னைத் தொடவில்லை யென்பதேயன்றி, வாழ்வில் வேறு என்ன குறை வைத்திருக்கிருர், அவர்?' என்ருள் அவள்.

"சிகிச்சையை எப்பொழுது தொடங்குவீர்கள் புரொபஸர்?" என்று கேட்டான் பாஸ்கரன். அவனிடம் ஆரம்பத்தில் இருந்த கவலைக்குறி நீங்கி அமைதி தென்பட்டது.

"நாளையே **வே**ண்டுமானுலும் ஆரம்பித்து விடுகிறேன். ஐயரைச் சந்தித்து அவர் என் கட்டுப்பாடுகளுக்கு உடன்படச் சம்மதம் அறிவித்ததுமே, சிகிச்சையைத் தொடங்கிவிடுறேன்."

"நல்லது; அப்படியானுல், பத்மி, இன்றே அவரிடம் இதுபற்றிப் பேசி, நாளைக்கு இங்கே அழைத்துவந்துவிடு" என்று அவன் அவளிடம் கூறிவிட்டு, என்னை நோக்கி, "புரொபஸர்; உங்கள் உதவிக்கு ந[illegible]றென்றும் கடமைப்பட்டவன். ஆயினும் இச் சிகிச்சையைத் தொடங்கு முன்பு உங்களுக்கு நினைவூட்டவேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது. ஐயருக்கும் எங்களுக்குமிடையே நிலவிவரும் விரோத மனப்பான்மையை ஏற்கனவே உங்களுக்கு அறிவித்திருக்கிறேன். எனவே, இச்சிகிச்சைக்கு நான் காரணமாக இருந்தேன் என்பதை அவர் அறிந்துகொள்ளலாகாது. பத்மினி, இப்போது கிட்டியிருக்கும் வாழ்விலே திருப்தியடைந்து இருப்பதாகவும், அவளை நாங்கள் அப்பா—பிள்ளைகள் தாம் கிளறிவிட்டு வருகிறோம் என்றும் ஓர் நினைவு பலமாக அவரிடம் வேரூன்றி இருக்கிறது. ஆகவே என் தலையீட்டை அறிந்தால், அது அவர் கோப வெறியை மீண்டும் கிளப்பிவிடக்கூடும், உங்களிடம் அது ஒன்றைத்தான் நன்ருக எச்சரிக்க விரும்புகிறேன். இப்பொழுது மாத்திரமல்ல; எப்பொழுதுமே, இந்த பாஸ்கரனின் தலையீடு மறந்துங்கூட உங்கள் வாயினின்றும் வந்துவிடக்கூடாது. கிழவரின் பேதைமையைப் போக்கி, அவரைப் பத்மினியுடன் இணையச் செய்துவிட்டீர்கள் என்று அறிந்ததுமே நான் உங்களை வந்து பார்த்து, நீங்கள் ஆற்றிய பேருதவிக்கு என் சக்திக்கு இயன்ற கைம்மாறு செய்வேன். புரொபஸர், நான் இப்பொழுது இந்தப் பம்பாயில்தான் ஒரு வேலையில் அமர்ந்து தங்கியிருக்கிறேன். இருந்தாலும் நம் அனைவரின் வெற்றிக்காக இக்கேசு முடிவடையும்வரை நான் இங்கு வரமாட்டேன். விடைபெற்றுக் கொள்ளுகிருேம், புரோபஸர், நமஸ்காரம்."

பாஸ்கரன் கிளம்பிவிட்டான்; பத்மினியும் புறப்பட்டாள்; "நமஸ்காரம் புரொபஸர், நாளைக்கு எப்பொழுது அவரை அழைத்துவர வேண்டும்?" என்று எழுந்துகொண்டே கேட்டாள்.

"இரவு ஏழு மணிக்குப்பிறகு அழைத்து வாருங்கள் அம்மா; உங்கள் கணவருக்கும் சவுகரியமாக இருக்கும்; நானும் மற்ற நோயாளிகளை அநேகமாகப் பார்த்து அனுப்பிவிட்டிருப்பேன். வேறு இடையூறு இன்றி உங்கள் கேசைக் கவனிக்கமுடியும்."

"சரி" யென்று புறப்பட்டுச் சென்ருள், அவள். வாயில்வரை சென்று வழி அனுப்பிவிட்டு. என்னை ஏமாறச் செய்த அந்த ஜோடி கண்களுக்கு மறையும் வரையில், வைத்தியப் பண்பை மறந்து, மனித இதயத்துடன், ஆசை தீரப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

மறுநாள் மாலை சரியாக ஏழு மணிக்குத் தன் கணவருடன் வந்துவிட்டாள், பத்மினி. "குட் ஈவினிங், புரொபஸர்" என்று என் முன் நின்ற,



அந்தப் பெரியவருக்கு முகமன் அளித்து அமரச் செய்துவிட்டு, ஒரு தடவை, கால் முதல் தலை வரையில் ஆராய்ச்சிப் பார்வையைச் செலுத்தினேன். ராம். பாஸ்கரன் உருவகப்படுத்தியிருந்தவாறே அவருடைய தோற்றம் இருந்ததென்றாலும், முகத்தில் துலங்கிய அமைதியும், புத்தி தீட்சண்யமும், இவரா, இப்படி ஒரு பேதைமையான முடிவுடன் மனைவியை நெருங்காதிருக்கிறார்? என்றுதான் என்னை எண்ணச் செய்தது. ஆனால், அவரே அதை ஒப்புக்கொண்டபோது—

அவர் சொன்னார்: புரொபஸர் ஸார், என் மனைவி தங்கள் திறமையைப்பற்றி விரிவாகச் சொன்னாள். மனச் சிகிச்சையில் நம்பிக்கையற்றவர்களுக்குத் தாங்கள் வைத்தியம் செய்வதில்லையென்றும் கூறினாள். உங்கள் சிகிச்சையில் நான் பூரண நம்பிக்கை கொள்ளுகிறேன். அதோடு எனக்கு ஏற்பட்டிருப்பது மனநோய் தான் என்பதையும் ஆரம்பத்திலே உறுதி கூறிவிடுகிறேன். ஆனால், என் மனத்தில் இருக்கும் வேறொரு உறுதியையும் கூறிவிட விரும்புகிறேன். தெய்வம் என்று ஒன்று இருக்கிறது என்பதை நீங்கள் நம்புகிறீர்களா? நம்புவதானால், அது அளித்த தண்டனை ஒன்றை மனிதன் தனது முயற்சியினால் மாற்றிவிட முடியும் என்று நினைக்கிறீர்களா? எனக்கு இந்த மனநோயைத் தெய்வமே அளித்தது. எனவே அதையன்றி வேறு எவராலும் அதைக் குணப்படுத்த முடியாது என்றுதான் நான் கருதியிருந்தேன். ஆனால், பத்மினி உங்கள் சிகிச்சை தெய்வத் தன்மை வாய்ந்ததென்றும், எந்தத் தெய்வம் எனக்கு இத் தண்டனையை அளித்ததோ, அதனிடமே மன்றாடி எனக்கு மன்னிப்பைப் பெற்றுவிடும் ஆற்றல் உங்களுக்கு உண்டென்று திடமாக இருக்கிறாள். உங்களுக்கு அத்திடம் இருக்கக்கூடும். இருந்தால் அதை நான் தகர்க்கமாட்டேன். என் மனதில் நிலவியிருக்கும் பீதியைப் போக்கி, தெய்வம் என்னை மன்னித்துவிட்டதென்ற உறுதியை நிலைநாட்ட உங்களால் ஆகுமானால், முயன்று பாருங்கள். அதற்காகத் தாங்கள் விதிக்கும் எந்தக் கட்டுப்பாட்டுக்கும், எவ்விதச் சிகிச்சைக்கும் நான் உடன்படுகிறேன். எத்தனை பொருள் வேண்டுமானாலும் செலவு செய்கிறேன்."

ராம், அவருடைய இந்த உறுதியான பேச்சு என் முடிவைக்கூடச் சிறிது அசைத்துவிட்டது என்றுதான் சொல்லவேண்டும். ஆம், அன்று தொடங்கி, நான் அறிந்த சிகிச்சைகளை ஒவ்வொன்றாகப் பிரயோகித்துப் பார்த்துவிட்டேன். ஆயினும் கேசின் மூலமே இன்னும் பிடிபடவில்லை. முதல் முதலில் ஐயரைக்

கொண்டே இந்தக் கேசை ஒருதடவை ஆரம்பத்திலிருந்து சொல்லச் செய்தேன். அதில் எங்காவது, இப் பேதைமையான முடிவுக்கு அவர் வருவதற்கு ஆதாரம் கிட்டுகிறதா என்று பார்த்தேன். ஆனால், அவர் கூறிய வரலாறும் பாஸ்கரன் கூறியதுபோலவே வார்த்தைக்கு வார்த்தை சரியாக இருந்ததால், அதில் மூலம் எதுவும் தென்படவில்லை. பின்னர், குறுக்கு விசாரணையில் இறங்கி, சிலநாட்கள் வக்கீலின் உத்தியோகம் வகித்தேன். அதிலும் துப்பு ஏதும் கிட்டவில்லை. பிறகு புதிர் முறையில் புகுந்து அவர் மனநிலையை வெளிக்கொண்டு வரும் பற்பல புதிர்களைப் போட்டு விடை கேட்டறிந்தேன். அவற்றிற்கு அளித்த பதில் ஒவ்வொன்றும் அவர் இந்தச் சபலமுடிவை எட்டுவதற்குச் சாதகமாகவே இருந்தன. இதை அடுத்து, ஐயரின் குழந்தைப் பிராயத்து நிகழ்ச்சிகள் பலவற்றைக் கூறச் செய்தேன். அவையும் அவர் அடி நாளிலிருந்து தெய்வ பக்தியிலும், பெண்களைப் பேணுவதிலும் ஒருங்கே ஊறி வளர்ந்தவர் என்பதை உறுதி செய்தனவேயன்றி, கேசுக்கு ஆதாரமான நிகழ்ச்சி ஒன்றையேனும் வெளிக்கொண்டுவரவில்லை. அப்படியானால்...............?"

„ ஒரு வார்த்தை மிஸ்டர் டே" என்று நான் குறுக்கிட்டேன்.

"கேளுங்கள், ராம்"

"இல்லை ; 'அடித்தளம்' 'மூலை' 'ஆணிவேர்' என்று குறிப்பிடுகிறீர்களே ; இந்தக் கேஸில் எத்தகைய நிகழ்ச்சியை அது எனத் தேடிக்கொண்டிருக்கிறீர்கள் ? ஒரு சிறிய உதாரணம் சொல்லுங்கள்."

"ராம் ; மனிதனின் மனம் அடிக்கடி மாறும் இயல்புடையது. எந்தத் திடமான முடிவையும் ஒருவன் அரைக் கணத்தில் மாற்றிக்கொண்டு, முற்றிலும் வேறுபட்ட வழியில் திரும்பிவிடுவான். இந்த மாறுதலுக்கு அச்சமயத்தில் எது காரணமாக நிற்கிறதோ, அது போன்ற நிகழ்ச்சிகள் பற்பல, அவன் வாழ்வில் கட்டாயம் ஏற்பட்டுத்தான் இருக்க வேண்டும். உதாரணமாக, காங்கிரஸ் வாதி ஒருவரை எடுத்துக்கொள்ளுவோம். அவர் ஏதாவது ஒரு சபையிலோ, முனிசிபாலிட்டியிலோ, அல்லது வேறு ஏதேனும் ஒரு ஸ்தாபனத்திலோ ஸ்தானம் பெறவேண்டித் தேர்தலுக்கு நிற்கிறார் என்றும் வைத்துக்கொள்வோம். அத்தேர்தலில் அவர் தோற்றுவிடுகிறார். தோற்றதும் காங்கிரஸ் ஸ்தாபனத்தை விட்டு, 'சோஷலிஸ்டு' 'கம்யூனிஸ்டு' போன்ற ஒரு கட்சியில் சேர்ந்துவிடுகிறார் என்றால், அந்த மாற்றத்துக்குக் காரணம் தேர்தலில் தோல்வி அடைந்ததுதான் என்று சாதாரண மக்கள் சொல்லுவார்கள். ஆனால் எங்கள் சிகிக்சை முறைப்படி பார்த்தால் அத் தோல்வி அவர் மாற்றத்துக்குக் கடைசி உபகரணமாகவே இடம் பெறும். ஏற்கனவே தமது கட்சியிடம் நம்பிக்கை இழக்கும் வண்ணம் பல சம்பவங்களை அவர் எதிர்கொண்டிருக்க வேண்டும். அத்தகைய சம்பவங்களை அவர் வெளியே கூறி இருக்கலாம், கூறாமலும் இருக்கலாம். தானே ஒரு கணம் வருந்திவிட்டுப் பிறகு மறந்துவிட்டிருக்கவும் கூடும். எனவே அந்தச் சம்பவங்களிலிருந்தே இம்மனமாற்றம்தோன்றி வளர்ந்தது என்பதைப் பெரும்பாலும் வெளியில் உள்ளோர்,ஏன் ? அவர்கூட ஒவ்வொரு சமயங்களில் உணராமல் இருப்பது இயற்கையே. அந்தச் சம்பவங்களில் ஒன்றைத் தான் நாங்கள் கேசின் 'மூலை' என்று கூறுகிறோம். அதைப் பிடித்துக்கொண்டு இதர நிகழ்ச்சிகளையும் வெளிக்கொண்டுவந்து பிரஸ்தாபக் கேசின் வளர்ச்சிக்கு அவை அல்லது அதுவே விதையூன்றியதாக எடுத்துக் காட்டுவோம்.

"இந்த ரீதியில் ஐயரின் மனமாற்றத்துக்குக் காரணமாக நிற்பதுஒருபேதைமையானமுடிவு. அவருடைய உள்ளத்தில், இந்த வயதில் பத்மினியை மணந்தது தவறோ ?" என்ற நினைவு எழுந்தது இயல்பானதுதான். தெய்வபக்தியுடைய அவர், அந்நிலையில் அத் தெய்வத்திடம் மன்னிப்புப் பெறச் சென்றதும் புதுமையல்ல. ஆயினும், பத்மினியைத் தொடாதிருக்கக் காரணமாக எழுந்த பேச்சு, அந்தத் தெய்வத்திடமிருந்து வரவில்லையே? அல்லது அங்கே சாமியாடிய ஒருவனிடமிருந்து வந்தது என்றால்கூட ஒருவாறு ஒத்துக்கொள்ளலாம். ஆனால் கிட்டத் தட்ட பத்மினியின் நிலையில் அவதியுற்ற ஒரு பெண் தனது கஷ்டத்தை ஆத்திர மொழிகளாக வெளியிட, அது தெய்வவாக்கு, தன்னையே குறித்தது என்று ஐயர் கொள்ளுவதாக இருந்தால் அதைச் சஞ்சல புத்தி, சபல உள்ளம், பேதைமைக் குணம் என்றுதான் முடிவுறுத்த வேண்டும். அவ்வாறுதான் எல்லோரும் முடிவுறுத்தி இருக்கிறார்கள். ஆனால், அந்தச் சஞ்சலம் திடீரென்று ஏற்பட்டது என்று நீங்கள் நினைப்பதுபோல, நான் நினைக்க முடியாதே. இத்தகைய மனமாற்றத்துக்கு, அதிலும் பெண்ணைத் தெய்வமாகப் போற்றுபவர், ஒருத்தியைத் தெய்வமாக்க மணந்து வெறும் கற்சிலையாக நிறுத்திவைக்கத் துணிவடைந்ததற்கு, இந்த ஒரு சம்பவம் எனக்குப் போதாதே. எனவே முன் வாழ்க்கையில் அவர் எங்கெங்கு இத்தகைய சபலத்துடன் நடந்துகொண்டிருக்கிறார் என்ற கேசின் மூலத்தைத்தான் நான் துழாவிவந்தேன். அத்தகைய சம்பவம் ஒன்று கூட இதுவரை கையாண்ட வழிகளில் தென்படவில்லை. அதுபோன்ற நிகழ்ச்சி ஒன்றே

னும் அவரிடமிருந்து வந்தால்தானே அதைக் கொண்டு அவருடைய மனமாற்றத்துக்குத் தேவையான சிகிச்சைகளைச் செய்யமுடியும்? "ஸ்வாமி, நீங்கள் நினைத்திருப்பதுபோல, அவ் வார்த்தைகள் தெய்வத்திடமிருந்து வந்தவை யல்ல, பிறவியிலே உங்களுக்கு இத்தகைய சபல புத்தி ஏற்பட்டிருக்கிறது. அதற்கு இப் போது நீங்கள் கூறிய இன்ன இன்ன நிகழ்ச்சி களே அத்தாட்சி" என்று அச்சுறுத்தி அவர் மனதைத் திருப்பமுடியும்? எனவே, அதைத் தேட இறுதி முயற்சியாக இப்போது மன மயக்கச் சிகிச்சையை நடத்திப் பார்த்துவிடத் திட்டமிட்டேன்.

"ராம், நான் அறிந்திராத மொழியைத் தாய்ப் பாஷையாகக்கொண்ட நோயாளிகளைச் சிகிச்சைக்கு ஏற்றுக்கொண்டால், உடனே அவர்கள், பாஷை, நடையுடைபாவனைகளை ஓரளவு கற்றுக்கொள்ளும் என் பழக்கந்தான் உங்களுக்குத் தெரியுமே. அந்த வழக்கத்தை ஒட்டி, முதல் முதலாக இந்தத் தமிழ்நோயாளி என்னிடம் வந்ததும், நான் தமிழைக் கற்றுக் கொள்ள ஆரம்பித்துவிட்டேன். என்றாவது ஒரு நாள் சிக்கல்களைத் தெளியச்செய்ய, மன மயக்கச் சிகிச்சைக்கு நோயாளியை உட்படுத்த நேர்ந்தால், அப்பொழுதைய நடைமுறை அனைத்தும் அவருடைய பிறப்பிடத்துச் சூழ் நிலையிலே நடைபெறவேண்டும் என்பது எங் கள் சிகிச்சைமுறை. ஆகவே, ஐயரிடம் அதைச் சூசகமாகக்கூறி, அவர் சிபாரிசு செய்த தமிழ் உபாத்தியாயர் ஒருவரைத் தினந் தோறும் பகல் நேரத்தில் என் ஜாகைக்கு வர வழைத்து முதலில் பேசக்கற்றேன். பிறகு சிறிதளவு எழுதப் படிக்கவும் கற்றேன். அவ ரின் வழியாகவே தமிழரின் நடை உடை பாவனைகளையும் தெரிந்துகொண்டேன். அந்தப் பயிற்சியைப் பயன்படுத்த வேண்டிய சந்தர்ப்ப மும் இந்தக் கேசிலே வந்துவிட்டது.

"ராம், சென்றவார இறுதியில்தான், இனி ஐயரின் கேசின் முளையைக்காண மனமயக்கச் சிகிச்சை ஒன்றே இறுதி வழி என்பது எனக்குத் தீர்மானமாயிற்று. உடனே அதற் கான ஆக்கவேலையில் ஈடுபட்டேன். நோயா ளியின் மனதை மயக்கி, எங்கே தேசு ஆரம்ப மாயிற்றோ, அங்கேயிருந்து பின்னோக்கி இழுத் துச்செல்ல வேண்டியது முறையாதலின், அதற் கான சூழ்நிலையைச் சிருஷ்டித்தேன். அக்காரி யத்தில் உதவியளிக்க எனது தமிழ் உபாத்தி யாயர் முன் வந்தார். அவரது பூர்வீகம் மது ரையை அடுத்த ஓர் கிராமம். மீனாட்சி அம்மன் க்ஷேத்திரத்துக்கு அடிக்கடி போய் வந்தவர் அவர். தவிர, சுந்தரேசரின் மூலஸ் தானப் படம் ஒன்றும் அவரிடம் இருந்தது. அதன் உதவியுடன், அவருடைய மேற்பார்வை யில், சினிமா ஸ்டூடியோ ஒன்றின் சிறந்த 'ஸெட்டிங் மாஸ்டர்' ஒருவரால், என் கோவில் ஐந்தே நாட்களில் உருவாக்கப்பட் டது. அது நூற்றுக்கு நூறு பொருத்தமாக அமைந்திருப்பதற்குச் சற்று முன்பு நீங்கள் அத்தாட்சி அளித்துவிட்டீர்கள்.

"இனி மேலே செய்ய இருப்பதைச் சொல்லு கிறேன்; அதோடு இரண்டு மாதங்களாக என்னை மறந்துவிட்டிருந்த குற்றத்துக்கு உங்க ளுக்கு அளிக்கப்போகும் தண்டனையையும் கூறிவிடுகிறேன், இன்றிரவு சரியாக ஒன்பது மணிக்கு ஐயரை, இங்கே வரச்சொல்லியிருக்கி றேன்......

"ஒன்பது மணிக்கா, பாபூஜி?"

"ஆமாம்; ஏன்?"

"இல்லே, இப்பொழுதே மணி ஒன்பது ஆகி விட்டதே"

டே அவசரமாகக் கடிகாரத்தைப் பார்த்தார் "ஆம் ராம், அவர் வருகிற நேரமாகிவிட்டது. சீக்கிரம் கேளுங்கள்: ஐயர் மாத்திரந்தான் இங்கே வருவார். இந்தச் சிகிச்சை முடியும் வரை, பத்மினியை வரலாகாதென்று கூறியிருக் கிறேன். எங்கள் இருவரைத் தவிர நிலையத் தில் வேறு எவருமே இருக்கமாட்டார்கள். நீங்கள் இருப்பீர்கள்; ஆனால் எங்களைப்போல மானிடனாக அல்ல. என்ன ராம் விழிக்கிறீர் கள்? ஆமாம்; உங்களை நான் தெய்வமாக்கி விடப்போகிறேன். என் கோவிலின் சுந்தரே சர் நீங்கள்தாம். சிலைக்குப் பின்னால் உங்களை ஒளித்து வைக்கப்போகிறேன். ஐயரை ஹாலு க்கு அழைத்துவந்து கோவில் மறைக்கப்பட்டி ருக்கும் பகுதியிலுள்ள விளக்கையன்றி மற்ற எல்லாவற்றையும் அணைத்துவிடுவேன். பிறகு அவருக்கு மனமயக்கத்தை உண்டுபண்ணு வேன். "இப்பொழுது நீங்கள் எங்கே இருக் கிறீர்கள்? மதுரைக் கோவிலில், சுந்தரேசர் சந்நிதியின் முன்; அல்லவா?" என்று பன் முறை வினவுவேன். ஐயரின் மனது எனக் குப் பூரணமாகக் கட்டுப்பட்டதும் அவர் "ஆம்" என்பார். உடனே நான் திரையை விலக்கிவிட்டு, மணியையும் ஒலிக்கச் செய் வேன். சூழ்நிலை ஐயரின் மனதில் நன்றாகப் பதிந்துவிடும். பின்னர், "நீங்கள் பத்மினியை மணந்த கோலத்தோடு தெய்வத்திடம் மன் னிப்பு வேண்ட வந்திருக்கிறீர்கள் அல்லவா?" என்பேன், "ஆமாம்" என்ற பதிலே வரும். "சரி; மன்னிப்புப் பிரார்த்தனை யைச் செலுத்திக்கொள்ளுங்கள்" என்றதும், முன்பு கதையில் கூறியவாறு "ஆண்டவனே நான் பத்மினியை மணந்தது தவறா? வாழ்க்கை அறவே இருளடைந்துவிட்ட

நிலையை எட்டிய அவள், என்னை வலியவந்து வேண்டினாள். அவள் தந்தை, ' பெண்ணாக வேனும் ஏற்றுக்கொள்ளுங்கள் ' என்று வற் புறுத்தினார். அதன் நிமித்தம் அவளை நான் கைப்பிடித்தது தவறானால், சுந்தரேசா, என்னை மன்னித்துவிடும்'' என்ற அதே வார்த்தை களையே அவர் கூறுவார். அச் சமயம் நீங்கள் மறைவில் இருந்தவாறே ' தவறு அல்ல பக்தா ! மெச்சத் தகுந்த செய்கையைத்தான் நீ செய்தி ருக்கிறாய் ! பெண்ணைத் தெய்வமெனப் போற் றும் உன் இயல்புக்கு ஏற்ப, அந்த இள மங் கைக்கு எல்லா இன்பங்களையும் அளித்துப் போற்றி வா ; உங்களுக்குச் சர்வ மங்களம் உண்டாகட்டும்'' என்று பெருங்குரலில், ஒரே ஒரு தடவை, கம்பீரமாகச் சொல்லவேண்டும். அவ்வளவுதான் உங்கள் வேலை. பிறகு நான் பிடித்துக்கொள்ளுவேன்—'' தெய்வ சம்மதம் இப்படியிருக்கையில் நீங்கள் ஏன் அவளைத் தொடாது இருக்கிறீர்கள்?'' என்று ஆரம்பித்து அவர் மனதைக் குழப்பி, வாழ்வைப் பின் னோக்கி இழுத்துச் சென்று ஆணிவேரைக் காண்பது வைத்தியனாகிய என் வேலை.

'' மிஸ்டர் ராம், உங்களுக்கு அளித்திருக்கும் இத் தண்டனை சற்றுக் கடினமானதுதான். ஏனெனில் நான் சிகிச்சையை முடித்து, ஐய ரின் மனதை இயல்பான நிலைக்குக் கொண்டு வந்து வெளியே அழைத்துச் செல்லும் வரை யில் நீங்கள் தெய்வமாக அங்கேதான் மறைந் திருக்கவேண்டும். அதோடு கிட்டத்தட்ட ஒரு வாரம், அதாவது அடித்தளம் அகப்பட்டு, அவரை மனமாறச் செய்யும் வரையில் இந்தச் சிகிச்சை நாடகத்தின் இக்காட்சி, நாள் தோறும் நடைபெற வேண்டும். இது, ஏற்க னவே பல வேலைகளில் ஈடுபட்டு ஓய்வின்றி இருக்கும், உங்களுக்கு ஒரு கஷ்டமான பணி. ஆயினும் உங்கள் டேயின் வெற்றிக்காக அதைப் பொருட்படுத்த மாட்டீர்கள் என்று நம்புகிறேன். என்ன ? என் ஊகம் தவறானது அல்லவே ? ''

'' தவறல்ல டே பாபு ; உங்கள் வெற்றிக்கு என் பங்கு கைங்கர்யம் தேவை இருக்கும் போது, அதன்பொருட்டு வேறு எந்த வேலை யையும் நான் ஒதுக்கிவிடத் தயாராகவே இருக் கிறேன். அதில் ஏற்படும் கஷ்டங்கள் எனக்கு இன்பமாகவே இருக்கும். சரி நேரமாகி விட்டது. ஐயர் வருமுன்பே நான் எங்கே மறைந்திருக்க வேண்டும் என்பதைக் காட்டி விடுங்கள்'' என்று கூறிக்கொண்டே எழுந் தேன்.

டேயும் எழுந்து புறப்பட்டார். நாங்கள் ஹாலை நோக்கி ஓரடிதான் எடுத்துவைத்திருப் போம். டெலிபோன்மணி ' கண கண ' வென்று ஒலித்தது.

'' இருங்கள் ராம், ஒரு நிமிஷம் '' என்று என்னை நிறுத்திவிட்டு, டே ஓடிப்போய் ரிஸீ வரை எடுத்து '' ஹலோ '' என்றார்.

தொடர்ந்து அவர் அக் குழாய்வழி அனுப்பிய சொற்கள் இவைதாம்: '' ஆம் ; டேதான் பேசு கிறேன் ; நீங்கள் யார் பேசுவது ?...... ஹலோ! ஐயரா ?......நமஸ்தே......எங்கேயிருந்து பேசு கிறீர்கள் ?......* வி. டி. யிலிருந்தா ?...... யார்? உங்கள் மனைவி பத்மினியா ஊருக்குப் போகி

*பம்பாயிலிருந்து சென்னைக்குச் செல்லும் ரெயில்கள் கிளம்பும் நிலையம் ' விக்டோரியா டெர்மினஸ் ' என்னும் பெயருடைய இது, தலையெழுத்துடன் ' வி. டி. ' எனச் சுருக்கி அழைக்கப்படும்.

ருள்?......அவசர வேலையா?......மதுரைக்கா? ஆச்சரியமாயிருக்கிறதே!......சிகிச்சை வேலை செய்கிறது என்று வைத்துக்கொள்ளவா? இல்லை; இல்லை, விரோதம் மறையக் காரணம் வறு ஏதாவதுதான் இருக்கவேண்டும்.........



நேரில் சொல்லுகிறீர்களா? சரி; எப்பொழுது வருகிறீர்கள்?......நாளைக்கா? ஆம்; பத்து மணிக்குத்தான் மெயில் புறப்படுகிறது. ஓ. கே. நாளைச் சந்திப்போம்; சரியாக ஒன்பது மணிக்கு.........ஓ. கே; குட் நைட்" டே ரிஸீவரை வைத்துவிட்டு என்னை நோக்கி "ராம்" என்று ஆரம்பித்தார்.

"புரிந்துகொண்டேன், டே; ஐயரின் மனைவி அவசரவேலையாக இரவு மெயிலில் மதுரைக்குப் போகிருள். ஆகவே அவர் இன்று சிகிச்சைக்கு வரமாட்டார்; நாளைக்குத் தான் வருவார். அதுதானே"

"ஆம்"

"சரி, அப்படியானல் எனக்கு வீட்டுக்குப் போக அனுமதி தாருங்கள். மணி ஒன்பதே கால் ஆகிவிட்டது."

"போகலாம் ராம்; இருங்கள் இதோ நானும் வந்துவிட்டேன்."

"எங்கே என் வீட்டுக்கா? ரொம்ப சந்தோஷம்; வாருங்கள்."

"இல்லை, என் ஹோட்டலுக்கு. நீங்கள் **இன்றுமுதல் என் விருந்தாளி."**

"டே பாபு, இவ்வளவுதான நம் உறவு? என்னை வெறும் விருந்தாளியாகத்தான மதித்து விட்டீர்கள்? நான் என்னவோ, உங்களை என் நண்பராக மாத்திரமல்ல, சகோதரராகவும்..............."

"ஆம் ராம், தம்பி தனிக்குடித்தனம் செய்யும்போது அண்ணன் வீட்டுக்கு வந்தால் விருந்தாளிதானே!"

"சரி; உங்கள் விருந்தை நாளைமுதல் சாப்பிட்டுக் கொள்ளுகிறேன். இன்று என்னை இத்துடன் விட்டு விடுங்கள்; மனைவி காத்துக் கொண்டிருப்பாள்."

"காத்துக்கொண்டிருக்கட்டும்; இன்றைக்கு மாத்திரமல்ல; இன்னும் ஒரு வாரத்துக்கு அவர்கள் ஏசலை நான் வாங்கிக் கட்டிக்கொள்ளுகிறேன்."

"இல்லை, பாபூஜி; இன்று, அவளிடம் தாமதமாக வருவேனென்று சொல்லி வரவில்லை. பாவம், பசியோடு கவலைப்பட்டுக்கொண்டிருப்பாள் நாளைமுதல் முன்னறிவிப்புச் செய்து விடுவேன் ஆதலால்..........."

"இருக்கட்டும்; நீங்கள் வழக்கமாகப் பத்திரிகாலயத்தைவிட்டு எந்நேரத்தில் வீடுபோய்ச் சேருவீர்கள்?"

"எட்டு மணிக்கு"

இப்போது மணி என்ன?"

"ஒன்பதரை ஆகப் போகிறது"

"எட்டு மணிக்கு வீடு செல்பவர், ஒன்பதரை மணிக்குக் கிளம்பிப் பத்தரைக்கு வீடு செல்லலாம் என்ருல், என் வேண்டுகோளுக்காக இன்னும் ஒரு அரை மணிநேரம் பொறுத்துச் செல்லலாகாதா? மேலும், நான் இப்புதிய ஹோட்டலுக்கு வந்தபிறகு, நீங்கள் ஒருநாள்கூட என்னுடன் சாப்பிடவில்லையே, வாருங்கள் போகலாம். இன்னும் எட்டு நாட்களுக்கு என் ஹோட்டல் சாப்பாட்டைப் புசிக்கவேண்டும் என்பதும், நான் உங்களுக்கு விதித்திருக்கும் தண்டனைகளில் ஒன்று."

இப்படித்தான், 'வாசாலக'ரான அவரிடம் சிக்கிக்கொண்டால், ஏதேதோ பேசி, என்னை வீடு-வாசலை அறவே மறக்கச் செய்துவிடுவார். அப்பொழுது என் வயிற்றையும் பசி கிள்ளிக் கொண்டிருந்தது என்று வைத்துக்கொள்ளுங்களேன். எனவே, மறு பேச்சின்றி, அவருடன் ஹோட்டலுக்கு நடந்தேன்.

(தொடரும்)




# டால்டாவில் தயாரித்த ருசிமிக்க ஜவ்வரிசிக்கூழ்

உடலுக்கு "உஷ்ணத்தை" தரும் மாவுசத்து ஜவ்வரிசியில் ஏராளமாய் இருக்கிறது. ஜவ்வரிசி எளிதில் ஜீரணமாகக்கூடியது. தவிர உங்கள் குழந்தைகள் இந்தக்கூழை மிகவும் விரும்புவார்கள். ½ கப் ஜவ்வரிசியை 1 மணி நேரம் தண்ணீரில் ஊறவைக்கவும். 1 கப் வடிகட்டின கெட்டியான வெல்லப்பாகுடன், சுக்கு, ¼ தேக்கரண்டி உப்பு இவைகளை சேர்க்கவும். தெளிவாகும்வரை பாகையும் ஜவ்வரிசியையும் அடுப்பில் வைத்துக் காய்ச்சவும். பாத்திரத்தை குளிர்ந்த தண்ணீரால் கழுவினபின் அதில் கூழை ஊற்றி உறைய வைக்கவும். பிறகு ¼ கப் வெல்லத்துடன் 2 பெரிய ஸ்பூன் டால்டா சேர்த்து கொதிக்கவைக்கவும். அதில் 3 பெரிய ஸ்பூன் தண்ணீர் சேர்க்கவும். அடுப்பிலிருந்து இறக்கி 2 பெரிய ஸ்பூன் அளவு எலுமிச்சஞ்சார் சேர்க்கவும். கூழை பாத்திரத்திலிருந்து அகற்றி பாகை அதன்மேல் ஊற்றி, முந்திரிப்பருப்பு முதலானவைகளை மேலே தூவவும். டால்டாவில் தயாரித்த உணவு சூடாகவோ, ஆறியோ எப்படி இருந்தபோதிலும் ருசிமிக்கதாய் இருக்கும். டால்டா ஒரு சுத்தமான தாவரக்கொழுப்பாகையால் அது அதிகநேரம் சூட்டைத்தாங்குகிறது—எனவே, உணவுகள் ஒழுங்காக முழுவதும் பக்குவமாவதற்கு போதுமான சாவகாசம் அளிக்கிறது.

உஷ்ணமான வேளைகளில் அருந்த
ஆரோக்கியமளிக்கும் பானங்கள்!

இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது
என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்!

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




HVM. [illegible]

# குறை

பி.எஸ்.பாரதி

ஸ்டேஷனை விட்டு 'ரெயில்' நகர்ந்து கொண்டிருந்தது.

"சுமதி! உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்! கடிதம்போட மறந்து விடாதே!" என்று ஆதுரத்துடன் தன் மனைவியிடம் சொல்லிவிட்டு நகர்ந்தான் விசுவம். அவனைக் காணப் பிடிக்காமல் முகத்தைக் கடுகடுப்புடனும் அருவருப்புடனும் வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள் சுமதி! விசுவத்தின் முகம் விகாரமடைந்தது. ஆழ்ந்த பெரு மூச்சுடன் 'பிளாட் பாரம்' ஜனத் திரளில் மறைந்துவிட்டான் அவன். சுமதியின் அருகில் அமர்ந்திருந்த அவள் தாயார் ஆத்திரத்துடன் 'சுமதி' என்று கூப்பிட்டாள்.

பதிலில்லை.

"என்ன நெஞ்சழுத்தமடி உனக்கு! நான் கூப்பிட்டது காதில் விழவில்லை?"

"ஹூம் ...ம்"

"ஒருத்தன் இவ்வளவு தூரம் ஸ்டேஷன் வரைக்கும், தன் வேலையெல்லாம் விட்டு வந்து வழி யனுப்பி விட்டுப் போகிறுன்; அவனை அவமானப் படுத்துவது போல் அனுப்பிவிட்டாயே! சுமுகமாய் இரண்டு வார்த்தை பேசினுல் உன் வாய் முத்தா உதிர்ந்துவிடும்?" என்று வார்த்தைகளைப் படபடவென்று கொட்டினுள் சுமதியின் தாயார்.

"ஹோ!" என்று அழுதவாறே அன்னையின் மடியில் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டு உள்ளம் குமுறினுள் சுமதி.

அவளை அப்படியே அணைத்தவாறே, "ஏனம்மா அழுகிறுய்? கல்யாணமான இந்த இரண்டு வருடத்திற்குள் என்ன மனஸ்தாபம் உங்கள் இருவருக்கும்? இந்த உடம்புடன் இந்த மாதிரி உள்ளம் குமுறுவது நல்லதா? என்ன சமாசாரம் என்று என்னிடம் கூடவா சொல்லக்கூடாது?" என்று வாஞ்சையுடன் வினவினுள் சுமதியின் தாய், மகள் மனம் புழுங்குவதைக் காணச் சகிக்காமல்.

கண்ணீருடன் சுமதி தலையைத் தூக்கி, தன் தாயின் முகத்தைப் பார்த்தாள். 'அம்மா!' என்றலறியவாறே மறுபடியும் அவளைக் கட்டிக்கொண்டு கண்ணீர் விட்டாள். அவள் இதயம் ஆயிரம் சுக்கல்களாக உடைந்துபோயிருந்தது. வார்த்தைகள் அவள் தொண்டையை விட்டு வெளிக்கிளம்ப மறுத்தன. தன் வாழ்க்

கையின் சூருவளியை எண்ணிப் பார்க்கவும் நடுங்கினாள் சுமதி.

## 2

ஆம். உண்மைதான், சுமதிக்கும், விசுவம் பி. எஸ்ஸி. க்கும் மணமாகி இன்னும் இரு வருடம் பூர்த்தியாகவில்லை. சுமதிக்குப் புக்ககத்தில் தொந்தரவு ஒன்றுமே கிடையாது. எந்த விதத்திலும் அவள் நிரம்ப அதிர்ஷ்டம் செய்தவள்தான். விஞ்ஞான மேதை விசுவம். விஞ்ஞான ஆராய்ச்சி நிலயம் ஒன்றில் வேலை அவனுக்கு. கை நிறையச் சம்பளம்; கண் நிறைந்த கணவன்; சிவந்த அந்த எடுப்பான களைமுகமும், சுருண்ட அழகிய 'கிராப்பும்' ரோல்டு கோல்டு பிரேம் மூக்குக் கண்ணாடியுமாக விசுவம் நல்ல அழகன்தான். அன்னியோன்னியமான தம்பதிகள் என்றால் 'விசுவமும் சுமதியுமே' என்று அவன் நண்பர்கள் சுமதியின் காதுபடவே பேசிப் புகழ்ந்திருக்கிறார்கள். ஆனால்—அந்த ஒரு சம்பவம் அவள் வாழ்க்கையில் நிகழாமலே இருந்திருக்கக்கூடாதா?

விஷயம் இதுதான்: ஒரு நாள் காலை, மணி 9½ ஆகிவிட்டது; ஆபீஸ் செல்ல விசுவம் அவசர அவசரமாக உடுப்புகளையெடுத்து அணிந்துகொண்டு, வெகு நாட்களாகத் தொடாமல் கிடந்த பழைய "பூட்ஸ்" ஒன்றைப் போட்டுக்கொண்டிருந்தான். அப்போது இடது கால் 'பூட்ஸ்' உள்ளே வெளியே நீட்டிக்கொண்டிருந்த செருப்பு ஆணி ஒன்று 'நறுக்' கென்று விசுவத்தின் காலைக் குத்திவிட்டது.

"அப்பாடா!" என்று அரற்றியவாறே காலைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்துவிட்டான் விசுவம். அவன் கூச்சல் கேட்டு, கைவேலை யெல்லாம் அப்படியே போட்டுவிட்டு ஓடிவந்தாள் சுமதி.

"ஏன் என்ன?......"

"ஆணி உளளங்காலில் குத்திவிட்டது. இரத்தம் நிற்காமல் வருகிறது. சீக்கிரமே அதோ அந்த அலமாரியில் இருக்கும் போரிக் பௌடரை எடுத்து வா!"

சுமதி பரபரப்புடன் போரிக் பௌடரும் கட்டுப்போட துணி ஒரு நீளத்துண்டும், பஞ்சும் கொண்டு ஓடிவந்தாள்.

விசுவத்தின் இடது உள்ளங்காலில் கால் அங்குல ஆழம் ஆணி குத்திவிட்டிருந்தது. இரத்தம் 'குபு குபு' வென்று நிற்காமல் வந்து கொண்டிருந்தது. விசுவம் அணிந்திருந்த 'பாண்ட்' துணி கொஞ்சம் குருதி பட்டுக் கறையாகிவிட்டிருந்தது. காயத்தின் மேல் பௌடரை அப்பிக் கொஞ்சம் பஞ்சு வைத்துக் காலோடு ஒரு கட்டுக் கட்டிவிட்டு நிமிர்ந்தாள் சுமதி. அவள் கண்கள் விசுவத்தின் இடது கால் 'ஆடு சதை' க்கு அடியில் இருந்த வெண்மையான தழும்பைக் கண்டதும் நிலைகுத்தி நின்றுவிட்டன. அவள் இதயம் படபடத்தது. தலை சுழன்றது. நடுங்கியவாறே தன் விரலால் அந்த வெள்ளைத் தழும்பைத் தடவிப் பார்த்துவிட்டு, சட்டென்று நெருப்புச் சுட்டதுபோல் கையை இழுத்துக் கொண்டாள். அருவருப்பால் அவள் முகம் சுருங்கியது.

"என்ன இவ்வளவு தாமதம்? இன்று ஆபீஸ் போனாற் போலத்தான்" என்று கூறிக்கொண்டே திரும்பிய விசுவம் சுமதியை ஆச்சரியத்துடன் பார்த்தான்.

"என்ன சுமதி? விழி பிதுங்கப் பார்க்கிறாயே ஓ! அந்தத் தழும்பா? ஒன்றுமில்லை 'லாபரடரியி'ல் ஓர் அமில பாட்டில் கீழே விழுந்து உடைந்துவிட்டது. ஒரு பொட்டு அமிலம் காலில் பட்டுப் புண்ணாகிவிட்டது. அதன் ஆறிய தழும்புதான் அது!" என்று அசிரத்தையாகக் கூறிவிட்டு எழுந்தான் விசுவம். பிரமை பிடித்தவள்போல் உட்கார்ந்திருந்தாள் சுமதி. அவள் கனவுகள், மகிழ்வுடன் கட்டிய மனக் கோட்டைகள், யாவும் தூள்தூளாகப் போயின. கணவன் வார்த்தைகளை நம்பத் தயாராயில்லை அவள்!

என்ன அழகிருந்து என்ன பயன்? நம் கணவனும் 'ஒச்சம்' உள்ளவன்தான் என்ற எண்ணம் அவள் இதயத்தில் ஆழமாகப் புரையோடியிருந்தது. அந்தச் சந்தேகம் நாளுக்கு நாள் வளர்ந்து வலுவடைந்து கொண்டே வந்தது அவள் உள்ளத்திடை. விசுவத்தை அணு அணுவாக வெறுத்தாள். தன் துர் அதிர்ஷ்டத்தை எண்ணி உள்ளம் நைந்து புழுங்கிக் கொண்டிருந்தாள் சுமதி!

"ஆம் அது வெண்குஷ்ட நோயேதான். சந்தேகமில்லை. இன்று 'ஒரு பைசா' அகலம் பரந்திருக்கிறது, நாளைக்குக் 'காலணா' அளவு பரவும். பின்னர் ரூபாயளவு பெரிதாக; அப்புறம், அப்புறம்—உடல் முழுதுமே வெள்ளையாக......ஆ!" மேலே எண்ண இயலவில்லை சுமதிக்கு. இரத்த ஓட்டமே நின்றுவிட்டது போலிருந்தது அவளுக்கு.

அன்றுமுதல் சுமதி, விசுவத்தினிடமிருந்து விலகியே இருக்க ஆரம்பித்தாள். அவனை நெருங்கவும் நடுங்கினாள். பார்க்கும்போதே முகத்தில் அளவற்ற அருவருப்பு; —அங்க

மெல்லாம் குறைந்து அவலட்சணமாயிருக்கும் குஷ்டரோகியை நேரில் கண்டுவிட்டது போன்ற-அருவருப்பு!

ஆனால் விசுவம் சமாசாரமே வேறு. எதையும் ஆழ்ந்து யோசித்துப் பார்க்கும் வழக்கம் அவனிடமில்லை. சுமதியிடம் அளவுகடந்த பாசம் கொண்டிருந்தான் அவன். ஆனால் அதை வெளிக்காட்ட முயற்சிப்பதில்லை. ஏன்? நேரமிருப்பதில்லை. ஆம், அவனுக்குக் காதலைவிடத் தன் விஞ்ஞான ஆராய்ச்சிதான் முக்கியம். இளம் வயதிலேயே அரிய பெரிய விஞ்ஞான ஆராய்ச்சிகள் செய்து 'உலக மேதை' யாகத் திகழவேண்டும் என்ற பேராவல் அவன் உள்ளத்தூடே துடித்துக்கொண்டிருந்தது.

ஆகவே சுமதியின் நடத்தையில் ஏற்பட்ட மாறுதலை அவன் பொருட்படுத்தவேயில்லை. அதே ஆராய்ச்சி—விஞ்ஞானம்—அதுதான் அவன் பிரபஞ்சம்! வேறு எதுவும் அவன் கவனத்தை அதிகமாகக் கவரவில்லை.

ஆனால் இயற்கை இவர்கள் இருவரையுமே பொருட்படுத்தவில்லை. ஆம், சுமதி மூன்று மாத கர்ப்பிணி! அவள் அப்படியே அயர்ந்து விட்டாள். அவள் பயந்தபடியே நடக்கப் போகிறது! அவளுக்கு உலகமே சுழன்றது.

அன்று சனிக்கிழமை. விசுவம் மத்தியானம் மணி ஒன்றுக்கே ஆபீஸிலிருந்து வீடு வந்துவிட்டான். வீட்டினுள் நுழைந்ததும் அவனுக்குப் 'பகீர்' என்றது. வீடு திறந்து கிடக்க, சுமதி கூடத்தில் மேஜையருகே அலங்கோலமாகத் தரையில் விழுந்துகிடந்தாள். தன் கையிலிருந்த புத்தகங்களை அப்படியே விட்டெறிந்துவிட்டு ஓடிச்சென்று அவளைத் தூக்கினான். தன் ஸ்மரணையை இழந்து விட்டிருந்தாள் சுமதி. அவள் முகம் பேயறைந்தது போல் பீதியுடன் காணப்பட்டது. உடனே டாக்டருக்கு ஆள் அனுப்பினான் விசுவம்.

டாக்டர் வந்தார். சுமதியை நன்கு பரிசோதித்த பின்னர் ஊசி ஒன்று போட்டார். சுமதி கண்ணை விழித்தாள்.

"டாக்டர்! என்ன உடம்பு? உயிருக்கு... ஒன்றும்!"

"பயப்படாதீர்கள் ஒன்றுமில்லை. ஆனால் தங்கள் மனைவிக்கு வந்திருப்பது என்னவோ பெரியதொரு வியாதிதான்......"

"என்ன? பெரிய வியாதியென்றால்!"

"ஆம், ஹிஸ்டீரியா!"

விசுவம் ஸ்தம்பித்துவிட்டான், அவன் நாக்கு மேலண்ணத்தோடு ஒட்டிக்கொண்டது. பேசமுடியவில்லை.

"தங்கள் மனைவியின் மூளைக்கு அதிர்ச்சி தரும் செய்தி ஏதாவது சொன்னீர்களோ சமீபத்தில்?"

"இல்லையே டாக்டர்! ஆனால் சிலகாலமாக நான் அவளைச் சரியாகக் கவனிப்பதில்லை என்பது தென்னவோ உண்மை!"

"தற்போது ஒன்றும் பயமில்லை, நாளை நடப்பதைப்பற்றி நான் ஒன்றும் கூறுவதற்கில்லை. தங்கள் மனைவி இங்கு இருப்பது நல்லதல்ல. இடம் மாறவேண்டும். அவள் மனம் மாற—மகிழ்வுடன் எப்போதும் இருக்க ஏதாவது வழி செய்யவேண்டியது அவசியம். எந்தப் பெரிய சமாசாரமும் கேட்டுத் தாங்கக்கூடிய சக்தியில்லை அவளுக்கு. மேலும் கர்ப்பவதி..."

விசுவம் பலமாக யோசனை செய்தான். கடைசியில் சுமதியின் பிறந்த வீட்டுக்கு அவளை அனுப்புவதுதவிர வேறு வழியொன்றும் புலப்படவில்லை. தன் மாமனுருக்குப் பெண்ணை உடனே வந்து அழைத்துக்கொண்டு போகுமாறு கடிதமெழுதினான்.

சுமதியின் உடல்நிலை குணப்பட்டு வந்தது. ஆனால் மனநிலை? தான் 'கர்ப்பவதி' என்று அறிந்ததுமுதல் அவள் பயம் பின்னும் அதிகரித்தது. "குஷ்டரோகிக்குப் பிறக்கும் குழந்தை குஷ்டரோகியாகவே......" அந்த எண்ணந்தான் அன்று அவள் மூளைக்குப் பெருத்த அதிர்ச்சியை அளித்து நினைவிழக்கச் செய்தது.

காரணமற்ற சந்தேகம்-கணவனிடம் குறையுள்ளது போன்ற சந்தேகம், மேலும் கருத்தரித்துவிட்டதனால் சிசுவின் பிறப்புப்பற்றிய அந்தப் பயம்—இவற்றால் அவள் மூளையதிர்ச்சியடைந்து ஏற்பட்டதுதான் 'ஹிஸ்டீரியா'. 'அவள் மூளையே கலங்கக்கூடிய அளவுக்கு அவ்வளவு பெரிய செய்தி என்ன' என்று தன் மூளையைக் குழப்பிக்கொண்டு பார்த்தான் விசுவம். ஒன்றும் புரியவில்லை அவனுக்கு!

சுமதியிடம் காணப்பட்ட மாறுதலை நன்கு கவனிக்க ஆரம்பித்தான் இப்போது விசுவம். அவளுடைய அந்தப் பீதியடைந்த முகம் தெளியவேயில்லை. தன்னைக் காணுந்தோறும் காட்டும் வெறுப்பையும் கவனிக்கத் தவறவில்லை அவன். அதனால் அவன் சுமதியின் பேரில் கோபமோ, ஆத்திரமோ கொள்ளவில்லை.மாறாக அதிக அன்பும் பச்சாத்தாபமுமே காட்டினான். அவளுடைய அந்த வியாதியின் கோளாறுதான் காரணமென்றெண்ணியது அவன் உள்ளம்!

### 3

பிறந்தகம் வந்த சுமதி தன் பெற்றோருடன் அதிகமாக ஒன்றுமே பேசுவதில்லை. ஏன் தன் அறையைவிட்டு வெளிவருவதேயில்லை. அவள் சந்தேகம், குறை அவள் உள்ளத்திடையே குமைந்து தவித்தது. அவ்வளவு வெறுப்பிலும் தன் கணவனிடமிருந்து, ஏதாகிலும் கடிதம் வராதா என்று சில சமயம் அவள் பேதையுள்ளம் ஏங்கும்! காரணம் அவளுக்கே விளங்குவதில்லை.

சுமதியின் உடம்பு நாளுக்குநாள் இளைத்துக்கொண்டு வந்ததுகண்டு அவள் தாய் தந்தையர் மிகவும் பயந்துவிட்டனர். அவள், மனக்குறையை அறிய எவ்வளவோ முயன்றும் அவர்களால் முடியவில்லை.

"மிகவும் துர்ப்பலமான சரீரம்; முதல் பிரசவம் வேறு. ஆஸ்பத்திரியில் பிரசவிக்க அனுப்பிவிடுவதுதான் சிறந்தது" என்ற டாக்டரின் அபிப்பிராயப்படி சுமதி ஆஸ்பத்திரியில் அநுமதிக்கப்பட்டாள்.

ஆனால் ஆச்சரியம்! ஒருவருமே எதிர்பாராத வகையில் ஒரு ஆபத்துமின்றி ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள் சுமதி.

இரவு மணி பத்து அடித்தது ஆஸ்பத்திரி கடிகாரத்தில். இரவு வேலைக்கு வந்த டாக்டர்கள், நர்ஸுக்கள் தவிர ஏனையோர் ஒவ்வொருவராக ஆஸ்பத்திரியைவிட்டு வெளியேறிக்கொண்டிருந்தனர். மரண அமைதி நிலவிக்கொண்டிருந்தது நோயாளிகள் படுத்திருந்த அந்த வார்டில்.

சுமதி அப்போதுதான் தன் சுய நினைவை யடைந்தாள். மின்சார விளக்கின் வெளிச்சம் அவள் மூடிய கண்களினூடேயும் புகுந்து கூசச்செய்தது. பக்கத்தில் கிடந்த குழந்தை சிணுங்கி யழுதது.

"குழந்தை!"–சென்றுபோன எண்ணங்கள்–சம்பவங்கள் ஒரு நொடியில் சுமதியின் நினைவுக்கு வந்தன. ஆம், தனக்குக் குழந்தை–ஆஹா! "புதிதாகத் தாய்மை யடைந்த அந்த உணர்ச்சி—சந்தோஷ உணர்ச்சி, மின்னல் போல் அவள் உள்ளத்தே பாய்ந்து புளகாங்கித மடையச்செய்தது. அடுத்த கணம்–ஐயோ அந்தப் பழைய பயம் அவள் உள்ளத்தைத் துடித்து நடுங்கச் செய்தது.

"குழந்தை ஒரே வெள்ளையாய்—வெண்குஷ்டம் பிடித்து..." விருட்டென்று குழந்தையை அணைத்திருந்த கையை இழுத்துக்கொண்டாள். அவள் உடல் படபடத்தது. மெதுவாக நடுங்கியவாறே கண்ணைத் திறந்து குழந்தையைப் பார்த்தாள்.

அறையின் மின்சார மெர்க்குறி விளக்கின் வெளிச்சத்தில் நல்ல சிகப்புடன் அழகாகப் பிறந்திருந்த குழந்தை அவள் கண்களுக்கு ஒரே வெள்ளையாக......

"வீல்!" என்று கிரீச்சிட்டாள் சுமதி. திடுக்கிட்டுப்போன குழந்தையும் 'வீல்' என்று கத்தியது. 'நர்ஸ்' இருவர் ஓடிவந்தனர் சுமதியின் படுக்கைக்கு. அவள் நினைவு இழந்துவிட்டாள்—மறுபடியும் 'ஹிஸ்டீரியா!'

இந்தத் தடவை டாக்டர்களுக்குச் சிறிதும் நம்பிக்கை உண்டாகவில்லை. சுமதியின் பெற்றோர்கள் ஊணுறக்கமின்றி நாள் கணக்காக அவள் படுக்கையருகிலேயே கல்லாய்ச் சமைந்துபோயிருந்தனர். விசுவத்திற்கும் தந்தி பறந்தது.

சுமதியின் நிலையில் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை. மூன்று பெரிய டாக்டர்கள் தங்கள் வித்தையெல்லாம் காட்டினர். இந்த நிலையில் அவளுடைய 'டெம்பரேச்சர்' படிப்படியாக இறங்கி, ஜன்னியில் கொண்டுவந்து விட்டது! டாக்டர்களுக்கிருந்த கொஞ்சநஞ்சம் நம்பிக்கையும் பறந்துவிட்டது.

மூன்றாம் நாள் காலை. சுமதியின் உடல் நிலையில் பெருத்தமாறுதல் ஏற்பட்டது. ஆம், அவள் மறுபடியும் தெய்வாதீனமாகப் பிழைத்துவிட்டாள்! ஆனால்–ஜன்னியினால் அவள் இடதுகை சுவாதீனத்தை இழந்துவிட்டது.

இரண்டாம் தடவையாகச் சுமதி தன் சுய நினைவை அப்போதுதான் பெற்றாள். தேகத்தில் ஒவ்வோர் அணுவும் அவளுக்குக் கடுத்தது. மறுபடியும் பழைய ஞாபகங்கள்—மூளைக் கொதிப்பு—ஐயோ!......

"கிருஷ்ண விக்கிரகம்போல் குழந்தை பிறந்திருக்கையில் இவ்வளவு பெரிய வியாதியை யல்லவா கொண்டுவந்து விட்டாள்?"

"இனி, குழந்தையின் கதி என்ன வாகுமோ?"

"ஹூம். எங்கேயோ எதையோ கண்டு மிகவும் பயந்துபோயிருக்கிறாள். அதனால்தான் இவள் மூளை இப்படி அடிக்கடி அதிர்ச்சி யடைகிறது!" என்ற 'நர்ஸுகள்' இருவர் சுமதியின் நாடியைப் பரிசோதித்தவாறே பேசிக்கொண்டிருந்தனர்.

அவர்கள் பேசும் ஒவ்வோர் வார்த்தையையும் கண் திறக்காமல் கேட்டுக்கொண்டிருந்தாள் சுமதி. அவளுக்கு அளவிறந்த ஆச்சர்யம்! "என்ன? அப்படியுமிருக்குமா? கிருஷ்ண விக்ரகமாகவா என் குழந்தை இருக்கிறது?

ஒரே வெண்குஷ்டமாயல்லவா.........பார்த்த ஞாபகம்?......ஆஹா! அவர்கள் சொன்ன படியே குழந்தை இருந்துவிட்டால்........" உடைந்த அவள் உள்ளம் அலை பாய்ந்து தவித்தது; ஆயிரம் தெய்வங்களை வேண்டிக் கொண்டது.

மறுபடியும் கண்களைத் திறந்து பார்த்தாள்,

"என்னம்மா சுமதி! உடம்பை என்ன பண்ணுகிறது?" என்று ஆதுரத்துடன் துக்கம் தொண்டையை அடைக்கக் கேட்டார் அவள் தந்தை.

"அப்பா......குழந்தையை...நான் நன்ருக ......பார்க்க..." சுமதியின் வார்த்தை தடைபட்டது. வார்த்தைகள் குழறின. 'நர்ஸ்' உடனே அருகில் கிடந்த குழந்தையைத் தூக்கிக் காண்பித்தாள்.

"சின்னஞ்சிறு குழந்தை..." ஆச்சர்யத்துடன் பார்த்தாள் சுமதி." ஆம். கிருஷ்ண விக்கிரகம்தான். ஒரு வெள்ளை மச்சம்கூட இல்லை! அப்பாடா! குழந்தை பிழைத்தது. அவள் ஆழ்ந்த பெருமூச்சு விட்டாள். மனதிலிருந்த பெரிய சுமை இறங்கினது போலிருந்தது அவளுக்கு. தன் தலையை ஒருபுறமாகத் திருப்பினுள். அடுத்த படுக்கையருகே டாக்டருடன் ஏதோ மெதுவாகப் பேசியவாறே



விசுவம் நின்றுகொண்டிருந்தான். சுமதியின் முகத்தில் அருவருப்பு கோடிட்டது. அவளையும் மீறி அவள் கண்கள் விசுவத்தின் இடது காலைத்தான் நோக்கின.

ஆனால்! பின்னும் ஆச்சர்யம்! "அந்த வெள்ளைத் தழும்பு என்னவாயிற்று? இடது காலில்தானே-பைசா அளவுக்குப் பரவியிருந்தது?—எப்படி மறைந்து போயிற்று. ஒரு வேளை அவர் சொன்னதுபோல வெந்த புண்ணுடைய தழும்புதானோ? அப்போது தன்னுடைய சந்தேகம்?..." சுமதியின் மனத்திடையிருந்த அந்தச் சிறிய சுமையும் இறங்கி விட்டது போன்றதோர் உணர்ச்சி ஏற்பட்டது அவளுக்கு. தன் உடம்பிலே புதிய பலம் பெற்றுவிட்டதுபோலுணர்ந்தாள்.

விசுவமும் டாக்டரும் திரும்பிச் சுமதியிடம் வந்தனர். சுமதியருகில் உட்கார்ந்துகொண்டு விசுவம் அவள் கரங்களைத் தன் கரத்துடன் சேர்த்தணைத்துக் கொண்டான். அவளைக் கூர்ந்து நோக்கினான். அவள் கண்கள் கண்ணீரால் நிரம்பியிருந்தன.

"சுமதி உன் மனக்குறை என்ன? நான் என்ன உனக்கு அன்னியனா? கடந்த மூன்று தினங்களாக நானும் டாக்டர்களும், உன் அப்பா அம்மாவும் தவித்த தவிப்புக்கும்...... நல்லவேளை.........இந்தமட்டும் உன் இடது கையுடன் போயிற்று......" சட்டென்று நாக்கைக் கடித்துக்கொண்டான் விசுவம். டாக்டர் அவனை முறைத்துப் பார்த்தார்.

நிரம்பிய உவகையுள்ளத்துடன் விசுவத்தின் முகத்தையே பார்த்தவாறு கேட்டுக்கொண்டு வந்த சுமதி திடுக்கிட்டாள்.

"ஏன்?......என் கைக்கு என்ன வந்துவிட்டது?"

"ஒன்றுமில்லை சுமதி! ஒன்றுமில்லை......" என்று தடுமாறியவாறே டாக்டரைப் பார்த்தான் விசுவம்.

"இல்லை என்னவோ உங்கள் மனதிலிருக்கிறது. சொல்லித்தானாகவேண்டும்...!"

"இது என்ன பிடிவாதம் சுமதி! பழையபடி உன் மூளையதிர்ச்சியடைந்துவிடும். உடம்பு குணமானதும் அவசியம் சொல்லுகிறேன்..."

"இல்லையில்லை. என் மூளை மறுபடியும் அதிர்ச்சியடையச் சந்தர்ப்பமில்லை. நான் கொண்டிருந்த வீண்பயம் தெளிந்துவிட்டது. கடவுளருளால் என் சந்தேகம் பொய்த்துவிட்டது......நீங்கள் சொல்லித்தானாகவேண்டும்..."

விசுவம் பரிதாபமாக டாக்டரைப்பார்த்தான்.

"ஒன்றுமில்லையம்மா! உங்களுக்குச் 'ஜன்னி' கண்டதினால் இடதுகை கொஞ்சம் மரத்துப் போயிருக்கிறது. ஆனால் உடல் வலுப்பெற்றதும் சுவாதீனத்துக்கு வந்துவிடும் பயப்படவே அவசியமில்லை......" என்றார் டாக்டர்,

சுமதியின் தலையில் யாரோ பலமாக அடிப்பது போலிருந்தது. "என்ன? ஏன் இடதுகை சுவாதீனமிழந்து விட்டதா?...ஆஹா......என் சந்தேகத்திற்குத் தகுந்த தண்டனை கடவுள் அளித்து விட்டார்..." சுமதியின் கண்கள் நீரைப் பெருக்கின. தன் இடக்கையை அப்போதுதான் அசைத்துப் பார்த்தாள். பெரிய உலக்கை தொங்குவதுபோல் கனத்தது அவளுக்கு.

விசுவத்தின் கரத்தைத் தன் மார்புடன் சேர்த்து அணைத்தவாறே பொங்கும் அழுகையுடன்,

"என்னை, நீங்கள் என்றுமே வெறுக்கமாட்டீர்களே?" என்று கேட்டாள் சுமதி.

ஆம். அவள் மனதில் ஒரு புதிய குறை புகுந்துவிட்டது இப்போது.

"ஒரு குறையுமேயில்லாத கணவனைக் குறையுடையவனாக எண்ணி, அணுவணுவாக வெறுத்து வந்தேனே, அப்போது அவர் என்னை வெறுக்கவேயில்லை. இப்போது உண்மையாகவே குறை வந்துவிட்டதே! இப்போது அவர் என்னை வெறுக்காதிருக்க வேண்டுமே!" என்பதுதான் அவளுக்குத் தற்போதுள்ள குறை!



# ரூபவதி ஜி. ஸௌதாமினி தன் அழகிய சருமத்தைப் பாதுகாக்க லக்ஸ் டாய்லட் சோப்பை தேர்ந்தெடுத்ததன் காரணங்களை இதோ கூறுகிறார்



**அவர் சொல்வதாவது:**

"இந்த ஒரு விஷயத்தில் மட்டும் எந்த ஸ்திரீயும் ஒருபொழுதும் கவனக்குறைவாக இருக்கக் கூடாது — அதுதான் தனது வதனத்தைப்பாதுகாப்பது. நான் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகிப்பதால் என் சருமத்தைப்பற்றி எப்பொழுதும் பெருமை கொள்கிறேன். இந்த அழகிய வெண்மையான சோப்பினால் பாதுகாத்துக்கொள்ளும்வரை என் சருமத்தில் மாசுமருக்கள் ஏற்படுமோ என்று கவலைப்படவேண்டிய அவசியமில்லை என்பது எனக்குத் தெரியும் மேலும்," அவர் தொடர்ந்து கூறுகிறார் "என்னைப் போல் லக்ஸ் டாய்லட் சோப்பின் மனதைக்கவரும் நீடித்து நிற்கும் பரிமளத்தை நீங்களும் விரும்புவீர்கள்."




☆ இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப்நுரை சருமத்தையும் வசிகரமாக செய்யும்!

**சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 254-172 TM




மைந்த! கல்லும் கரடுமாய், மண்மேடு மலைமேடாய், பொலிவும் அழகும் இழந்து பொட்டலாகிக் கிடக்கும் இந்த அநுரதபுர நகரம், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னே இலங்கையை ஒரு குடைக்கீழ் ஆண்ட சிங்கள மன்னர்களின் இராசதானியாய், புத்தபிரானின் பொன் மொழிகளை உபதேசித்து வந்த துறவிகளின் தலைமைப் பீடமாய் விளங்கியது. அந்நகர் எங்கும் பௌத்த விகாரங்கள். அரண்மனைகள், மண்டபங்கள்......அங்கெல்லாம் சிற்பக் கலையின் மேன்மைக்குச் சான்று பகரும் சிலைகள். இன்று ஆந்தையும் வௌவாலும் உறைந்து கிடக்கும் இந்தக் கலைக்கூடங்களில் அன்று அழகுத்தேவி நடமாடினாள். காலையிற் பார்த்தோமோ அந்தக் குகையில், பல்லாண்டு கடந்தும் அந்தச் சுவரிலிருந்த சித்திரங்களில் இன்னமும் வர்ணம் மங்கவில்லை. சிலைகளிலும் உயிர்த்துடிப்பு இருந்துகொண்டிருக்கிறது.

---

ஆனாலும் அந்த அரசமரத்தின் கீழ்ப் பூர்த்தியடையாமல் இருக்கிறதே ஓர் சிலை......சிற்பியின் கற்பனை முற்றுப்பெறாததாய், ஒவ்வொரு நாளும் செத்துக்கொண்டு, ஆனால் அதன் ஒடுங்கிய இடையிலும், விம்மிப் பொருமும் மார்பகங்களிலும், மள மள வென்றிருக்கும் புஜங்களிலும் எந்நாளும் வாழ்ந்துகொண்டு இருக்கும் அந்தச் சிலைக்குக் கண்கள் மட்டும் இருக்குமானால் அது கவனிப்பார் அற்று இந்த அரசமரத்தின் கீழேயே இன்னமும் இருக்காது.

அந்தச் சிலை ஏன் பூரணத்துவம் அடையவில்லை? அந்தச் சிலையைச் செய்த கலைஞன் ஏன் அதை அந்தமட்டோடு விட்டுவிட்டான்? என்பதைத்தான் இப்போது உனக்குச் சொல்லப் போகிறேன். கதை என்றுதான் வைத்துக்கொள்ளேன். தூக்கமும் வரவில்லைதானே!

## 2

புத்ர! கலிங்கப் போரில் வெற்றிகண்ட அசோகன், போரில் மன்னுயிர்கள் பல்லாயிரவர் மாண்டு மடிந்ததைக் கண்டு மனங்கசிந்து, புத்தபிரானின் கொல்லாமை விரதத்தை மேற்கொள்ளத் தீர்மானித்தான். அந்த விரதத்தை, புத்தபிரானின் பொன்மொழிகளை, வெளிநாடுகளிலும் பரப்ப ஆர்வங்கொண்டான். ஆர்வமேலிட்ட அசோகன் இலங்கைக்குத் தன் மைந்தனையே புத்த சமயத்தைப் போதிக்கும்படி அனுப்பினான்.

அசோகனின் மைந்தன் மிகுந்தன் பெருமுயற்சியோடு இலங்கை அரசன் தீசனைப் புத்த சமயி ஆக்கினான். மன்னன் தழுவிய சமயத்தை இலங்கை மக்களும் தழுவினர்.

புதிய மதத்தைக் கைக்கொண்ட மன்னன் எங்கும் பௌத்த விகாரங்களையும், சமாதிகளையும், கோயில்களையும் கட்டினான்.

பௌத்த சந்நியாசிகட்கு மடங்களையும், சத்திரங்களையும் நிறுவிக்கொடுத்தான். பௌத்த மதத்தைப் பரப்புவது, விகாரங்களைக் கட்டுவது, துறவிகளைப் போஷிப்பது என்பவைகளே மன்னன் கவலையாகிவிட்டன.

தீசனுக்குப் பின் வந்த மன்னர்கட்கும் இவைகளே கவலையாகிவிட்டன. இதனால் நாட்டின் அரசியல் நிலை சீர்குலைந்தது. நீர்ப்பாசன வேலைகள் கைநெகிழவிடப்பட்டன. படையினர் கலைக்கப்பட்டனர். எல்லாருக்கும் ஒரே வேலை. அதுதான் விகாரங்களையும், சமாதிகளையும் கட்டுவது நூறு வருடங்களாக இதே நிலையிருந்தது.

இந்த நிலையில் அரசன் கீழ்ப் பிரதானிகள் எல்லோரும் அரச ஆணையை மீறி, தத்தமக்கென்று சில பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டு அரசாண்டனர். நாட்டிற் பஞ்சம் தலைவிரித்தாடியது. மக்களிடையே பசி...பட்டினி...... குழப்பம்...

இலங்கைத்தீவின் அராஜகநிலை சோழ அரசவையினர் காதுக்கு எட்டியது. அழகிய இலங்கைத் தீவையும் அதன் நிறைந்த செல்வத்தையும் கைப்பற்ற இதுதான் தருணம் என அவர் கட்டுப்பட்டது. சோழ அரசிளங்குமாரன் எல்லாளனை இலங்கைக்குப் பெரும் படையோடு அனுப்புவதென அரச சபையினர் தீர்மானித்தனர். தம்பி! சிலையைப்பற்றிக் கதை சொல்கிறேன் என்று சொல்லிவிட்டு ஏதேதோ சொல்கிறேன் என அலுத்துக்கொள்கிறாயா? இதுவரை கதைக்கு நிலைக்களனான நிலைமையைத்தான் சொன்னேன், இனிமேல் தான் கதை சொல்லப் போகிறேன். கேள்; முதலில் குளிர் காற்றடிக்கிறது சாளரத்தை மூடிவிடு.

## 3

சோழநாட்டிற் போர் முரசு ஒலித்தது. வயதுவந்த வாலிபர்கள் எல்லோரும் வேலையும் வாளையும் வில்லையும் தூக்கிக்கொண்டு அரண்மனையை நோக்கி விரைந்தோடினர். கமக்காரர், வாணிபர், படகோட்டிகள், சிற்பிகள், கொத்தர்கள், கொல்லர்கள் முதலாய எத்திறத்தோரும் போர்ப்படையைத் தூக்கிக்கொண்டு அரண்மனையை நோக்கிக் கடுகினர். அரண்மனை முன்றிலில் அரச ஆக்ஞையை எதிர்பார்த்துக்கொண்டு யுத்தகளத்திற்குப் போக எல்லாரும் தயாராக நின்றனர். அந்தச் சேனசமுத்திரத்திலே சிற்பி சிவநாயகனும் நின்றுகொண்டிருந்தான்.

சிவநாயகன் சிற்ப வித்தையிலே தேர்ச்சி பெற்று, இரண்டு நாட்கட்கு முன்னர்தான் தன் குருவின் ஆச்ரமத்தை விட்டு வீட்டுக்கு வந்திருந்தான். ஆச்ரம வாழ்வில் அவன் ஈட்டிக் கொண்ட செல்வம் இரண்டு. ஒன்று, தன் குரு தெய்வஞ்ஞரின் பூரண அன்பிற்குப் பாத்திரமானது அவரிடமிருந்து சிற்பக்கலையின் நுணுக்கங்களை—அவர் பிறருக்குச் சொல்லிக்கொடுக்காத ரகஸ்யங்களை—க் கைப்பற்றிக்கொண்டது. மற்றொன்று தெய்வஞ்ஞரின் பூரண ஆசியோடு கிடைத்த அவர் மகள் செந்திரு.

கல்லுக்குக் கல் கலீர், கலீர் என்று குதித்தோடும் நதி தீரத்தில், கோரைப் புல்லால் வேய்ந்த குடிசையில், சிற்பக்கலையை அக்கலைக்காகவே செய்துகொண்டிருந்த தன் தந்தைக்குச் சிச்ருஷை செய்துகொண்டிருந்தாள் செந்திரு. தெய்வஞ்ஞரின் குடிசைக்குள் நுழைந்தவர் பலர், 'சிலையா செந்திருவா இது' என்று ஐயுறும்போது இமைவட்டத்துள் அடங்கிக் கிடக்க முடியாமற் துடித்துக்கொண்டிருக்கும் அவள் நீண்ட விழிகள் அவள் செந்திருவே என்பதைக் காட்டிக்கொடுத்துவிடும். ஒடுங்கியிருந்த அவள் இடை உடம்பின் பாரத்தைத் தாங்காமல் ஒடிந்து விழமுயலும்போது அவள் செந்திருதான் என்பதைச் சிவநாயகனும் கண்டுபிடித்துவிடுவான். அவள் வளர்ந்து பெண்ணான பின்னர்தான் தெய்வஞ்ஞரும் சிலை செய்யக் கற்றுக்கொண்டிருக்கவேண்டும்!

எழிலே உருவான செந்திரு சிவநாயகனின் அடக்க ஒடுக்கத்தையும், அவன் வித்தையில் அடைந்துவரும் தேர்ச்சியையும் கண்டு அவனை விரும்பினாள். பெண்மை தோய்ந்த அவளது யௌவன முகம் அவனை ஆகர்ஷித்தது.

சிவநாயகனும் செந்திருவை விரும்பினான்.

இருவர் கருத்தையும் அறிந்த தெய்வஞ்ஞர் அவர்களை இணைத்துவைத்துவிட்டு, தம் உளி முதலான ஆயுதங்களையும் அவர்கட்கே கொடுத்துவிட்டு, தீர்த்த யாத்திரைக்குப் போய் விட்டார்.

சிவநாயகனும் செந்திருவும் வீட்டுக்கு வந்து இன்னமும் இரண்டு நாட்கள்கூட ஆகியிருக்காது. அதற்குள் போர் முரசு ஒலித்தது.

## 4

புத்ர! போர் என்றதும் பயமாய் இருக்கிறதா? இந்த இருபதாம் நூற்றாண்டில் வசிக்கும் நாம் போருக்கு மட்டுமல்ல, அதோடு சேர்ந்துவரும் அகவிலைக்கும் பயமடைந்துதானாகவேண்டும்!

ஆனால் 'அந்தக் காலத்தில் போர் என்ற சொல்லைக் கேட்டாற் சோழரின் பயம் பூரித்

தது: மார்பு விம்மியது. அவர்கள் வாழ்க்கையே போரும் காதலுந்தான்.

போர் முரசு கேட்ட சிவநாயகன் தன் படைக்கலங்களைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டான்.

செந்திரு பதறினாள். இணைந்து இன்னம் இரண்டு நாட்கள்கூட ஆகவில்லை. அதற்குள்ளே பிரிவதா? பொருளீட்டும் நோக்கோடு போனாலும் திரும்பி வருவார் என்ற எண்ணத்தில் மனம் ஆறிப்போய்விடும். ஆனால், போர் முனைக்குப் போகிறவர்...அவள் இரு விழிகளிலிருந்தும் நீர் அருவியாக ஓடியது. சிவநாயகனும் கண்ணீர் விட்டான்.

மறுகணம் செந்திரு இந்த வேண்டாத நினைவிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டாள். போரிலே புருஷனும், சகோதரனும் மாண்ட செய்தி கேட்டுத் தன் சிறு மைந்தனையே அலங்கரித்து அமர்க்களத்திற்கு அனுப்பிய தாயின் மரபிலே தானும் வந்தவள் என்பதை நினைவு கூர்ந்து கொண்டாள்.

வேலை எடுத்து வந்து சிவநாயகன் கையிற் கொடுத்தாள். நெற்றியிலே திலகமிட்டு "வெற்றி வீரராகத் திரும்புங்கள்" என்று அவள் சொன்னபோது அவள் கண்கள் ஆநந்தக் கண்ணீருகுத்தன.

"சோழ சைனியம் இதுவரை தோல்வியையே கண்டதில்லை. வெற்றி வீரனாகத்தான் வருவேன்" என்று சொல்லிக்கொண்டே சிவ



நாயகன் அவளைத் தழுவிக்கொண்டான். பின்னர் கடுகி ஓடினான் அரண்மனைக்கு.

அரண்மனை முன்றிலில் திரண்டு நின்றபடை இளவரசன் எல்லாளன் தலைமையில் இலங்கைக்கு வழிகொண்டது; பத்து நாட்களின் பின் மகாவலிகங்கைக் கழிமுகத்திற் கப்பல் விட்டிறங்கியது. அநுரதபுரத்தை நோக்கி முன்னேறியது.

தம்பி! ஏற்கனவே சொன்னேன் அல்லவா இலங்கை அரசாட்சி சீர்குலைந்து கிடந்தது என்று. பொது ஜனங்களும் சைனியமும் இலங்கை மன்னனோடு ஒத்துழைக்கவில்லை. எல்லாளனும் இலங்கை மன்னன் அசேலனை இலகுவில் வெற்றிகொண்டு, தலைநகரையும் தன்னடிப்படுத்தினான். இவ்வளவும் நான்கு வாரங்களுக்குள் நடந்துவிட்டன. மைந்த! இதில் ஆச்சரியம் ஏதும் இல்லை. எப்போது ஜனாபிமானம் அரசனுக்குச் சார்பாக இல்லாமற் போய்விடுகிறதோ அந்தக்கணமே அரசாங்கம் புதைகுழிக்குப் போகவேண்டியதுதான்.

## 5

புத்ர! சார்ந்துகொண்டேயிருந்தால் நித்திரையாகிவிடுவாய்; நிமிர்ந்திருந்துகேள். எல்லாளன் போரில் மட்டும் அல்ல, ஆட்சி செய்வதிலும், நீதி செலுத்துவதிலுங்கூட வல்லவன். இலங்கையின் பூர்வ சரித்திரத்தை இலக்கியச் சுவைபடக் கூறும் நூலான மகாவம்சத்திலே சிங்களச் சரித்திராசிரியர்களே அவனை வெகுவாகப் பாராட்டி எழுதியிருக்கின்றனர்.

அவன் அரசனானதும் காட்டை நாடாக்கினான். கோயில்களைக் கட்டினான். குளங்களைப் புதுப்பித்தான். பௌத்த சமயிகளையும் தன் சமயத்தவரைப் போலவே பாவித்து யாவர்க்கும் வழிபாட்டிற் சுதந்திரமளித்தான்.

எல்லாளனோடு வந்த படையினரில் ஒரு பகுதியினர் சோழதேசம் மீண்டனர். மற்றையோர் ஆக்க வேலைகளைச் செய்வதில் ஈடுபட்டு இங்கேயே தங்கிவிட்டனர். சிவநாயகனும் நின்றுவிட்டான்!

மைந்தா! "கெதியாகத் திரும்புகிறேன்" என்று செந்திருவிடம் சொல்லிவிட்டு வந்த சிவநாயகன் ஏன் இலங்கையிலேயே தங்கிவிட்டான் என்று கேட்கிறாயா? அதுதான் கதையின் முக்கியமான கட்டம். கவனமாகக் கேள்.

சிவநாயகன் சிற்பக் கலையை கற்றிருந்தானேயன்றிக் கற்ற வித்தையைக் இன்னமும் சரிவரப் பிரயோகித்துப் பார்த்ததில்லை. தனது சிலை என்று சொல்லிக்கொள்ள, தான் சொந்தமாகச் செய்தது என்று சொல்லிக்கொள்ள ஏதும் இல்லை. தான் செய்யும் முதலாவது சிலையை அவளாகவே செய்துவிட்டால்......... சிவநாயகன் சிந்தித்தான் இப்படி.

மற்றைய வீரர்கள் இலங்கையில் இருந்து போகும்போது பொன்னும் மணியும் கொண்டு போவார்கள். ஆனால் நான் அவளையும் என்னையும் இணைத்துவைத்த கலையின் பேரால் என்றும் அழியாத காதற் பரிசு ஒன்றை இங்கிருந்தே எடுத்துக்கொண்டு போவேன். எந்த வித்தையைக் கற்கப் போய் அவளைத் துணைவியாகப் பெற்றுக் கொண்டேனோ, அந்த வித்தையின் மூலம் அவளைத் திகைக்க வைக்கவேண்டும்......... சிவநாயகனின் சிந்தனை தீர்மானமாகியது.

தன் காதலிக்குக் காதல் பரிசாக அவள் சிலையையே கொடுக்கத் திட்டமிட்ட சிவநாயகன் ஊருக்குப் புறம்பாக, இயற்கையன்னை பூரணப் பொலிவுடன் திகழும் வனத்தில், அரசமரத்தின் கீழே தன் குடிசையைக் கட்டிக்கொண்டான்.

அடுத்த விநாடியிலிருந்து கருங்கல்லில் டக், டக்கென்று விழும் உளியின் சத்தம் கேட்டது.

தந்தையின் ஆச்ரமத்தில் செந்திரு குதித்தோடும் கன்றை அடக்க முடியாமல் தவிக்கையில், இவன் அவளுக்கு உதவியாகப் போக, அவள் 'அதிகம் கஷ்டம் வேண்டாமே' என்று அவனைக் கேலி பண்ணிச் சிரித்துக் கண்களால் ஒருமாதிரி பார்த்தது......இதயத்தின் ஆழத்திற் பதிந்து விட்ட அந்தநிலை கல்லில் வளர்ந்தது.

புத்ர! சிற்பியின் கற்பனையை நாம் கலைத்து விடாமல் அவனை அரசமரத்தின் கீழேயே இருக்கவிட்டு, நாம் செந்திருவைப் பார்க்க இந்தியாவிற்குப் போவோம் வா.

## 6

தம்பி! சிவநாயகன் போருக்குப் போனநாள் தொட்டுச் செந்திரு, அவன் நினைவாகவே இருந்தாள்.

தன் கணவன் வெற்றியுடன் திரும்புவது போலவும், தன்னைக் கட்டியணைவது போலவும் பகலிற்கூடக் கனாக் கண்டாள்.

தந்தையின் ஆசிரமத்தில் அவருக்குத் தெரியாமல் தான் சிவநாயகனைச் சந்தித்தது. தந்தை

யிடம் பாடத்தைக் கவனியாமல் சிவநாயகன் தன்னையே பார்த்துக் கொண்டிருந்தது. எல்லாம் அவள் மனதில் ஒன்றன்பின் ஒன்ருக வந்து விழுந்து கொண்டிருந்தன.

நாளாக ஆக அவளுக்கு எல்லாவற்றிலும் ஓர் பிடிப்பின்மை, வெறுப்பு ஏற்பட்டது. ஊணை, உடையை, அலங்காரத்தை, உறக்கத்தை, மென்பஞ்சணையை எல்லாவற்றையுமே வெறுத்தாள். அவளால் வெறுக்கப்படாதது ஏதும் இல்லை. இந்தப் பிடிப்பற்ற மனோநிலையிற்கூடச் சிவநாயகன் வந்து விடுவான் என்ற நம்பிக்கை மட்டும் இருந்தது.

இந்நிலையில், இலங்கைக்குப் போரிடச் சென்றிருந்தவர்கள் வந்துவிட்டதாக ஊரிற் பரவிய செய்தி செந்திருவின் செவிகளிலும் எட்டியது. செந்திருவும் கவலை ஒழிந்து, சிவநாயகன் வரவைக் கணத்துக்குக் கணம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். நாட்கள், மாதங்களாயின. சிவநாயகன் வரவேயில்லை. செந்திருவின் மனத்தில் அவநம்பிக்கை பிறந்தது.

ஒருவேளை அவர் சண்டையில் மாண்டுவிட்டாரோ......? இந்த எண்ணத்தில் அவள் உள்ளத்திலே திகில் பிடித்துக் கொண்டுவிட்டது. அந்தத் திகிலோடு படுக்கையில் வீழ்ந்துவிட்டாள்!

"அவர் வந்துவிட்டாரா? என்பது அவள் நித்தியப் புலம்பலாகிவிட்டது. பாவம்! 'அவர்' அவள் நினைவோடே, தனிமையில் இருந்து கொண்டு தனக்குக் காதற்பரிசு செய்துகொண்டிருக்கிருர் என்பதை அவள் கண்டாளா?

படுக்கையில் விழுந்துவிட்ட சில நாட்களிலேயே அவள் இறந்து போனுள். சாகும் போதுகூட "அவர் வந்துவிட்டாரா?" என்று தான் கேட்டாளாம்,

மைந்த! துக்கமாயிருக்கிறதா? இன்னும் கொஞ்சந்தானிருக்கிறது அதையுங் கேட்டுவிடு.

## 7

சிவநாயகன் அல்லும் பகலும் அதே கவலையாய்ச் சிலையைச் செய்துகொண்டிருந்தான். சிலையும் முடிவடையுந் தறுவாயில் இருந்தது. செந்திருவின் ஒடுங்கிய இடை, கச்சணிந்த மார்பு, மாம்பழக் கதுப்புப் போன்ற கன்னங்கள் எல்லாவற்றையும் கல்லிலே வடித்துவிட்டான். கண்ணை மட்டும் திறந்து விட்டால் சிலை உயிர்பெற்றுவிடும். அதற்கு நேரத்தையும் காலத்தையும் எதிர்பார்த்திருந்தான் சிவநாயகன்.

ஒரு நாள் அவன் நண்பனுன அரண்மனைச் சேவகன் ஒருவன் குடிசைக்கு வந்தான். வந்தவன் "நண்ப; இந்தச் சிலையையாவது கெதியாக முடித்துவிடு; கண்டு களித்துக்



கொண்டிருக்கலாம்" என்றான். அவன் கண்களில் நீர் முட்டியிருந்ததைச் சிலையையே பார்த்துக்கொண்டிருந்த சிவநாயகன் கவனிக்கவில்லை.

"இங்கே வைத்துக்கொண்டிருக்கவா"? சிவநாயகன் கேட்டுவிட்டுச் சிரித்தான்.

"ஆம்; இங்கேதான் வைத்துக்கொள்ள வேண்டும். நீ யாருக்காக இதைச் செய்கிறாயோ அவள் இங்கு இல்லை. இந்த உலகிலிருந்தே போய்விட்டாள்" அவன் கண்களிலிருந்து நீருருண்டது.

"ஆ! செந்திரு!!" என்று கடைசி முறையாகக் கத்தினான் சிவநாயகன். மறுகணம் அவனுக்கு என்ன தோன்றிற்றோ தெரியாது. கிடந்த உளியை எடுத்துத் தன் மார்பிற் பாய்ச்சிக்கொண்டான்! இரத்த வெள்ளத்தில் அவன் சடலம் மிதந்தது!!

மைந்த! என்ன உன் கண்களிற் கண்ணீர்? உலகில் எந்த இன்பத்தையும் அநுபவித்திராத இளங் காதலர்கள் அகாலத்திற் போய்விட்டார்கள் என்பதற்காகவா? நாம் என்ன செய்யலாம்? 'காதலோ, கலையோ கடமையின் வரம்பை மீறும்போது அவை பூரணத்துவம் அடையா; புனிதமும் ஆகா' என்ற உண்மையைச் சிற்பி சிவநாயகன் மறந்தே விட்டான்.

ஆனால் அவன் காதற்பரிசாகச் செய்த அந்தச் சிலை—கண்மூடி மௌனியாய் முடிவடையாமல் நிற்கும் அந்தச் சிலை—அந்த உண்மையைத்தான் இன்னமும் உணர்த்திக் கொண்டு நிற்கிறது.

சரி, பன்னிரண்டு மணியாகிவிட்டதே. போய்ப் படுத்துக்கொள். நாளைக்கு வேறொரு கதை சொல்கிறேன். ●



கொண்டிருக்கலாம்" என்ருன். அவன் கண்க ளில் நீர் முட்டியிருந்ததைச் சிலையையே பார்த் துக்கொண்டிருந்த சிவநாயகன்கவனிக்க வில்லை.

"இங்கே வைத்துக்கொண்டிருக்கவா"? சிவநாயகன் கேட்டுவிட்டுச் சிரித்தான்.

"ஆம்; இங்கேதான் வைத்துக்கொள்ள வேண்டும். நீ யாருக்காக இதைச் செய்கி ருயோ அவள் இங்கு இல்லை. இந்த உலகி லிருந்தே போய்விட்டாள்" அவன் கண்களி லிருந்து நீருருண்டது.

"ஆ! செந்திரு!!" என்று கடைசி முறையாகக் கத்தினுன் சிவநாயகன். மறுகணம் அவ னுக்கு என்னதோன்றிற்ரே தெரியாது. கிடந்த உளியை எடுத்துத் தன் மார்பிற் பாய்ச்சிக்கொண்டான்! இரத்த வெள்ளத்தில் அவன் சடலம் மிதந்தது!!

மைந்த! என்ன உன் கண்களிற் கண்ணீர்? உலகில் எந்த இன்பத்தையும் அநுபவித்திராத இளங் காதலர்கள் அகாலத்திற் போய்விட் டார்கள் என்பதற்காகவா? நாம் என்ன செய்ய லாம்? 'காதலோ, கலையோ கடமையின் வரம்பை மீறும்போது அவை பூரணத்துவம் அடையா; புனிதமும் ஆகா' என்ற உண் மையைச் சிற்பி சிவநாயகன் மறந்தே விட்டான்.

ஆனுல் அவன் காதற்பரிசாகச் செய்த அந்தச் சிலை—கண்மூடி மௌனியாய் முடிவ டையாமல் நிற்கும் அந்தச் சிலை—அந்த உண் மையைத்தான் இன்னமும் உணர்த்திக் கொண்டு நிற்கிறது.

சரி, பன்னிரண்டு மணியாகிவிட்டதே. போய்ப் படுத்துக்கொள். நாளைக்கு வேருெரு கதை சொல்கிறேன்.



# "விட்டு விடுதலையாகி......
# சிட்டுக்குருவியைப்போலே"

**வங்கத் தமிழன்**

ஊஹூம். இப்பொழுது என்ன அவசரம்? அழைத்துக்கொண்டுவர முடியாதென்றால் முடியாதுதான்' என்று சற்றுக் கடுமையாகவே கூறினார் கோபாலய்யர்.

ஸௌமதி பதிலே பேசவில்லை. முகத்தைத் திருப்பிக்கொண்டு போய்விட்டாள். அவள் கடுங்கோபத்திலே கழுத்தைச் சட்டென்று அப்படித் திருப்பிக்கொண்டு சென்றதை அவர் கவனிக்காமலில்லை.

கோபாலய்யர் அவ்விதம் கூறியது சரியோ தப்போ யார் கண்டார்கள்? அவர்களுடைய கோபம் என்னவோ அதிக நாட்கள் நீடிக்கவுமில்லை. அடுத்த நிமிஷம் அவர் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார்.

இனிமேல் முடியவே முடியாது. போதுமடா போதும்! நானும் 55 வருஷங்களாக வாழ்க்கைச் செக்கைக் கூடியவரை திறமையோடே இழுத்துவந்துவிட்டேன். நானோ ஒரு தமிழ் உபாத்தியாயர். அதிலும் ரொம்ப சாதாரணம். என்னிடம் எவ்வளவு சக்தி இருக்கமுடியும்? முதல் மூன்று பெண்களையும் நல்ல இடங்களிலே கலியாணம் செய்து கொடுத்து அவர்கள் குடியும் குடித்தனமுமாகக் குழந்தைகளோடு, இப்பொழுது சுகமாகவே வாழ்ந்து வருகிறார்கள். மூத்தவளின் முதல் பிரசவம். இரண்டாமவளின் முதல் பிரசவம். பிறகு மூத்தவளின் இரண்டாம் பிரசவம் பின் மூன்றாமவளின் முதல் பிரசவம், அடே அப்பா! ஒன்றன்பின் ஒன்றாக இதே தொழிலாக அல்லவா இருக்கிறது. உழைப்பு! உழைப்பு!! உழைப்பு!!! துளியாவது ஓய்வு இருக்காதோ? கொஞ்சம் விசிராந்தியாக இருப்போம் என்றால் ஏது முடியாது போலிருக்கிறதே! இன்னும் எவ்வளவு காலம் இப்படியே இருந்துவரவேண்டுமோ? இல்லை, போகிற வழிக்கு ஏதோ பகவந் நாமத்தைச் சொல்லிக்கொண்டு இருக்கலாம் என்றால் எங்கே முடிகிறது? அந்தக் கடைக்குட்டி சரஸு புக்ககத்துக்குப் போய்ச் சரியாக ஆறு மாதங்களாகவில்லை. அதற்குள்ளே அவளை இங்கு அழைத்துக்கொண்டு வரவேண்டுமாம். காரணம் என்னவோ தெரியவில்லை. அங்கு இப்போது என்ன கஷ்டம் வந்துவிட்டது. ஆனால் ஸரஸுவிடமிருந்து இதுவரை ஒரு கடிதமும் வரவில்லை. ஸௌமதி என்னிடம் காரணமில்லாமல் ஏனோ இப்படி கோபித்துக் கொண்டிருக்கிறாள்? அவளைக் கூப்பிட்டு விஷயத்தை விளக்கி, சமாதானப் படுத்துவோம். இப்பொழுதெல்லாம் ரயில் பிரயாணம் அவ்வளவு லேசா? ஸரஸுவை அவள் புக்ககத்திலிருந்து இங்கு அழைத்து வருவதற்கும் பின் அங்கே கொண்டுபோய் விடுவதற்குமாக மொத்தம் 6 டிக்கட்டுகள். இன்னும் ரயிலுக்குப் போவதற்கும் ரயிலிலிருந்து வீட்டுக்கு வருவதற்குமாக வண்டிச் சத்தம் வேறு. இவற்றிற்கெல்லாம் எவ்வளவு செலவாகும்? சரி, அவள் இங்கு வந்தால் பத்து நாட்களிலே திரும்பிவிடப் போகிறாளா? இல்லை. அது நன்றாகத்தான் இருக்குமோ? குறைந்தது 2 மாதங்களாவது அவளை இங்கு வைத்துக் கொள்ளவேண்டும். இந்த ரேஷன் காலத்திலே அது சாத்தியமா? அதை நினைக்கும்போது அம்மம்மா!............ஊ.........ம். பெருமூச்சு விட்டுக்கொண்டார். பிறகு என்ன நினைத்துக்கொண்டாரோ என்னவோ?

"எலே, சந்தானம்! உன் பாட்டியை இங்கே கொஞ்சம் கூப்பிடு!" என்றார்.

பாட்டி! பாட்டி! என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே ஓடின பேரன் திரும்பி வரவே இல்லை. அந்தப் பயல் எங்கோ 'கம்' மென்று இருந்துவிட்டான், ஸௌமதியிடமிருந்தும் ஒரு பதிலையும் காணவில்லை. ஐயருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

எல்லோரும் எங்கேயோ தொலைந்து விட்டார்களே! கூப்பிட்டால் ஏனென்றுகூடக் கேட்பதற்கு முடியாமற் போய்விட்டது! எவ்வளவு முக்கியமான விஷயம்! இரண்டுபேருமாகக் கலந்து ஆலோசித்து ஒரு முடிவுக்கு வரலாமென்று கூப்பிட்டால் என்னவோ ரொம்ப அலட்சியமாக அல்லவா இருக்கின்றது? இப்படிக் கூறிவிட்டு அடுக்களைப்பக்கம் எட்டிப்பார்த்தார். அங்கு ஸௌமதி மோன நிலையில் உட்கார்ந்திருந்தாற்போல் அவருக்குத் தென்பட்டது! உடனே இருக்கையினின்று எழுந்து அங்கே செல்ல எத்தனிக்கையில் அவ்

வறையின் பின் புறத்துக் கதவின் வழியாக யாரோ வருவதுபோலிருக்கவே—அது ஸுமதியாக இருக்குமோவென்று திரும்பிப்பார்த்தார். வேறொருவருமில்லை. ஒரு குருவி—சிட்டுக் குருவிதான்.

ஆம். அது ஒரு சிட்டு—சின்னஞ்சிறிய சிட்டு. உடல் மென்மையான பட்டு. கண்கள் குச்சிலிப்பொட்டு-கொட்டைப்பாக்கு மண்டை-கால் நெருப்புக்குச்சி அளவு—அதனை ஒரு கைப்பிடியில் கொள்ள இலகு! அப்படிப்பட்டது அந்தச் சிட்டு! அது கவலை தங்கிய முகத்தோடு அங்குமிங்கும் பார்வையைச் செலுத்தியவாறு 'விருட் விருட்'டென்று அறைக்குள் நுழைந்தது. பாவம்! ஏதாவது இரை கிடைக்குமா என்று பார்ப்பதற்கே அங்கு வந்ததோ என்னவோ? அப்படி ஏதாவது அகப்பட்டதும் பறந்து போய்விடும் போலும். பிறகு அது தன் இறக்கைகளை ரொம்ப நிதானமாக நீட்டி மெதுவாகப் பறந்து நீந்தியவாறு அறையைச்சுற்றிப் பார்த்துக்கொண்டே வந்தது. அதன் கண்களில் வருத்தம் தோய்ந்திருந்தது நன்கு புலப்பட்டது. திடீரென்று இறங்கி அறை நடுவிலிருந்த மேஜைமேல் அமர்ந்து கொண்டது. என்ன நினைத்துக் கொண்டதோ என்னவோ, அது மறுபடியும் கதவைக் கடந்து பறந்து சென்று மீண்டும் மேஜை மேல் வந்து உட்கார்ந்து



கொண்டது. ஓரிரு நிமிடங்கள் வரை அறையின் மேல் தளத்தை அண்ணாந்து பார்த்தது. திரும்பவும் ஒரு முறை கதவண்டை பறந்துசென்று, பின் அறையைச் சுற்றி விட்டு, 'விருட்' டென்று மேல் தளத்தை யொட்டிய காற்றுப் போக்கித் துவாரத்தை நோக்கிப் பறந்து சென்றது.

அக்குருவி அப்படிச் செல்லும்போது அவர் அதனை நன்கு கவனித்தார். அதன் அங்கமெல்லாம் ஒரே நீல நிறம். எல்லையில்லா நீலவானின் பாஷைகளை—பேச்சுக்களை—தொல்லை மிகு மனத்தோடு அச் சிட்டு விளக்கிக் காட்டியது போலிருந்தது! அவர் சற்று முன்னே சென்று அத் திக்கில் அண்ணாந்து பார்த்தார். காற்றுப் போக்கிப் பொந்தில் பாதி கட்டியும் கட்டாததுமான குருவிக் கூடொன்றில் அது குந்தியிருந்தது. அதுவரை அந்த விஷயம் அவருக்குத் தெரியாது. ஆனால், அரை குறையாகக் கட்டப்பட்டிருந்த அக் கூட்டிலிருந்து, பஞ்சு, கந்தல் துணி, குச்சிகள், தேங்காய் நார் முதலியவை தாறுமாறாக நீட்டிக் கொண்டிருந்தது என்னவோ நிச்சயம்.

அதனைக் கவனித்த அவர் மனம் ஏனோ கலக்கமுற்றது. தமக்கு ஏதோ, ஏன் தம் குடும்பத்துக்கே பெருங்கேடு வந்து விட்டதாக உணர்ந்தார். அவரது மூளை பிரமாதமாக வேலை செய்ய ஆரம்பித்தது.

'சிட்டொன்று வீட்டினுள் கூடு கட்டியே வசித்தாலப்பா
சட்டென்று குலக்கேடு சம்பவிக்கும் சத்தியமப்பா'

என்று எப்பொழுதோ யாரோ ஒரு பெரியார் சொல்லிச் சென்றது அவர் நினைவுக்கு வந்தது. 'சரிதான் எனது படுக்கையறைக்குள்ளேயே கூடு கட்டி வாசம் செய்யக் குருவியொன்று வந்துவிட்டதே. வேறு வினை வேண்டாம்' இப்படி தமக்குள் சொல்லிக்கொண்டார்.

சில நிமிடங்கள் சென்றதும் ஸுமதி மெள்ள உள்ளே நுழைந்து, 'என்னைக் கூப்பிட்டீர்களா என்ன?' என்று அவரிடம் கேட்டாள்.

கோபாலய்யர் அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார் அவள் முகம் பிரசன்னமாகவிருந்தது—இல்லை அதிலே ஒருவித மலர்ச்சி! ஏனெனில் அவள் அப்பொழுது தான் குளித்துவிட்டு அங்கு வந்தாள்.

ஸுமு! பழங்கதையெல்லாம் கிடக்கட்டும். அதோ பார்த்தாயா? கடைசியிலே நம்



படுக்கை அறைக்குள்ளேயே அந்தப் பாழாய்ப் போகும் குருவி கூடு கட்டி வசிக்க வந்து விட்டதே!

ஸுமுவிடமிருந்து பதிலே இல்லை.

ஆனால் அவளுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்த சந்தானம் அக் குருவிக்கூட்டைப் பார்த்துவிட்டான். அவ்வளவே. அவனுக்குப் பிரமாதமாகக் குஷி கிளம்பிவிட்டது. உடனே, கைகளைக்கொட்டித் தாளம் போட்டுக்கொண்டு பாட ஆரம்பித்துவிட்டான். அய்யய்யா! அய்யய்யா! குருவிக்கூடுடோய்!

'சின்னஞ்சிறிய சிட்டு—உடல்
மென்மையான பட்டு
கண்கள் குச்சிலிப்பொட்டு—அதன்
மண்டை கொட்டைப் பாக்கு

'சரி சரி. போதும். குருவிக்கூடென்றால் என்னடா அவ்வளவு குஷி? ஊம்? கூட்டைக்

கலேத்து அதை விரட்டியடித்துவிடுகிறேன் பார்.' என்று கோபாலய்யர் கோபத்தோடு கூறினர்.

கோபாலய்யரின் மூத்த பெண் வயிற்றுப் பேரன், பதின்மூன்று வயதை முற்றும் நிரம்பப் பெருத பாலகன் சந்தானம். அவர் சொன்னவற்றைக் கேட்டு, கொஞ்சமாவது அஞ்சவேண்டுமே! ஊஹூம். சட்டென்று பாடுவதை நிறுத்தினன். தாத்தாவின் குறிப் பறிந்து 'கூட்டைக் கலேக்கப்போறேளா தாத்தா? அப்பொ சரி. ரொம்ப ஜோர்தான். தாத்தா!' என்று முன்னிலும் அதிக குதூகலத் துடன் கூறினன்.

அதுவரை பேசாமலிருந்த ஸுமதி சட் டென்று, 'ஐயோ பாவம்! அதன்பாட்டிலே கூடு கட்டிக்கொண்டு போகட்டுமே. கூட்டை ஒன்றும் கலேக்க வேண்டாம். அதைக் கட்டு வதற்கு எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கும். கூட்டைக் கலேத்து வீட்டிற்கு வினேயைக் கொணர்ந்துவிடாதீர்கள். உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு.' என்று இரக்கம் தோய்ந்த குரலிலே கூறினள்.

கோபாலய்யரின் உள்ளத்திலே என்னவோ அர்த்தமில்லாத எண்ணம் ஒன்று உதய மாயிற்று. மனத்தை ஒருவாறு திடம் செய்துகொண்டு, 'ஸுமு, சூடாக ஒரு கப் காபி கொண்டுவாயேன்' என்றுர்.

ஸுமதி காபி தயாரிப்பதற்காக உள்ளே சென்றுள். சந்தானமும் அவளேப் பின் தொடர்ந்தான். கோபாலய்யர் மட்டும் மறு படியும் நாற்காலியில் அமர்ந்துகொண்டே யோசனேயிலாழ்ந்தார்.

எப்பொழுது அந்தக்கூடு கட்டி முடியப் போகிறதோ? யார் கண்டார்கள்? ஒரு நாள் அந்தச் சிட்டு தன் ஜோடியைத் தேடி அழைத்து வரும். இரண்டுமாகச் சேர்ந்து இரை தேடும். சல்லாபமாக இருந்து ஆணும் பெண்ணுமாக அன்பொழுக—காதல் கனிய இல்லறம் (வாழ்க்கை) நடத்தி வரும். கடைசி யிலே ஒரு நாள் பெண் குருவி கூட்டிலேயே தங்கிவிடும். ஆண் குருவி வெளிச்சென்று இரை தேடிக்கொண்டு வரும். பெண் குருவி கூட்டுக்குள்ளிருந்தவாறு மூன்று முட்டைக ளிட்டு அவற்றைத் தன் சிறகுக்கடியில் வைத்து அடைகாத்துக்கொண்டிருக்கும். பின் முட்டை வெடிக்கும்—குஞ்சு முகத்தை வெளிக்காட்டும். இறக்கை முளேக்கும்வரை அவற்றை இடுக்கிவைத்து இனிது காக்கும். பிறகு தானும் வெளியே சென்று இரை தேடிக்கொண்டுவந்து பரிவோடதனே அவற் றிற்குப் பகிர்ந்து கொடுக்கும்.

ஆமாம். ஏன் இவைகள் இப்படிப்பட்ட சக்க—துன்பச் சுமையைத் தலே மேல் தாங்கிச் செல்கின்றனவோ? இவ்விதம் செய்வதால் சுதந்திர உரிமையை—பொறுப்பை—இவைகள் நிச்சயப்படுத்திக்கொள்கின்றனவா? சரி, (பட்சி) பிராணி சாஸ்திர—தத்துவ ஆராய்ச்சி யையும் அதன் பதிலேயும் இப்பொழுது தூரக் கட்டிவைத்துவிடுவோம்.

நல்லது இந்தக் குருவிகளும் ஏன் மானி டரைப்போல, துன்பமும் தோல்வியும்நிறைந்த இவ்வாழ்க்கையில் மோகம் கொண்டிருக்கின் றன? பட்டப் பகல்—பதை பதைக்கின்ற வெயில்—பரிதியின் ஒளி வீசும் வேளேயில் நீலவான வெளியிலே கண்களுக்கெட்டாத தூரம் இன்னும் அப்பாலும் சிறிதும் சிரம மின்றிச் சுதந்திரமாகச் சிறகடித்துப் பறந்து நீந்திச் செல்கின்றன! காற்று—நல்ல காற்று —பெருங் காற்று—புயல் காற்றும் அவற்றை ஒன்றும் செய்துவிடுகிறதில்லே!

ஆ! வானவெளி! இதுவரை மனிதன் செல் லாத—ஏன் அருகிலேகூட எட்டிப்பார்க்காத அவ்வெளியிலே அவைகள் அலட்சியமாக அனு யாசமாக மிகவும் சுதந்திரத்தோடு சுற்றித் திரி கின்றன! ஆனல் மனிதனே? அவ்வெளியின் எல்லேயற்ற உருவத்தை அர்த்தமில்லாத ஒரு விதப் பார்வையோடு நோக்கியவாறிருக்கின் ருன்!

உண்மை. அவைகளுக்கு இறக்கைகளிருக் கின்றன. வெகு நன்றுகப் பறக்க முடிகின்றது. அவை சிறகடித்துப் பறந்து நீந்தி ஆறுகள், ஏரிகள், மலேகள், காடுகள், ஊர்கள், கிரா மங்கள், நகரங்கள், பட்டணங்கள் இவற்றை யெல்லாம் கடந்து, எங்கே உயிர்கள் இயற்கைச் செல்வச் சக்தியால் நிரம்பப் பெற்றிருக்கின்ற னவோ—(எங்கே ஜன்ம சாபல்லியத்துக்கு இருப்பிடமோ) எங்கே தங்கப்பிழம்பாம் சூரிய ஜோதி மயமாயும்—சந்தன வெண்மை நிறமா யும் உள்ள வெளியெனும் அகண்டாகாசத்தில் உயிர்கள் ஒன்றுக இருக்கின்றனவோ—எங்கே என்றென்றும் எல்லேயற்ற சுகநிலே திகழ்ந்து வருகின்றதோ அங்கே அக்குருவியால் போக முடியும்! ஆனல் நான்!.........நான்? அவை கள் அப்படிச் செல்வதை ஆ! வென்று வாயைப் பிளந்தவாறு பார்த்துக் கொண்டிருக் கிறேன்! எனக்கும் அவைகளேப்போல, இறக் கைகள்மட்டு மிருந்தால் ரொம்ப—ரொம்ப முன்பே எத்தனேயோ யோசனே தூரம் பறந்து சென்று திரும்பியே வந்திருக்க மாட்டேன்! அநித்தியமான வாழ்வுக்காக ஜோடி தேடுதல், வீடு (கூடு) கட்டுதல், உணவு (இரை) தேடு தல், இல்லறம் நடாத்தல், இவற்றையெல் லாம் செய்தே இருக்கமாட்டேன்! அப்படிக் கில்லாமல் என்னவோ செய்துவிட்டு இப்படி

என்னை மிகச் சிறுமைப் படுத்திக் கொண்டு விட்டேனே !

ஒச்சீ ! மறுபடியும் மறுபடியும் தாளமுடியாத இதே தவற்றைச் செய்வதா ? அம்மம்மா! சிறிதும் சகிக்கவொண்ணாது ! என்ன காரியம் செய்து விட்டேன் ! இந்த (கூட்டு) வீட்டு வாசத்தை விட்டுவிட்டு அச்சிட்டுக் குருவியைப் போல ஏன் வானவெளியெங்கும்தான் சுதந்திரமாகச் சுற்றித்திரிந்து வரக்கூடாது ? இப்பந்தத்திலிருந்து விடுபட்டு என் விருப்பப்படி சுயேச்சையாக நான் திரிந்து வரும் காலம் எப்போ ? ஆஹா ! அவ்வடிவழகு—ஜோதிமய—வானவெளியைக்காண—அதில் உலாவ என் உள்ளம் பேருவகை கொள்கிறது ! அக்குருவிகள் வானவெளியெங்கும் சுற்றித் திரிந்துவிட்டு மீண்டும் இவ்விருள் அடைந்த கூட்டுக்குள்ளே வந்து வாழ்கின்றன ! பின் ? அதனின்றும் விட்டு விடுதலையாகி, எட்டுத் திசையும் பறந்து, திரிந்து ஏறியக்காற்றில் விரைவொடு நீந்தி, மட்டுப் படாதெங்கும் கொட்டிக் கிடக்கும் வானொளி எனும் மதுவின் சுவையை உண்கின்றன ! ஊ......ஹூம்.

இனி ஒரு கணமும் தாமதியேன். இதோ இக்கூட்டைக் கலைத்து—என் கட்டை அறுத்து—தளையைத் தறித்து—உதறித்தள்ளிவிட்டுச் சுதந்திரமாகச் சுற்றித் திரிவேன் !

இப்படியெல்லாம் எண்ணமிட்டுக் கடைசியில் மேற்சொல்லிய முடிவுக்கு வந்தவராய்—பரபரப்புடன் எழுந்து, அக்குருவிக்கூட்டைச் கலைத்து விடுபவர்போலச் சற்று முன்னே சென்றார்.

அப்பொழுது தாத்தா ! என்று சந்தோஷம் பொங்கக் கூறிக்கொண்டே சந்தானம் அவரை நோக்கி ஓடிவந்தான்.

'என்னடா ? தாத்தா, தாத்தா? ஒரே கூப்பாடு? என்ன ஆகிவிட்டது இப்போ? ஊம்?'

'சித்தியும் சித்தப்பாவும் ஊரிலேருந்து வந்திருக்கா தாத்தா. அதோ வாசல்லேகூட வண்டி வந்து நிக்கறதே.' ஒரே மூச்சில் சொல்லிவிட்டு வாசலை நோக்கி ஓடிவிட்டான்.

அவருக்கு என்ன எண்ணமோ ? அதைக் கேட்டதும் அப்படியே அசைவற்று அரைநிமிடம் நின்றுவிட்டார். பிறகு திடமடைந்தவராய், 'விடாதுபோலிருக்கிறதே ! விட்டு விடுதலையாகி.........எப்போ ?' ஹே ! ஈசுவரா ! என்று வாய்விட்டுச் சொல்லிவிட்டார். உடனே அவசரம் அவசரமாய் வெளிச்சென்று வந்தவர்களை வரவேற்று விஷயத்தை விசாரித்ததில் தம் மூன்றாவது பெண்ணும் அவள் புருஷனும் கைக் குழந்தை சகிதமாகத் திருப்பதிக்குப் போகும்வழியில் அங்கே சின்னாட்கள் தங்கி விட்டுப் போவதற்கே வந்திருப்பதாகத் தகவல் தெரியவந்தது.

ஸுமதி தயாராக்கிக்கொண்டு வந்த காபியைச் சாப்பிட்டுக்கொண்டே மாப்பிள்ளையோடு சின்னேரம்வரை பல விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டு, அவர் குளிப்பதற்காக வேண்டிய ஏற்பாடுகளையும் செய்து கொடுத்தார் கோபாலய்யர்.

பிறகு மத்தியானம் சாப்பாடானதும், மாப்பிள்ளைக்குக் காமராவை ஒழித்துக் கொடுத்து, ரயிலில் வந்த சிரமம் தீர அவரைத் தூங்கும்படி சொல்லிவிட்டு, தமது அறைக்கு வந்து சேர்ந்தார். அவர் நாற்காலியில் அமர்ந்ததுதான் தாமதம், சந்தானம் தன் கைகளிரண்டையும் பின்புறமாக ஒளித்து வைத்துக்கொண்டு மெதுவாக, தாத்தா! என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான்.

'எலே! என்னடா கையிலே ஒளித்துவைத்துக் கொண்டிருக்கே ? திருட்டுப் பயலே! இங்கே வா. உண்மையைச் சொல்! என்று சற்று அதட்டினாற்போலக் கேட்டார் கோபாலய்யர்.

அவர் கூறி முடிக்கு முன்பே சந்தானம் தான் ஒளித்து வைத்திருந்த 'பாட்டாஷு' அட்டைப் பெட்டியொன்றை உயரத்தூக்கிக் காட்டி. 'குருவிக் கூடு தாத்தா!' என்று குதூகலத்தோடு கூறினான்.

கோபாலய்யருக்குச் சிரிப்புத் தாங்கமுடியவில்லை, 'கூடா? குருவிக்கூடா?' என்று சிரித்துக்கொண்டே அவனிடம் கேட்டார்.

'ஏன் தாத்தா சிரிக்கறேள் ? இதெ செவத்திலே ஆணி அடிச்சு மாட்டி வெச்சுட்டா கூடாகாதோ?'

'ஆகுமடா பயலே ஆகும் ; ஆனால்..........' என்று தமக்குள்ளே சொல்லிவிட்டுச் சற்று சிந்தனைக் குதிரையைத் தட்டிவிட்டார்.

புவியிலே மானிடராகப் பிறவி எடுத்திருப்பது நிச்சயமாக ஏதோ ஒரு பிரயோசனத்தைக் குறித்தே இருக்கவேண்டும். அதன் மதிப்பு, தமது பேரவாவை—இச்சையை ஏதாவது ஒரு விதத்திலே தியாகம் செய்வதிலேதான் இருக்கிறது போலும் ! அந்தக் குருவிக்கு நல்ல கூடொன்று கட்டிக் கொடுத்தால்தான் என்ன? அது எப்பேர்ப்பட்ட கைங்கர்யமாகும் ? ஆணும் பெண்ணுமாக இரண்டு குருவிகளும் அதிலே வாழ்ந்துவரும். பேடு முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும். குஞ்சுகளுக்கு இறக்கை முளைத்து வெளிவர ஆரம்பித்ததும், ஒருநாளிரவில் துளிக்கூடச் சப்தம் செய்யாமல் அவைகளைப் பிடித்து, பத்திரமாக அந்தக் கூட்டிலே வைத்துவிட்டாலாயிற்று. பெண்

குருவி பிறகு தானாகவே பறந்து போய்விடும். அப்புறம் கூட்டைக் கலைப்பதற்கு எந்நேரம் பிடிக்கும்? பின்? ஆவதைப் பார்த்துக்கொள்கிறேன். அன்றைக்கு மட்டும் அவை இரண்டும் கூட்டைத்தேடி அழு அழென்று அழப் போகின்றன, குஞ்சுகளைக் காணுமல் வீடெங்கும் தேடுதேடென்று தேடித் திரிந்து நெஞ்சம் புண்ணுகி வருந்தப் போகின்றன. மறுநாளிலிருந்து அப்புண்கள் ஆறி, மனந்தேறி, வேறு வழியின்றி மறுபடியும் நீல வானிலே நீந்திச் சென்றுவிடும். கூட்டைக் கலைக்கும் என் இச்சையும் பூர்த்தியாகிவிடும்....

கோபாலய்யர் இவ்வாறு மனக்கோட்டை கட்டிக்கொண்டிருக்கையில், மாப்பிள்ளை அவரிடம் வந்து, 'மாமா, பிறகு யோசித்து பார்த்ததில், நாங்கள் இன்றிரவே திருப்பதிக்குச் செல்வது நல்லது எனத் தோன்றியது. குழந்தைக்கு முடியெடுக்க வேண்டியது ரொம்ப முக்கியம். திருப்பதிக்குப்போய் இந்த வேண்டுதலை முடித்துக்கொண்டு அப்படியே இரண்டு ஸ்தலங்களுக்குச் சென்று பகவானையும் சேவித்துவிட்டுத் திரும்பி வருவதற்கு ஒரு வாரம் ஆகும், அப்புறம் சில நாட்கள் இங்கே இருந்துவிட்டுப் போகிறோம். சுவாமி காரியம் பெரிதல்லவா? உத்தரவு கொடுங்கள்' இப்படியாகக் கூறினர். 'சரி, வந்ததும் உடனே கிளம்பவேண்டுமென்கிறீர்கள். சுவாமி காரியம், தட்டக்கூடாது. ஜாக்கிரதையாகப் போய் வாருங்கள். ஸரஸு கைக்குழந்தைக்காரி. சிறிசும் கூட. கண்ட நீரில் குளித்து, கண்ட கண்ட இடங்களில் சாப்பிடக்கூடாது. உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு இடத்திலும் அதிக நாட்கள் தங்காமல் எவ்வளவு சீக்கிரத்திலே வரமுடியுமோ அவ்வளவு சீக்கிரத்திலே வந்துவிடுங்கள்' என்று கோபாலய்யர் மரியாதையை விட்டுக் கொடுக்காமலும் பந்தாவைக் குறைக்காமலும் தம் மாப்பிள்ளைக்கு உத்தரவு கொடுத்தார்.

மாப்பிள்ளை அறையை விட்டுச் சென்றதும் சந்தானத்தின் ஞாபகம் அவருக்கு வரவே அறையைச் சுற்றிப் பார்த்தார். அவனைக் காணவில்லை. அவன்தான் மாப்பிள்ளை உள்ளே நுழைந்ததும் மெள்ள நழுவி விட்டானே!

பொழுது சாயும் சமயம். கோபாலய்யர் மாப்பிளைக்கும் பெண்ணுக்கும் சாப்பாடு செய்வித்து, ரயிலுக்குப் போவதற்காக மூட்டை முடிச்சுகள் கட்டுவதில் அவருக்கு உதவியாக இருந்தார். சின்னேரம் சென்றதும் அவர்களை ரயிலில் ஏற்றிவிட்டு, வீடு வந்து சேர்ந்தார்.

அன்றிரவு அவருக்குச் சரியான தூக்கமில்லை. கூட்டைக் கலைப்பதிலே அவர் மனம் வெகுநேரம்வரை சஞ்சரித்துக் கொண்டிருந்தது. பிறகு எப்படியோ தூங்கிவிட்டார்.

கதிரவன் வரவைக்காட்டும் கோழி கூவிற்று —காகம் கரைந்தது—பட்சிகள் இனிய பாட்டுகள் பாடின. காலைக் கதிரவனும் தன் சுவாலை மிகு மென் கதிர்களை அறைச் சன்னலின் வழியாகக் கோபாலய்யர்மேல் வீச ஆரம்பித்தான். ஐயர் இருந்தாற்போலிருந்து, 'எலே சந்தானம்! மூன்றும் செம்மையாக அகப்பட்டுக் கொண்டு விட்டனடா! பொந்திலே என் கையைவிட்டு ஒரு துழாவு துழாவினேன். மூன்று குஞ்சுகளின் கழுத்தும் நன்ருக என் கைவிரல்களுக்கிடையில் அகப்பட்டுக்கொண்டு விட்டன! இனிமேல் அவைகள் தப்பித்துக் கொள்வதைப் பார்த்துவிடுகிறேன்! அடெடெ டெ! ஏணி சாய்கிறதடா! ஐயையோ! பிடித்துக்கொண்டிருப்பதை விட்டு விட்டாயாடா! நான் விழுந்தேன்.........அப்......பா! அம்.........மா!' அப்பொழுதுதான் சந்தானம் அங்கு வந்தவன், இடிஇடியென்று சிரித்துக் கொண்டே, 'சொப்பனத்திலே உங்க அப்பாவும் அம்மாவும் வந்தாளா தாத்தா? அவாளே செத்தெமுந்தி கூப்பிட்டேளே!..................'

தூக்கம் கலைந்து எழுந்து உட்கார்ந்த கோபாலய்யர் சற்றே கோபம் அடைந்தவராய் 'அடெ போடா அதிகப் பிரசங்கி!' என்று கூறி, தமது வெட்கத்தை மறைத்துக்கொண்டார்.

ஒரு கையில் சுத்தியலும் ஆணிகளும், இன்னொரு கையில் அட்டைப் பெட்டியுமாக நின்ற சந்தானத்தை அப்பொழுதுதான் நன்ருகக் கவனித்த ஐயர், 'பேஷ்! அப்படிச் சொல்லடா சிங்கக்குட்டி! உன் சாமர்த்தியமே சாமர்த்தியம்!' என்று சந்தோஷம் பொங்கக் கூறி அவனை அருகில் அழைத்து அவன் முதுகிலே தட்டிக் கொடுத்தார். பிறகு என்ன நினைத்துக்கொண்டாரோ என்னவோ. 'ஆமடா! ஏணி இல்லாமல் அவ்வளவு உயரத்திலே எப்படியடா கூடு கட்ட முடியும்?'

அவர் ஏணி என்று சொல்லத் தொடங்கியதுமே சந்தானம் கையிலிருந்தவற்றை அப்படியே மேஜை மேல் போட்டுவிட்டான். முழுதும் சொல்லிமுடிக்குமுன், 'ஒரு நிமிஷத்திலே கொண்டுவரேன் தாத்தா' என்று கூறிக் கொண்டே பிடித்தான் ஒரு ஓட்டம்.

அதற்குள்ளாகக் கோபாலய்யர் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு காபியையும் குடித்து விட்டுத் தமது அறையில் வந்து அமர்ந்து கொண்டார்.

அடுத்த நிமிஷம் சந்தானமும் வாடிய வதனத்துடன் மெள்ள மெள்ள உள்ளே நுழைந்தான்.

அக் கோலத்தில் அவனைக் கண்ணுற்ற கோபாலய்யர், 'என்னலே! மூஞ்சி மூன்றும் பேஸ்து வைத்தது மாதிரி இருக்கிறது!' என்று விஷயத்தை நன்கு அறிந்துகொண்டு வேண்டுமென்றே அவ்விதம் கூறினார்.

வீட்டுக்கார மாமி 'இப்பொழுது ஒன்றும் ஏணியைக் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டாள் தாத்தா. கொடுக்காத போனா போகட்டுமே. ஐயே! பிசுக்காரமே' என்று சற்று வருத்தம் தோய்ந்த குரலிலே சொன்னான்.

'பரவாயில்லையடா ராஜாப்பயலே! இப்பொழுது அந்தக் கூட்டை எப்படியாவது கட்டியாகவேண்டும். வேறு வழி?' இப்படிக் கூறிவிட்டு அவன் முதுகிலேயும் தட்டிக் கொடுத்து அவனைச் சமாதானப் படுத்தினார்.

சந்தானம் வாய் திறவாமல் எதையோ யோசித்துக்கொண்டிருப்பவன்போல் காணப்பட்டான். ஒரு கணமே அவ்விதம் இருந்திருப்பான். அவன் முகத்திலே ஒரு மலர்ச்சி கண்டது. அறையை நன்றாக ஒருமுறை சுற்றிப் பார்த்தான், சட்டென்று வெற்றியடைந்துவிட்டவன்போல் தன் வலக்கரத்தால் ஒரு சிட்டிகைச் சப்தம் செய்துவிட்டு, 'கண்டு பிடிச்சு விட்டேன்! தாத்தா, வழி கண்டு பிடிச்சுவிட்டேன்!' என்று குதூகலமிகுந்து கூத்தாடியவாறு கூறினான்.

'என்னடா கண்டு பிடிச்சுட்டே? என்ன கண்டு பிடிச்சூட்டே?'

'பூ! பிரமாதமோ! அவாத்துஏணி இல்லாட்டா முடியாதோ? அந்த மேஜையை செவரோரமா இழுத்துப் போட்டுக்கறது. அதன்மேலே நாற்காலியெபோடறது அதுக்கு மேலே 'ஸ்டூலைப்' போட்டுக்கறது. அந்த 'ஸ்டூல்'மேலே ஏறிண்டு அட்டைப்பெட்டிக் கூட்டை செவத்திலே ஆணி அடிச்சு மாட்டிவிடறது. எப்படி தாத்தா! சரிதானே?'

'அடி சக்கை! திட்டம் போடறதிலே உனக்கு நிகரில்லேடா! கோபாலன் பேரனா?' என்ன? புலிக்குப் பிறந்தது எங்கேயாவது பூனையாகுமா?' இவ்விதம் பெருமிதம்பொங்கக் கூறி, சந்தானத்தை அப்படியே அணைத்து உச்சி மோந்து கொடுத்தார்.

'போதுமே! உங்க கொஞ்சலும் குலாவலும். கொழந்தெகிட்டே எப்போ பாத்தாலும் கடுவன் பூனையாட்டம் சிடு சிடுன்னு சீறி விழறது! இப்போ என்னவோ கொஞ்ச வந்துட்டாராம் கொஞ்ச! ஆமாம். ஏணி என்னத்துக்காம்?' இப்படியாகச் சொல்லம்புகளைப் பாய்ச்சிக் கொண்டே அறைக்குள் நுழைந்தாள் அத்தனையும் வெளிநின்று கவனித்துவந்த ஸாமதி.

எதிர்பாராத அவ்வார்த்தைகளைக் கேட்ட கோபாலய்யர் கணநேரம் திகைப்படைந்து விட்டார். ஒருவாறு சமாளித்துக்கொண்டு மறுகணம், 'ஸாமு, அந்தக் குருவிக்கு நல்லதாக ஒரு கூடு கட்டித்தரப் போகிறேன்' என்று சிரித்துக்கொண்டே சொன்னார்.

'ஊஹூம், அது நன்றாக இராது, அவைகளுடைய சொந்தக்கூட்டிலேயே இருந்துவரட்டும். அவரவர்கள் தத்தம் மனசுக்கிசைந்த வாசஸ்தலத்திலே இருந்து வருவதுதான் அவரவர்களுக்கு மிகவும் சுகத்தைக் கொடுக்கும். நாம் எவ்வளவுதான் நல்லதாக ஒரு இருப்பிடம் கட்டிக்கொடுத்தாலும்.........'

'அது வாஸ்தவமே ஸாமு, இப்பொழுது கட்டப்போகிற கூடு அவைகளுக்கு ரொம்ப பிடித்ததாகவே இருக்கும் அல்லது இருக்காது என்பதற்கில்லை. ஆனால் இது சந்தானத்தின் சாமர்த்தியத்தாலே—திட்டம் போடும் திறத்தாலே—உருவாகியது.' இவ்விதம் கூறிவிட்டுச் சந்தானத்தை ஒரு முறைபார்த்தார் கிழவர். அவன் கம்பீரமாகக் காணப்பட்டான்!

'குருவிக்கூடுமாச்சு. இன்னெண்ணுமாச்சு. ஞாயிற்றுக்கிழமை என்றால் ஏதுக்கு இப்படி நாழி பண்றேள்? இப்போ மணி பன்னிரண்டடிக்கப் போறது. இன்னும் நீங்க குளிக்கக் கூட இல்லை. எழுந்திருந்து குளிச்சுட்டு சாப்பிட வாருங்கோ இரண்டுபேரும்.'

'ஸாமு! இதைக்கேளேன். உன் பேரன் சாமர்த்தியம் இந்த உலகத்தில் அவனொத்த பசங்களிலே எவனுக்காவது வருமா? திட்டம் போடறதிலே அவன் மூளைக்கு ஈடு உண்டா? நீ வேணுமானால் பாரேன்; அவன் பெரியவனானதும் பெரிய 'ஸ்கீமிங் ஹெட்' ஆகிறானா இல்லையா என்று?'

'ஐயோ போதுமே! உங்க சமத்தும்! உங்க பேரன் சமத்தும்! நாழி யாறதே! சீக்கிரம் சாப்பிட வாங்கோ. நான் இனிமே கூப்பிட மாட்டேன்!' என்று கூறி, சற்று விறைப்புடன் சென்றுவிட்டாள்.

விஷயத்தை வளர்த்தி இன்னும் வீண் கோபத்துக்கு இடம் வைத்துக் கொள்ளக் கூடாதென்று, சட்டென்று எழுந்து குளிக்கச் சென்றார் கோபாலய்யர்.

அவர் குளித்துவிட்டு வருவதற்கு முன்பே காக்கை முழுகுவதுபோலக் குளித்துவிட்டு அடுக்களையில் அன்னக்கலத்தின் முன்பு அமர்ந்துகொண்டான் சந்தானம்.

சில நிமிடங்கள் சென்றதும் ஐயரும் வந்து கலத்தருகில் வந்து உட்கார்ந்து சாப்பிட

ஆரம்பித்தார், இரண்டு மூன்று கபளம் அன்னத்தையும் சாப்பிட்டிருப்பார்.

'சிருக், சிருக், சிருக், சிருக், சிருக், சிருக், ஜிவ் ஜிவ் ஜிவ் ஜிவ், சிவ, சிவ சிவ சிவ' இந்தச் சப்தம் கேட்டுத் திரும்பினர். வேறொன்றுமில்லை. சிட்டொன்று அடுக்ககளைச் சன்னல் மேல் உட்கார்ந்துகொண்டிருந்தது. தன் அலகில் ஒரு சுள்ளியைக் கௌவிக்கொண்டு அறையை ஒருமுறை சுற்றிப் பார்த்துவிட்டு, 'விருட்' டென்று பறந்து ஐயருக்குக் கொஞ்சம் தூரத்திலே—அறை நடுவிலே வந்தமர்ந்துகொண்டது அக் குருவி. அது அங்குமிங்கும் பார்த்துவிட்டுப் பரபரப்புடன் பறந்து செல்லத் தயாராகி, அவரைப் பார்த்து சிருக், சிருக் கென்றது. அதனைக் கண்ணுற்ற ஐயர் சற்றே சிந்திக்கலானர்.

'அட கஷ்டகாலமே! சரி, இன்று என் சாப்பாட்டிலே மண்தான்! எந்த அசிங்யத்திலே கிடந்ததோ அந்தக் குச்சியைத் தூக்கிக்கொண்டல்லவா வந்திருக்கிறது. அது பறந்து செல்லும்போது நம் இலையிலே போட்டுவிட்டால்? பிறகு சாப்பிட்டதுபோலத்தான்.' இவ்வாறு அவர் எண்ணிக்கொண்டிருக்கையில் அத்தனையும் கவனித்துக்கொண்டிருந்த சந்தானம் 'தாத்தா, நீங்க பேசாம இருங்கோ; நான் அதை விரட்டி விடறென், என்ருன்.

'எலே! உன்னலே என்னமா முடியும்? நீ அந்தண்டையல்லவா உட்கார்ந்திருக்கிருய்? நீ விரட்டினல் நிச்சயமாக என் இலையில் அந்தக் குச்சியைப் போட்டுவிடுமடா.' இவ்விதம் கூறிக்கொண்டே தமது இடது கையை ஓங்கி, சூ! சூ! வென்று அதனை விரட்டினர். பாவம்! அக்குருவி மிகப் பயந்து நடு நடுங்கியவாறு பறந்துசெல்ல ஆரம்பித்தது. அது அப்படிச்செய்கையில் வேறு வகையின்றி ஐயர் தலைக்குமேலாகப் பறக்கவே அதன் அலகிலிருந்த குச்சிஐயரின் தலையில் பட்டுப் பொத்தென்று அவருடைய இலையில் விழுந்தது. ஐயருக்கு வந்தஆத்திரத்துக்கு அளவே இல்லை. அப்படியே கையை உதறிவிட்டு எழுந்து, சுத்தம் செய்துகொண்டு தமது அறையை அடைந்தார்.

அவருடைய அன்னக் கலத்தில் அச்சுள்ளி விழுந்ததுமே சந்தானம் 'களுக்' கென்று சிரித்துவிட்டான். தாத்தாவுக்குத் தெரிந்துவிட்டால் மிகவும் கோபித்துக்கொள்வார் என்பதை உணர்ந்து, சிரிப்போடு இருமலையும்—தொண்டையைக் கனைத்துக்கொள்வதையும் சேர்த்துக்கொண்டான். நல்ல வேளையாக ஐயர் அவன் சிரித்ததையே அறிந்துகொள்ள முடியவில்லை.

ஸௌம்தி கோபாலய்யர் பின்னலேயே சென்று, 'இந்தாங்கோ, அந்த சாதம் போனல் போறது. இன்னொரு இலையிலே சாதம் போடறேன். வந்து சாப்பிட்டுவிட்டுப் போங்கோ. பட்டினி கிடக்காதீகள்' என்று கெஞ்சி அழைத்தாள். கோபாலய்யர் ஒரே மௌனம் சாதித்தார். அவர் கோபம் உச்ச நிலையிலிருக்கும்போது ஒருவரும் அவரிடம் ஒரு மணிநேரம்வரை பேசக்கூடாது என்பதை நன்கு அறிந்த ஸௌமதி பேசாமல் திரும்பி விட்டாள்.

அப்பொழுதுதான் அவர் அக்குருவிக்கூட்டைப் கலைத்து விடுவது என்று திட சங்கற்பம் செய்துவிட்டு, 'இந்தப் பயல்! சந்தானம் எங்கே தொலைந்துவிட்டான்? நல்ல சமயத்திலல்லவா நழுவி விட்டான்! வரட்டும். அவனுக்குச் சரியான வழி செய்கிறேன்.' இப்படியாக அவன் வரவை எதிர்பார்த்தவாறிருந்தார்.

சந்தானமும் சரியான சமயத்திலே உள்ளே நுழைந்தான். அவனைக்கண்ட ஐயர், 'ஏனடா, சாப்பிட்டுவிட்டு எங்கே ஓடிவிட்டாய்? ஊம்?' என்று கேட்டார்.

'நான் ஒரு நல்ல வஸ்து கொண்டு வந்திருக்கிறேன் தாத்தா!'

'என்னடா அது? நல்ல வஸ்துவும் மண்ணுங் கட்டியும்!' அவர் அப்படிக்கூறிக்கொண்டு வரும்போதே சந்தானம் தன் மடியிலிருந்து கவண்கல் வீசும் கருவி ஒன்றை மெதுவாக வெளியிலெடுத்து அவரிடம் காட்டி, 'தாத்தா, அந்தக் குருவி மறுபடியும் இங்கே வரட்டும். சரியாகக் குறிவெச்சு அதை ஒரே அடியிலே அடிச்சு வீழ்த்தாட்டா—என்பேர் சந்தானம் இல்லை தாத்தா. பின்னே? எங்கோ கிடந்த அழுக்குக் குச்சியை என் தாத்தா சாப்பிடற இலையிலே போடலாமோ? அதை என்ன செஞ்சால்தான் ஆகாது?' என்று சற்று வீருப்போடு கூறினன்.

கோபாலய்யர் கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. பேரனின் சாமர்த்தியத்தைக்கண்டு மிக்க பெருமிதம் அடைந்து பேசலுற்றார்.

'பேஷ்! சந்தானம். உன் யுக்தியே யுக்தி! இந்த உலகத்திலே உன் புத்திக்கு இணையுள்ளவன் ஒருவன்கூட அகப்படமாட்டானடா! எலே! ஆமாடா. அதெ எப்படியடா அடிப்பாய்? அது வந்து சரியான லக்கிலே உக்கார்ந்தால்தானேடா முடியும்?'

'ஐயே! இந்த தாத்தாவுக்கு ஒண்ணுமே தெரியமாட்டேன்கிறது! ஏன் தாத்தா, கொஞ்சம்போல அரிசியை அந்த மேஜைமேல் தூவி வைத்துவிட்டால், அது வந்து மேஜைமேலே உக்காந்து அரிசியை தின்க ஆரம்பிக்கும். அப்படி திண்ணுண்டே இருக்கும்போது ஒரே அடிலே அந்தப் போக்கிரிக் குருவியை அடிச்சு

வீழ்த்திடமாட்டேனே?' சந்தானத்தின் குரலிலும் முகஜாடையிலும் வீரத்தனம் விளங்கியது.

ஐயர் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவே இல்லை. ஒரு நிமிஷம் அப்படியே பிரமிப்படைந்துவிட்டார். பரமானந்தம் அடைந்தவராய், 'ஐமாய்டா! ராஜாப்பயலே ஆனால் ஒன்று. நீ அடிக்கிற அடியிலே அந்தக் குருவி எழுந்திருக்கக்கூட முடியாமல் போகணும் என்ன? தெரிந்ததா?'

'தெரியும் தாத்தா' என்று கூறிவிட்டு, கம்பியை நீட்டிவிட்டான்.

பிறகு ஐயர் அன்றைய தினசரியை எடுத்துப் படிக்க முயன்றார். அப்பொழுது மத்தியான வேளை. நன்றாக வெயில் பொசுக்கும் சமயம். சில நிமிடங்கள் வரை தினசரியைப் புரட்டிக் கொண்டிருந்தார், அவரை அறியாமல் தூக்கம் கண்களைச் சுழற்றவே சிறிது நேரத்திற்கெல்லாம் கண்ணயர்ந்துவிட்டார் கோபாலய்யர். உண்ட களைப்புத் தொண்டனுக்கும் உண்டல்லவா?

எப்பொழுது தூங்கத் தொடங்கினோம், எப்படித் தூங்கினோம் என்பதெல்லாம் அவருக்கு ஒன்றுமே தெரியாது, மேஜைமேல் ஏதோ 'லொடக்' என்று விழுந்த சப்தம் கேட்டுத் திடுக்கிட்டெழுந்தார். அப்பொழுது அதன் மேலிருந்து 'விர்ர்ர்ர்' ரென்று குருவியொன்று பறந்து வெளியே சென்றதைக் கண்ணுற்றார் ஐயர், தூக்கக் கலக்கத்திலே பிறகு சற்றே தெளிவு பெற்று யோசிக்கையில் விஷயம் வெட்ட வெளிச்சமாயிற்று! பேரனுடைய 'ஹண்ட்டிங்' நடந்திருக்கிறது என்பதை உணர்ந்து கொண்டார். வேறென்ன?

பிறகு சாயங்காலம் வரை சந்தானத்தை அந்தப் பக்கத்திலேயே காணோம்! அப்பொழுது ஐயர் தமது அறையில் முகட்டைப் பார்த்தவாறு ஏதோ யோசனையிலாழ்ந்திருந்தார். சந்தானம் பூனைபோல உள்ளே நுழைந்தான். எதேச்சையாகக் கோபாலய்யர் முகட்டிலிருந்து பார்வையைக் கொஞ்சம் கீழே செலுத்தினார். சந்தானம் அவர் கண்களிலே பட்டுவிட்டான். உடனே, 'அடே அசட்டுப்பயலே! என்னவோ குறிதவறி விட்டது. அதற்காகவா இவ்வளவு நேரமாக இங்கே தலையே காட்டாமலிருந்தாய். 'தோல்வி வெற்றிக்கு முதல்படி' என்று ஒரு ஆங்கிலப் பழமொழி உண்டு. பரவாயில்லை. இதைக் கேள். இப்போ ஆக வேண்டியது என்ன தெரியுமோ? கதவண்டை நின்றுகொண்டு கவனிப்பாயோ அல்லது வேறு எங்கேதான் இருந்து கவனிப்பாயோ அந்தக் குருவி வந்து கூட்டிலே உட்கார்ந்ததும் என்னிடம் வந்து நீ சொல்லிவிட வேண்டும். நான் மேல்மாடி வராந்தா ஓரத்திலே உட்கார்ந்துகொண்டிருப்பேன். ஊம்? சொல்றயா?'

'சரி தாத்தா, அப்படியே செய்றேன்.'

அதன் பிறகு ஐயர் வராந்தாவை நோக்கிச் சென்றார். சந்தானம் கதவிடுக்கில் ஒளிந்து கொண்டான்.

எழுத்து மறையும்நேரம் ஆகிவிட்டது. ஏற்கனவே கோபாலய்யருக்குக் கண்ணிலே மகரம். பின் கேட்கவா வேண்டும்? 'ஜில் ஜில்' என்று சலங்கையொலியுடன் குதிரை வண்டியொன்று வாசலிலே வந்து நின்றதைக் காணமுடியவில்லை அவரால். ஏதோ தெருவில் எப்பொழுதும் வருவதும் போவதுமாகவிருக்கும் வண்டிகளின் சப்தம் என்று பேசாமலிருந்து விட்டார் போலும்! கண்கள்தாம் ஊமையேயொழிய, காதுகள் நன்றாகவே கேட்கும் சக்தி பெற்றிருந்தன ஐயருக்கு. கீழே, கூடத்தில் இரண்டு மூன்று புதுக்குரல்கள் பேசும் சப்தம் கேட்கவே ஐயர் சற்றுமுன் சென்று அங்கோர் சாளரத்தின் வழியாக எட்டிப்பார்த்தார். சரியாக அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. பிறகு காதுகளைச் சாய்த்துக் கேட்டார். மிகவும் பரிச்சயமான குரலில் ஒருவர் பேசியது நன்றாக அவர் காதுகளில் விழுந்தது. இன்னும் சற்று உற்றுக்கேட்டார். ஆம், ஆம். நிச்சயமாக அந்தக்குட்டி ஸரஸுதான் என்று தனக்குள் சொல்லிக்கொண்டார் ஆச்சரியமிகுந்து, ஐயர், 'மூன்று கடிதங்கள் போட்டேனே அம்மா. ஒன்றுக்காவது பதில் போடக்கூடாது? இந்தத் தொண்டு கிழங்கள்—கண்தெரியாத என் மாமனாரையும் மாமியாரையும் வைத்துக்கொண்டு தனியொருத்தி நான் எப்படி எவ்வளவு காலம் தள்ளுவேன்?..........' ஸரஸுவின் கண்களில் நீர் தளும்பியது.

முதலிலே நீ போட்ட கடிதம் கிடைத்ததம்மா. அதிலே உன்னை உடனே அழைத்துப் போம்படியாக எழுதியிருந்தே. அவர் இல்லாதபோது அது வந்தது. நான் படித்துவிட்டு அவர் அறை மேஜைமேலே எப்போதும்போல வைத்து விட்டேன். உங்கப்பாகிட்டேயும் சொல்லிப்பார்த்தேன். காதிலே போட்டுண்டாதானே? அதற்கப்புறம் நீ எழுதின இரண்டு கடிதங்களையும் நான் பார்க்கவேயில்லை. சரி, இப்போ என்ன? சௌக்யமா வந்து சேர்ந்து விட்டாயே—அந்த ஈசுவரிதான் உன்னை நல்லபடியா இங்கே கொண்டுவந்து சேர்த்தாள்.'

ஆமாம், என்று சாடையாக ஸரஸுவின் மாமன் மாமிகளைச் சுட்டிக்காட்டி 'எதற்கு இவர்களையும் அழைத்துவந்தாய்? உன் அகத்துக்காரர் எங்கே சாப்பிடுவார்?' இப்படி மெதுவாகக் கூறிவரும்போது—அசைப்பிலே ஸரஸு கண்களில் நீர் ததும்ப நின்று விசித்து அழுவதையும் பார்த்த ஸுமதி மனங்கலங்கிவிட்டாள். உடனே அவளை அணைத்து என்னடி ஸரஸு? என்னவாயிற்று? சொல்லம்மா.....' என்று விசனத்துடன் கேட்டாள்..............

'அவருக்கு வேலை போய் ஒரு மாதத்துக்கு மேலாகிறது. அவர் ஆபீஸிலே வியாபார மந்தமாம். அதனாலே அவருக்குச் சீட்டுக் கொடுத்து அனுப்பி விட்டார். எனக்கு வேலை கிடைக்கிற வரை உன் அப்பாவாத்திலே இருந்துவா. வேலை கிடைத்த பிறகு உங்களை வந்து அழைச்சுண்டு போறேன், என்று சொல்லிவிட்டு வேலைக்காக ஊர் ஊராக அலஞ்சுவரா, இன்னும் வேலையே கிடைக்கவில்லை. இப்போ பதினைஞ்சு நாளாச்சு அவர் திரும்பியே வரல்லை. மூணு கடுதாசு போட்டும் இங்கே யிருந்து ஒரு பதிலெயும் காணோம், உடனே வந்தது வறதுன்னு எப்படியோ நானே கிளம்பி வந்துட்டேன்,' இப்படி கண்களை கசக்கிக் கொண்டு கூறிமுடித்தாள் ஸரஸு.

சற்று முன்பே மாடியிலிருந்து கீழிறங்கிய ஐயர் அறைக் கதவண்டை நின்றவாறு அத்தனையும் கேட்டுவந்தார். அவள் பேசி முடிந்ததும் உள்ளே நுழைந்து ஸரஸுவை வா! வென்று வரவேற்றார். அவர்குரலில் வருத்தம் ஒருபுறமும் இரக்கம் இன்னொரு புறமுமாகச் சேர்ந்திருந்தன. பிறகு என்ன நினைத்துக் கொண்டாரோ என்னவோ சம்பந்திகளையும் விசாரித்துவிட்டு, ஸுமதியிடம், 'பாவம்! வயது வந்தவர்கள் பட்டினியும் பசியுமாக ரயிலில் வந்திருப்பார்கள். ட்டென்றுசூடாகக்காபிபோட்டு, கொணர்ந்து கொடு, ஊம், மேலே ஆக வேண்டியத்தைக் கெவனியுங்கோ.' இவ்விதம் கூறிவிட்டு, தமது அறைக்குச் சென்று நாற்காலியில் தொப்பென்று அமர்ந்து கொண்டார். பின் பெருமூச்சொன்று விட்டுக் கொண்டார், அவரை அறியாமலேயே.

'விட்டு விடுதலையாகி நிற்போமிந்தச்
சிட்டுக் குருவி போல் எப்போ?' என்றும்

உழைப்பு! உழைப்பு! உழைப்பு!
உழைப்புண்டாயின் உழைப்புண்டாயின்
பிழைப்பு! பிழைப்பு! பிழைப்பு!
கடமை! கடமை! கடமை!
கடமை போயிற் கடமை போயின்
மடமை! மடமை! மடமை!

இப்பாட்டுக்கள் அவர் வாயினின்றும் வெளி வந்தன.



# பெண்களுக்கு மட்டும்

ஷிபாலி சௌத்ரி — சாரி

## "போரடிக்கிறார்களே!"

"நம் எல்லோருக்கும் நல்ல சினேகிதர்கள் தேவை; ஆனால் சிறந்த உண்மையான நண்பர் ஒருவரும் கட்டாயம் வேண்டும். தனக்குள்ளாகவே, சுய எண்ணங்களோடு வாழ்வது உடலுக்கும் மனதுக்கும் ஆரோக்கியத்தை அளிக்காது.

"ஜனங்கள் என்னை, போரடிக்கிறார்கள்" என்று சொல்லவேண்டாம்; அவ்வாறு சொல்வது, நாம் சுயம் பிரதாபத்தில் கர்வம் கொண்டவர், என்று ஒப்புக்கொள்வதாகும்.

உலகத்தில் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் முற்றிலும் வெவ்வேறான படைப்பு; அவர்களிடையே தோன்றும் விசேஷ வேறுபாடுகளைக் கண்டுபிடிப்பதில் முனைந்தால் ஏன் போர்டு (Bored) ஆக இருக்கப் போகிறது? இந்த உலகின் மத்தியில் உழல முன்வந்தால் இது எவ்வளவு சுவாரஸ்யம் பொருந்திய இடம் என்பது தெரியவரும். புத்தகங்கள் அனேக விஷயங்களை நமக்குக் காண்பிக்கும்; ஆனால் மனித வர்க்கத்தினிடையே பழகுவதால் அதைவிட நிறையத் தெரிந்துகொள்ள முடியும்.

அவர்களோடு வெற்றியுடன் பழகுவதற்கு :— உண்மையோடு ஒழுகு; ஆகாயத்தில் நின்றவண்ணம் குறைகளைச் சுட்டிக் காண்பித்துக் கொண்டு இராதே.

**தூக்கம் கொள்ளாதவர்க்குப் புதிய ஆலோசனை :**—ஒரு மேனாட்டு வைத்தியர் அடியிற்கண்ட உபயோகமான யோசனையைத் தூக்கம் பிடிக்காதவர்க்குச் சொன்னார்! கண்ணை மூடிப் படுத்தபின், சிரமப்படாமல் நெற்றியின் மத்திக்கு விழிகளைக் கொணர்ந்து, அங்கேயே வைத்திருக்க முயன்றால், தூக்கம் சீக்கிரத்தில் வரும். இவ்வாறு செய்வதால் விழிகள் மேலாகவும், உள்ளேயும் நோக்குகின்றன; தூங்கும்போது இங்நிலையில்தான் அவைகள் இயற்கையாய் நிலைத்திருக்கும். விழிகள் அந்தத் திசையில் நோக்கும்போது, எதைப்பற்றியும் முக்யமாய் நினைப்பது சாத்தியமாகாது; மனது சலனமற்றுப் போகும்; இதனால் எளிதில் தூக்கம் சாத்தியமாகும்.

**கொட்டாவி விடும்போது வாயின்மீது கை பொத்திக்கொள்வது எப்படி உண்டான வழக்கமென்று தெரியுமோ?** நற்பழக்கம் என்பதினால் அல்ல. மூட நம்பிக்கையே இதற்கு ஆதிகாரணம். காற்றில் பிசாசங்கள் ஆவி ரூபமாய் எங்கும் சஞ்சரித்து வந்ததாய்க் கருதப்பட்ட நாளில் இது தோன்றிற்று. மறைக்கும் கையினால், கெட்ட ஆவி உள்ளே நுழைந்து, மனிதனைப் பிடித்துக்கொண்டு விடாமல் தடுத்துக்கொண்டார்களாம்!

### அழகு ரகசியம்

பின்பக்கம் சேர்ந்துகொள்ளும் அதிகப்படி சதையை இவ்வாறு குறைத்துக் கொள்ளலாம்.



(1) தரையில் காலை நீட்டி உட்கார்ந்து முதுகை நேராகவும், முழங்கால்களை இறுக்கியும் வைத்துக்கொள்ளவும். பிறகு தரைமீது கைகளை லேசாக ஊன்றி, பின் புறம் சாய்ந்து, இரண்டு கால்களையும் தரையை விட்டு மேலே ஒரு அடி தூக்க வும். உடல் பளுவு பூராவும் கீழே இருக்க வேண்டும்; விழாமல் இருப்பதற்குமட்டும் கைகள் ஊன்றி இருக்கவேண்டும். பிறகு கால்களை இடப்புறம் திருப்பி, உடலை வலதுபுறம் இழுக்கவும்; மறுபடி வலது புறம் திருப்பி உடலை இடதுபுறம் இழுக்க வும். இந்தப் பயிற்சியை முதலில் மூன்று முறையும், பழகிப்போன பிற்பாடு, 20 தடவையும் செய்யலாம். அதிகப்படிச்சதை கரைந்துபோகும்!

(2) பயிற்சி இல்லாமல் கீழ்ப்பாகத்தில் உள்ள சதையைக் குறைக்கவும் வழி உண்டு. ஒவ்வொரு நாளும் குளிக்குமுன் இதைச் செய். ஐந்து நிமிஷம் போதும். இடுப்பைச் சுற்றி கெட்டியான ஒரு துண்டு கட்டிக்கொண்டு பலமாக இருப்பது தடவை பின்பக்கம் அடிக்கவும்! இடுப் பைச் சுற்றிக் கெட்டித் துணி இருப்பதால் வலிக்காது. அடிக்க மனம் இல்லாவிட் டால், கையால் நன்ருய்த் தேய்க்கவும்.

(3) முகத்திற்கு அழகு தருவது முக வாய்க்கட்டையும், தாடையின் 'லைனும்.' முகத்தின் அழகைக் கெடுக்க முகத்தின் அடியில் தோன்றும் அதிகப்படி சதை (டபிள்சின்) எப்படி உண்டாகிறது? நேராக முகத்தை வைத்துக்கொள்ளாததி ஞல் முக்கால்வாசியும் ஏற்படும். தலையைப் பின் சாய்த்து, முகவாயை உயர்த்தி இயற்கையாக வைத்துக்கொள்ளப் பழ குங்கள். இரவில் சில நிமிஷ நேரம் தலை யைக் குனிந்து திருப்பி, பயிற்சி செய்வ தில் செலவிடுங்கள்; தசைகள் இறுகிக் கொள்ளும்; சதை குறையும். கொஞ்ச





நாள் தலையணை இல்லாமல் தூங்கிப் பார்க்கலாம்! உயரமான தலையணைகள் நிச்சயமாய் இந்த Double Chinகளை உண்டாக்கும்.

**பழைய தயிருக்கும் ஒரு உபயோகம் உண்டு.** கறுத்த சருமத்தை வெளுக்க வைக்கவும். இது உபயோகப்படும். தயிரின் கெட்டிப் பாகத்தை வடிகட்டி எடுத்துக்கொண்டு சிறிது Cold Cream கலந்து, விழுதாக்கிக் கொள்ளவும். முகத்தை வெது வெதுப்பான ஜலத்தினுல் கழுவி இந்த விழுதை முகத்தில் தேய்க்கவும். எல்லாம் மறைந்த பிறகும் விடாமல் தேய்த்தால் முகத்திலிருந்து புரி புரியாக அழுக்குடன் தயிர் வெளிப்படும். சர்மம் மிருதுவாகவும், பளபளப்பாயும் தென்படும்.

## சமையல் பகுதி

(1) சர்க்கரை வள்ளிக்கிழங்கு ஹல்வா செய்யும் முறை :—

8 பலம் கிழங்கு
4 பலம் சர்க்கரை
முந்திரி, பிஸ்தா பருப்பு-2 டேபிள்ஸ்பூன



தேங்காய் துருவல் 2 டேபிள் ஸ்பூன்
நெய் $\frac{1}{4}$ கப்
ஏலப்பொடி
உப்பு (துளி)

இவை தேவை. கிழங்கை வேகவைத்து, தோல் நீக்கி, நன்ருக மசித்துக்கொள்ளவும். பருப்புக்களைத் துண்டமாக்கி நெய்யில் வறுத்துக்கொள்ளவேண்டும். சர்க்கரையைக் குறைந்த ஜலத்தோடு பாகு வைத்து, துளி பால் சேர்த்து அழுக்கை எடுத்து, பாகு முற்றின பதம் வந்ததும் கிழங்கு மொத்தை, பருப்புகள், தேங்காய் துருவலைப் போட்டு, துளி உப்புச் சேர்த்து 5 நிமிஷம் கிளறவும். பிறகு நெய் ஊற்றிக் கிளறி ஹல்வா பதத்தில் எடுத்து, ஏலப் பொடி தூவவேண்டும்.

(2) அரிசியில்லாமல் இட்டிலி செய்து சாப்பிட இந்த ரேஷன் நாளில், இந்த வகை உபயோகமாயிருக்கும். அனேகர்க்குத் தெரிந்து இருந்தாலும், தெரியாத சிலர்க்காக இதை எழுதுகிறேன். சமீபத்தில் ஒரு சகோதரி இதைச் செய்து பார்த்து, தன் வந்தனங்களைத் தெரிவித்திருக்கிருர்.

உளுத்தம்பருப்பு 1 ஆழாக்கு
பயத்தம்பருப்பு 1 ஆழாக்கு

தனித்தனியாக இவைகளை நனைத்து, அரைத்து ஒன்ருய்ச் சேர்த்து, உப்புப் போட்டு, இட்டிலிமாவு திட்டத்தில் கரைத்து வைக்கவும். முதல் நாள் மாலை அரைத்த மாவை, காலையில் இட்டிலி வார்த்தால் நன்ருக இருக்கும். மாலை ஆகாரத்திற்கு வேண்டுமானுல் அன்று காலையில் மாவு தயாரித்தால் போதுமானது. இட்டிலி புஷ்பம் போல் மிருதுவாயும் ருசியாயும் இருக்கும்.

## தையல் பகுதி

எளிதில் தைக்கக்கூடிய இந்தப் பார்டரை உங்கள் புடவை, சட்டைக்குத் தைக்கலாம். ஸாடின் தையலில் Shaded கலர்களில் தைக்கவேண்டும். அல்லது இரண்டு நிற லேசி டெய்சி தையலிலும் தைக்கலாம். அதாவது மஞ்சள் நிறத்தில் ஒரு சிறிய லேசிடெய்சி இதழ் தைத்து, அதன் மேலே சற்றுப் பெரிதாகச் சிவப்பு நிறத்தில் ஒன்று தைக்கவும். எடுத்துக்காட்டும்.





# Vatni வத்னி'

## நம் வட்டனுல் (ஸ்வதேசம்) விரும்பப்படும் சோப்

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஓர் அலாதி முறையின் நன்மை பயக்கும் அம்சங்கள் புகுத்தப்பட்டதும், பொருக்கி எடுக்கப்பட்ட சோதனைக்குள்ளான பொருள்களால் இந்தியாவிலேயே, இந்தியர்களுக்காக இந்தியர்களால் தயாரிக்கப்பட்ட கோத்ரெஜ் வத்னி டாய்லெட் சோப்புகள் இவ்வரிய குணங்களை உடையன:—

1. முற்றிலும் சிக்கனமுள்ளது. கெட்டியாயிருந்த போதிலும் மிருதுவானது. உபயோகிக்கும் பொழுது உடையாது, வீணாகாது. அதன் கடைசி செதிள் உள்ளளவும் பரிமளங்கமழும் க்ரீம் நுரையை அளிக்கிறது.
2. அது அதிக மிருதுத் தன்மையை உடையது—குழந்தையின் இளஞ் சருமத்திற்கு ரொம்பவும் நல்லது.
3. சுத்தம் செய்வதில் முதன்மையானது.
4. அதிசயிக்கத் தக்க குறைந்த விலையில் விற்கிறது.

## ஒப்புயர்வற்ற சுதேசி ஸோப்

முற்றிலும் சுத்தமானது.
மிருகக் கொழுப்பற்றதென்பதற்கு உத்தரவாதம்.
விருந்தினருக்கான சிறு கட்டியாயும் கிடைக்கும்




Godrej கோத்ரெஜ் சோப்ஸ், லிட்.
ரிஜிஸ்டர்டு
மதராஸ்: 164, பிராட்வே; கோச்சின்: 6/36, கல்வத்தி.

தாவர எண்ணெய்களினால் ஸோப்பு தயாரிப்பதில் முதன்மையானவர்கள்

# ஆனந்தமடத் தியாகி

## எம். எஸ். சுப்பிரமணிய அய்யர்

தியாகம் திகழும் தேசம் இது. தியாக வடிவான பூமியுமாம். ஆகஸ்ட் தியாகி, காங்கிரஸ் தியாகி, மான்யத் தியாகி, மான்யம் பெருத் தியாகி, தூக்கு மேடைத் தியாகி என்று பலவகையுண்டு. இவர்களை அனைவரும் அறிவர்.

ஆனந்தமடத் தியாகியின் பெருமையைப் பலரும் அறியார். ஆதலின், அத் தியாகிளது அருமையை இங்கே சிறிது ஆராய்வோம்.

சாந்தி, ஜீவன் இருவரும் இருண்ட காட்டினூடே கைகோத்து உலாவி நின்றனர். மறு தினம் இருவரும் அன்னையினிமித்தம் ஆருயிரை வழங்குவதாக உத்தேசம். உலாவி நிற்கையில், எதிரே உயரிய குன்று ஒன்று தென்பட்டது.

இருவரும் அக் குன்றின் மீது விரைந்து ஏறினர்; அதன் உச்சி சேர்ந்து, அப்பால் நோக்கினர். தொலைவிலே ஆங்கிலேயரின் தண்டு காணப்பட்டது. நல்லது நாளையே கடைசிப் போர், என்று இருவரும் முடிவு கொண்டனர்.

பின்பு, பாரதத் தாயை இருவரும் மனக்கண் முன்னே கண்டனர். கண்டதும் கானஞ்செய்யத் தொடங்கிவிட்டனர்.

*புய வலியால் சத்தியினால்*
*புத்திரரைக் காப்பாற்றி*
*நயமளித்துக் கரையேற்ற*
*நயக்கின்ற மாதா நீ!*
*துயர்செய்து கொடுமைபுரி*
*பகைவர்தமைத் தொலைப்பாய் நீ!*
*வயமிகுந்த மாதா! நின்*
*மலரடிகள் வணங்குவமே!*

அங்ஙனம் பாடியதும், இருவரும் சற்றே மெய்ம்மறந்து நின்றனர். பின்னர் நினைவு வந்ததும், மேலும் பாடலாயினர்.

*நீயே எம் அறிவாவாய்!*
*நீயே எம் அன்பாவாய்!*
*நீயே எம் இதயமாய்*
*நிறை உணர்வாய்! அஃதன்றி*
*ஓயாமல் எம் உடலின்*
*உள் ஊக்கி உயிர் நிறுத்தும்*
*தாயான வளி ஆவாய்!*
*தன்மை உனக்கிஃதாமே*

பாடி முடிந்ததும், இருவரும் காதோடு காதுவைத்து ஏதோ பேசிக்கொண்டனர். உடனே ஜீவன் என்பான் அவ்வனத்தினுள்ளே மறைந்து போனான். சாந்தி தனது ஆணுடையைக் களைந்தெறிந்து, பெண் வடிவங்கொண்டாள்.

நெற்றியிலே திலகம் ஜ்வலித்தது. கருமேகம்போன்ற கூந்தல் இருகன்னத்திலும் தொங்கித் தவழ்ந்தது. கையிலே கட்டைத் தம்புரா ஒன்று திகழ்ந்தது. கண்களிரண்டும் மருண்டு மருண்டு நோக்கின. வாயோ மாயவன் புகழை இசையுடன் உரையாநின்றது.

அக் கோலத்துடன் ஆங்கிலேயரின் பாசறை சேர்ந்தாள் சாந்தி. கட்டைத் தம்புராவை மீட்டிப் பிச்சைக்காரிபோல் பாட ஆரம்பித்தாள். இள மங்கையின் சாயலையும் கானத்தையும் கண்டவுடனே சிப்பாய்கள் சொக்கிப்போயினர்.

ஒருவன் தனது மீசையை முறுக்கிய வண்ணம், "பெண்ணே! காவடிச் சிந்து பாடு," என்றான். மற்றொருவனோ தனது தாடியை உருவிக்கொண்டு, "மாதவன் மீது கீதமொன்று பாடு, கேட்டு நெடுநாளாயிற்று," என்று கனிந்து கூறினான்.

இன்னொருவன், "நமது பத்திரகாளி மீது கீர்த்தனமொன்று பாடுவாயாக," என்று வேண்டிக்கொண்டான். வேறொருவனோ, வேதாந்தப் பாடல் படி. வீட்டுக்குத் திரும்புகிறேனோ, இல்லையோ?" என்று உள்ளம் உடைந்து உரைத்தான்.

விரும்பிய பாட்டனைத்துங் கேட்டு, சிப்பாய்கள் சிந்தை மகிழ்ந்தார்கள். ஒருவன்

அரிசி கொடுத்தான். ஒருவன் பருப்புத் தந்தான். ஒருவன் துணி ஈந்தான். பலர் காசு கொடுத்தனர். இவ்விதம் அவளுக்குச் சம்மானங்கள் நிரம்பின.

வாய் பாடிக்கொண்டேயிருக்க, அவளது கண்களோ பாசறையின் நிலையை ஊடுருவி நோக்கின. இடையிடையே அவள் பாட்டை நிறுத்திப் பேச்சுக் கொடுத்தும், தண்டின் தன்மையை உணர்ந்துகொண்டாள்.

சம்மானங்களையெல்லாம் அவள் மூட்டை கட்டும் சமயம், "அம்மா! நீ மீண்டும் எப்போது வருவாய்?" என்றான் ஒருவன். "சொல்லமுடியாது, நான் இருப்பதோ தொலைதூரம்," என்றாள் அவள். எவ்வளவு தூரமோ, என்று ஒருவன் வினவினான்.

"தியாகிகளின் கோட்டைக்கு அருகே நான் வசிக்கிறேன்" என்று சாந்தி பதிலுரைத்தாள். "தியாகிகளின் கோட்டையைக் குறித்தே நம் தளபதி உளவறிய ஊக்கம் கொண்டுள்ளான்," என்று கருதிய சிப்பாயொருவன் தளபதியிடம் அவளை இட்டுச் சென்றான்.

**தளபதி :** மாதே! உன் வீடு எங்கே?

**சாந்தி :** தியாகிகளின் கோட்டையருகே.

**தளபதி :** பெரிய கோட்டையா அது?

**சாந்தி :** ஆம் மிகப்பெரியது. ஆயுதங்களும் அதிகம்.

**தளபதி :** எத்தனை வீரர் உளர்?

**சாந்தி :** இருபதுமுதல் ஐம்பது ஆயிரம் இருக்கும்.



**தளபதி :** எந்தக் கோட்டையிலும் ஈராயிரவருக்குமேல் இருக்கமுடியாதே! என்ன உளறுகிறாய்?

**சாந்தி :** எண்ணியா பார்த்தேன்? உத்தேசமாகச் சொன்னேன்.

**தளபதி :** கோட்டைக்கு வெளியே எத்தனை தியாகிகள் இருக்கக்கூடும்?

**சாந்தி :** அவர்களுக்கு ஒரு கணக்கு ஏது? எல்லா மக்களும் தியாகிகள். எல்லாரும் வீரரே!

**தளபதி :** உண்மை பேசு.

**சாந்தி :** நானே பிச்சைக்காரி. பாட்டுப் பாடி வயிறு வளர்க்கிறேன். ஏதாவது காசு கொடுங்கள். நான் போகவேண்டும். வேண்டுமானல், எல்லாம் தெரிந்து கொண்டு நாளை மறுதினம் வருகிறேன்.

**தளபதி:** நாளை மறுதினமா? இன்றிரவே தகவல் தெரியவேண்டும். இந்தா ஒரு ரூபாய்.

**சாந்தி:** என்ன மடத்தனம்? நாற்பது மைல் நடந்துசென்று, இன்றிரவு திரும்ப முடியுமா?

**தளபதி :** நூறு ரூபா தருவேன்.

**சாந்தி :** ஆயிரம் தந்தாலும் என்ன? கால் நடையில் அவ்வளவு தூரம் போய் வர முடியுமா?

**தளபதி :** குதிரைமீது ஏறிச்சென்றால்?

**சாந்தி :** குதிரை ஏறத் தெரிந்தால், இங்கே பிச்சை எடுக்க வருவேனு?

**தளபதி :** குதிரை வீரனெருவன் தன் மடியில் உன்னைத் தாங்கிச் சென்றால்?

**சாந்தி :** ஆண் மகனது மடிமீதா? நான் பெண்பிள்ளையல்லவா? எனக்கு வெட்கம், மானம் கிடையாதா?

**தளபதி :** ஐந்நூறு ரூபாய் தருவேன். என்ன சொல்லுகிருய்?

**சாந்தி :** என்னுடன் வருவது யார்? நீரே வருகிறீரா?

**தளபதி :** இந்த இளைஞன், லாடன் வருவான்.

**சாந்தி :** சரி, சடுதியில் புறப்படலாம்.

* * *

**பி**ச்சைக்காரியின் வடிவையும் வனப்பையும் பார்த்த லாடன் என்பான் பிரமித்தான்; பெரு மகிழ்வு கொண்டான்; அவளுடன் போதல் ஒரு பாக்கியம் என்றே பூரித்தான். நமக்கு அப் பேறு கிட்டவில்லையே என்றும் வேறு சில இளைஞர் பேதுற்றனர்.

லாடன் என்பான் ஆனந்தம் மிகுந்து அழகிய அரபிக் குதிரையொன்று தேர்ந்து அதன்மீது ஏறிவந்தான். சாந்தியை அணுகியதும், தனது கையை நீட்டிக் "கண்ணே! நீயும் பரிமீது தாவியமர்வாய்" என்றான்.

சாந்தி அது கண்டு, "சை! நீ என்ன மனிதன்! இத்தனை ஆடவரின் முன்னிலையில் உன் பக்கத்தேயமர மாதொருத்தி விரும்புவளோ? பெண் தன்மை என்பதை நீ அறியாய் போலும்!" என்று கடிந்து கூறினள்.

"பெண்ணே! கோபம் வேண்டாம். நீ கூறும்வண்ணம் நடக்கக் காத்துள்ளேன். உனது கட்டளை யாது?" என்றான். "வீரா! சிறிது தூரம் மெதுவாக நீ மட்டும் பரிமீது செல். ஆடவர் நமது கண்ணுக்கு மறைந்ததும், பரிமீது அமர்வேன் நான்," என்றனள் சாந்தி. நல்லது என்று லாடன் கூறி மெல்லச் சென்றான்.

சிறிது நேரமானதும், பாசறை மறைந்தது. ஆடவரும் கண்ணில் படவில்லை. உடனே சாந்தி அந்த லாடன் கால்மீது தனது காலை ஊன்றி, அசுவத்தின் மீது தாவி, அவனுக்கு முன்பாக அமர்ந்தனள். "பரிமீதமர்ந்து பழக்கம் போலும்! பெருமிதமாக ஏறி அமர்ந்தனையே" என்று பாராட்டினன் அப் பரிவீரன்.

"அங்கவடியின் மீது காலைவைத்துச் சவாரி செய்யும் நீயும் ஒரு பரிவீரனே? இத்தகைய உன்னுடன் பரிமீது செல்லப் பெரிதும் பரிபவம் அடைகின்றேன் நான்," என்றனள் சாந்தி. அது கேட்டதும், வெட்கம் வந்து அவனை மூடிக்கொண்டது.

"பிச்சைக்காரப் பெண்ணின் முன்னே ஆங்கிலப் பரிவீரனெருவன் பேதுறுவதோ," என்று நினைத்தான் லாடன். அவ்வளவில், அங்கவடியிலிருந்து தனது காலையெடுத்தான். "என் கண்ணே! பார்த்தனையா என் சமர்த்தை?" என்றான்.

அக்கணமே சாந்தி அவனது கழுத்தை நெட்டிக் கீழே வீசித் தள்ளினள். குதிரையின் அடிவயிற்றிலே தனது காலினல் ஓர் இடி இடித்தனள். லாடன் குப்புற வீழ்ந்து எழுவதற்குள் குதிரை பறந்துவிட்டது. சாந்தியும் மறைந்துவிட்டாள்

லாடன் திரும்பி வருவதற்குள்ளாக, ஒற்றன் மூலம் உற்றதை உணர்ந்தான் அந்த ஆங்கில தளபதி. வந்து போனவள் பிச்சைக்காரியல்லள், என்று தெரிந்து கொண்டான்; வேவு பார்க்கவே வந்த விழுமிய பெண்பாவை இவள் என்று கூர்ந்தறிந்தான். இந்திய மாதரிலே—இளமாதரிலே—இத்தகைய சாகஸம் புரிவோரும் உண்டோ? என்று அதிசயித்தான்.

"சிப்பாய்களின் முன்னே நகைப்புக்கு இடமானேமே! எனது மதிப்பிசகு கண்டு அவர்கள் தம் மனத்தூடே எள்ளி நகையாடுவரே," என்று பல்லைக்கடித்தான்; பரக்க விழித்தான்; நெடுநேரம் அசைவற்று நின்ருன்.

"இனி, கணநேரமும் இங்கே தாமதிக்கலாகாது. படையனைத்தும் புறப்பட வேண்டும்," என்று அத் தளபதி ஆணையிட்டான். அவ்வாறே பாசறையைச் சுருட்டிக்கொண்டு படைகள் எழுந்தன. இதற்குள், அம்மாதைக் கண்டுபிடித்துக் கொணரவேண்டுமெனப் பரிவீரரில் சிலரை ஏவினுன்.

மனோவேகமாக அம்மாதைத் தேடிக் கொண்டு பரிவீரர் பயணமாயினர். பத்து மைல் தூரஞ் சென்றதும், லாடனது அரபிக் குதிரையை மட்டும் ஒரு மரத்தடியிலே அவர்கள் கண்டார்கள். பிச்சைக்காரப்பெண் பக்கத்தில் எங்கேயோ மறைந்திருக்கவேண்டும் என்று அவர்கள் எண்ணி அங்கேயே சற்று நின்றனர்.

இதற்கிடையிலே ஆகாயத்திலிருந்து துப்பாக்கி ரவை வந்து, அவர்களின் மண்டையில் பாய்ந்தது. "மேலிருந்து சுடுவோர் யார்? எங்கிருந்து சுடுகின்றனர் பார்ப்போம்," என்று அவர்கள் அண்ணாந்து பார்த்தார்கள்.

பார்த்ததுதான் தாமதம். ஒன்றன் பின் ஒன்ருகத் துப்பாக்கி ரவைகள் வந்து, அவர்களது முகத்திலும் கன்னத்திலும் பாயலாயின. "பிச்சைக்காரி பெரு வீரம் படைத்தவள் போலும்," என்று அவர்கள் வாய் திறக்குமுன், அவர்களின் உடலமோ துவண்டு வீழ்ந்தது.

தொடர்ந்து வந்த ஆங்கிலப் பரிவீரர் அனைவரும் தொப்பென வீழ்ந்து உயிர் துறந்ததை உணர்ந்தபின்னரே சாந்தி என்பாள் அம்மரத்திலிருந்து கீழே இறங்கினுள்; தான் ஏறிவந்த குதிரை மீதமர்ந்து, ஏனைய நான்கு பரிகளையும் உடன்கொண்டு அக்குன்றின் சாரல் சேர்ந்தாள்.

குதிரையுடன் சாந்தி வருதல் கண்டு 'நாளைத்தினம் போருக்கு நற்பரிகள் வாய்த்தன' என்று ஜீவன் சந்தோஷங்கொண்டான். சாந்திக்குக் கைலாகு கொடுத்துக் கீழே இறக்கினுன். அவளுடன் களிப்புடன் கீழே குதித்தான்.

பகைப் படையின் தொகை, தன்மை, தளவாட நிலை அனைத்தையும் அறிவித்தாள் சாந்தி. ஏதும் அறியாதவன்போல் கேட்டுவந்த ஜீவன் என்பானோ, அப்படைகள் எழுச்சிகொண்டு விட்டனவே என்று எக்களிப்புடன் கூறினுன்.

"மறுதினம் நாம் இருவருமே தனித்தனி நின்று அப்படையை எதிர்த்தழிக்க வேண்டும்," என்று சாந்தியும் ஜீவனும் பேசிக்கொண்டனர். அதற்காக வகை துறைகளையும் திட்டம் செய்துவைத்தனர்.

மறுதினம் பொழுது புலர்ந்தது. அதற்கு முன்னதாகவே சாந்தியும் ஜீவனும் போர்க்கோலம் பூண்டனர். ஆங்கிலப் படைவகுப்பு வந்து அணிவகுப்புக் கொள்ளுமுன்னம் அதனைச் சிதைக்க வேண்டுமென்று இருவரும் பரிமீதேறிப் பாய்ந்தனர்.

இருவர்மட்டும் போகின்றனரே. இரண்டாயிரவரை எதிர்த்தல் எங்ஙனம்? என்று ஏனைய தியாகிகள் எண்ணமிட்டு நின்றனர். எண்ணி நிற்க நேரமில்லை என்று ஒரு குரல் எழுந்தது. அவ்வளவுதான். பிரளயகால உருத்திரனேபோல் ஆங்கிலப் படையின்மீது பாய்ந்தான் ஜீவன். சாந்தியும் அவனைத் தொடர்ந்து சீறிச் சென்றனள்.

* * * *

பூழுமதி இரவு. வெள்ளியை உருக்கி வார்த்ததேபோல் நிலவு வீசுகின்றது. பகலெல்லாம் பயங்கரமாகத் தோன்றிய படுகளம் ஓய்ந்து காண்கின்றது. பீரங்கிகள் அலறவில்லை. துப்பாக்கி ரவைகள் பறக்கவில்லை. வாள்களும் மின்னவில்லை.

ஆனல் நரிகள் ஊளையிடுகின்றன. நாய்களும் குரைக்கின்றன. குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடப்போரின் மெல்லிய குரலும் கிளம்புகின்றது. மரணத் தறுவாயில் கிடப்போர் தண்ணீர் தண்ணீர் என்று தவிக்கின்றனர்.

எங்கும் பிணக்காடு! இரத்தக் குட்டை! பிணச் சேறு! குதிரைகளும் மனிதரும் மேலுங் கீழுமாய்க் கிடக்க, அக்காட்சி காணச் சகியாது. ஊதல் காற்று உறுத்து வீசுகின்றது. மனிதப் பூண்டு என்பதே இல்லை.

அத்தகைய ரணகளத்திலே நடுநிசியில் நன்மங்கை யொருத்தி தோன்றினள். அவள் கையிலே கொள்ளிக்கட்டை யொன்று கொழுந்துவிட்டு எரிகின்றது. பிணக்குவியல்களை அவள் புரட்டிப் புரட்டிப் பார்க்கிருள்; கருத்தில் உள்ள பொருளைக்காண முடியவில்லை.

குதிரைக் குவியல்களை அடியோடு பெயர்த்து நோக்குகிருள்; கைகளும் கால்களும் அறுபட்டுக் கிடக்கும் குன்றையும் ஊன்றிப் பார்க்கிருள். தான் கருதிவந்த பொருளைக் காணவில்லை. படுகளம் முழுவதும் பார்த்தாகிவிட்டது.

சலிப்பே கொண்டாள் அப்பெண் பாவை. கையிலிருந்த கொள்ளிக்கட்டையைக் கீழே எறிந்தாள். "கடவுளே! இதுவும் உன் சோதனையோ? என் கண்ணுளனைக் காணவில்லையே, அவரது உடலைக் காணமல் நான் உயிர் விடுதல் எங்ஙனம்? இருவரும் சேர்ந்துதானே போரில் புகுந்தோம்," என்று பொருமினள்.

பின்னர் மனம் வெடிக்கும்போல் இருந்தது. வாய்விட்டழுவோ விருப்பமில்லை. விம்மி விம்மிப் பெருமூச்சு விட்டனள். அப்போது, "சோதரியே! எழுந்திரு, ஏன் விம்முகின்ருய்? உன் போன்ருர்க்கு அழகோ இது?" என்று ஒரு குரல் காதில் விழுந்தது. உடனே அவள் நிமிர்ந்து பார்த்தாள்.

தவசியின் உருவமொன்று தென்பட்டது. படவே எழுந்துநின்று கைகூப்பினள். "சோதரி; புலம்பாதே. ஜீவனைக் காட்டுகின்றேன். என்னுடன் வா," என்றது அவ்வடிவம். அதனைத் தொடர்ந்து சென்ருள் அந்நல்லாள்.

சிறிது தூரஞ்சென்றதும், பிணமலையொன்று புலப்பட்டது. புரட்டிப் பார் என்ருர் அத்துறவி. அவ்வாறே புரட்டினள். அடியிலே ஜீவனது உடலம் தோன்றியது. அதனை எடுத்து மடியிலே போட்டுக்கொண்டாள். உயிரில்லையே என்று உள்ளம் உடைந்தாள்.

உடம்பெங்கும் ஒரே காயம். இரத்தம் வடிந்தபாடில்லை. அது கண்டதும், ஓ என்று அலறினள் அவள். துறவியோ "சோதரீ! சோதரீ! புலம்பாதே! ஜீவன் இறந்துபோனனு என்ன? கூர்ந்து பார்," என்று கூறினர். "நாடி பேசவில்லையே" என்ருள் சாந்தி.

**துறவி:** நெஞ்சைத் தொட்டுப்பார்?

**சாந்தி:** நெஞ்சிலும் துடிப்பு இல்லையே!

**துறவி:** மூக்கிலே விரல் வைத்துப் பார். சுவாசம் இருக்கும்.

**சாந்தி:** சுவாசமே இல்லையே.

**துறவி:** மீண்டும் பார். வாயிலே விரலை வைத்துச் சூடு உண்டோ என்று நோக்கு.

**சாந்தி:** தெரியவில்லையே.

உடனே அவர் தமது இடது கரத்தால் ஜீவனது உடம்பைத் தடவிக்கொடுத்தார். "பெண்ணே! இப்போது பார். பிரமை கொண்டுவிட்டாய். பிரமையை விட்டுவிட்டு, நிதானமாகப் பார்," என்ருர் அத்தவசி.

பின்பு, சாந்தி தொட்டுப் பார்த்து "கைநாடி மெதுவாகப் பேசுகிறது" என்ருள்.

**துறவி:** நெஞ்சில் கை வைத்துப் பார்.

**சாந்தி:** நெஞ்சு அடித்துக்கொள்கிறது.

**துறவி:** மூக்கிலே விரல் வைத்து நோக்கு.

**சாந்தி:** சுவாசம் சிறிதளவு வாங்குகிறது. வாயிலும் சற்றே சூடு காண்கிறது.

**துறவி:** நல்லது. அருகேயுள்ள அருவிக் கரைக்கு இந்த உடலைச் சுமந்து செல், பார்க்கலாம்.

சாந்தி வெகு இலகுவாக ஜீவனது உடலைத் தனது தோளில் தூக்கிச் சென்

ருள். அருவி நீரையெடுத்து, உடலில் படிந்திருந்த இரத்தத்தை எல்லாம் துடைத்தாள்.

இதற்குள் தவசியோ ஒரு மூலிகையைக் கொணர்ந்து பிழிந்தார் ஜீவனது உடலின் மீது. பிறகு அந்த உடம்பை மும்முறை அவர் தடவிக் கொடுத்தார். இதற்குள் ஜீவன் கண் திறந்தான், சாந்தியை நோக்கினன்.

**ஜீவன்:** சாந்தி! சண்டையில் ஜயித்தது யார்?

**சாந்தி:** தாங்களே ஜயித்தீர்கள். அத் தவசியைத் தொழுங்கள்.

ஜீவன் சட்டென எழுந்து பார்த்தான். தவசியோ மறைந்துவிட்டார். யாரைத் தொழுவது? இப்படியிருக்கையில், வந்தே மாதரம், வந்தே மாதரம் எனும் கோஷம் காதில் விழுந்தது. தொலைவிலே தியாகிகளின் ஆனந்த ஆரவாரமும் காதில் பட்டது.

**ஜீவன்:** சாந்தி! புத்துயிர் பெற்றவன் போல் காண்கின்றேன். என்னையறியாமல் என் உடம்பிலே ஓர் உணர்ச்சி உதித்துளது. நான் பட்ட காயங்களெல்லாம் ஆறி மறைந்துபோயினவே!

**சாந்தி:** அன்னையின் விலங்கை அறுத்தெறிந்தோம்; அன்னியரைப் புடைத்தோம், கெலித்தோம் என்ற ஆனந்தம். பட்ட காயங்கள் ஆறிவிட்டன.

**ஜீவன்:** நாம் இனி எங்கே போகலாம்? உன் விருப்பம் யாது? அங்கே நமது தியாக சோதரரின் ஆரவாரம் கேட்கிறதே. அங்கே போகலாமா?

**சாந்தி:** கூடாது. கூடாது. பாரதத் தாய்க்கு வெற்றி தேடித் தந்துவிட்டோம். கடமையைச் செய்து தீர்த்தோம். இனி நமக்கென்ன வேலை அங்கே? உங்களுக்கு வெகுமதியில் விருப்பம் உண்டா என்ன?

**ஜீவன்:** அன்னை பணியில் ஆவியை அர்ப்பணஞ் செய்யச் சபதம் பூண்டோம்; நமது வேலை தீர்ந்துவிட்டது. இனியும் அன்னை பணிபுரிய அவசியம் இல்லையா என்ன?

**சாந்தி:** அன்னை பணி ஆற்றிவிட்டோம். ஏனையோர் மேற்கொண்டு பணி புரிவாராக.

**ஜீவன்:** நாம் என்ன செய்வது?

**சாந்தி:** தேசமெங்கும் துறவிக் கோலத்தில் சுற்றிவருவோம். புண்ணிய தலங்களைத் தரிசிப்போம்.

**ஜீவன்:** அப்பால்?

**சாந்தி:** அப்பாலா? இமயமலைச் சாரல் செல்வோம். அங்கே கொடிவீடொன்று சமைப்போம். அன்னையின் நலங்கருதி ஆண்டவனைத் துதிப்போம்.

**ஜீவன்:** துதித்து.........

**சாந்தி:** பாரதத்தாய் பெருவளஞ் சுரக்க வேண்டாமா? எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டாமா?

**ஜீவன்:** ஆம். ஆம். நாமும் உடனிருந்தால்.

**சாந்தி:** சுதந்திரம் தேடித் தந்தபின் நமக்கென்ன வேலை அங்கே! உலகெலாம் செழிக்கவேண்டும், எங்கும் சாந்தி நிலவ வேண்டும் என்பதே நம் பூமியின் கோட்பாடு அல்லவா? அதுபற்றித் தவம் கிடப்போம், வரம் வேண்டுவோம்.

**ஜீவன்:** அப்படியா?

**சாந்தி:** அதுவே தியாகியின்—ஆனந்த மடத் தியாகியின் இலட்சியம். உலகெலாம் ஓங்கவேண்டும் என்பதே நமது முன்னோரின் விழுமிய போதமன்றோ? இதனைத் தவத்தின் மூலமே சாதிக்கவேண்டும்.

**ஜீவன்:** சரி, புறப்படுவோம் வா, தவக்கோலம் தாங்குவோம்.

பின்பு சாந்தியும் ஜீவனும் அருவிக் கரையை விட்டகன்று, அகண்டமான உலகை நோக்கிப் பயணமாயினர். வந்தே மாதரம் எனும் கீதத்திலே மறைந்தனர் இருவரும்.



# மாப்பிள்ளை

ராமகுமார்



பிரணதார்த்தி சென்னையில் உள்ள ஒரு சிறிய சப்போஸ்ட் ஆபீஸில் போஸ்ட் மாஸ்டராயிருந்தான். அன்று அவனுக்கு ஆபீஸில் வேலையே ஓடவில்லை. குட்டிபோட்ட பூனைபோல் குறுக்கும் நெடுக்கும் அலைந்து கொண்டிருந்தான். அவனை ஏதோ கவலை பிடுங்கித் தின்றுகொண்டிருந்தது. ஏதோ கவலை என்ன ? அதுவோ ஐப்பசி மாதம். தீபாவளியோ நெருங்கிக் கொண்டிருந்தது. கல்யாணம் ஆகி இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. குடும்பக் களேபரங்கள் காரணமாகத் தலைத் தீபாவளி அதுவரை நடக்கவில்லை. இந்த வருஷம்தான் தலைத்தீபாவளி நடப்பதாக இருந்தது. ஆகவே, அவன் லீவுக்கு எழுதிப் போட்டிருந்தான். ஆனல் ஏனே, தெரியவில்லை; அன்றுவரை அவனுக்குப்பதிலேவரவில்லை. ஆபீஸ் மூடுவதற்கு முன்பாக— அதாவது ஐந்தரை மணிக்குள்ளாக— பதில் வந்துவிட்டால் அன்றிரவே அவன் தேவகோட்டைக்குப்புறப்பட்டு விடலாம். தேவகோட்டையில்தான் அந்தச் சமயம் அவன் மாமனர் இருந்துவந்தார். தேவகோட்டைக்கு அவன் போவது அதுதான் முதல் தடவை. அதுமட்டும் அல்ல, கல்யாணமானபின் தன் வேட்டகத்துக்குப் போவதே அதுதான் முதல் தடவை. ஆகவே அவன் முன்னதாகவே வேண்டிய சாமான்கள் எல்லாம் வாங்கிச் சேகரித்து வைத்துக்கொண்டான். ஏன் ? பெட்டி படுக்கைகளையும்கூடக் கட்டி வைத்துக் கொண்டுவிட்டான். பதில் வரவேண்டியதுதான் தாமதம், வேட்டகத்தாருக்குப் புறப்படத் தயாராயிருந்தான்.

மணி நான்கு அடித்தது. 'கண கண . வென்று டெலிபோன் மணியும் அடித்தது'

பிரணதார்த்தி வெகு ஆவலுடன் ரிஸீவரைக் கையில் எடுத்தான்.

"ஹலோ!"

அட! அது அவனுடைய லீவுக்குப் பதில் இல்லையே! யாரோ மணியார்டர் சம்பந்தமாக அல்லவா விசாரித்தார்கள்! நம்பிக்கை இழந்து பிரணதார்த்தி தொப்பென்று பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். பிறகு சட்டைப் பையிலிருந்த கடிதம் ஒன்றை எடுத்துப் படிக்கலானான். அது அவன் மனைவியிடமிருந்துவந்த கடிதம். அதை அவன் அதற்கு முந்தி எத்தனையோ தடவைகள் படித்துவிட்டான். இருந்தாலும் அவன் ஆவல் அடங்கவில்லை. ஆகவே இன்னுமொருதடவை அதைப் படிக்கலானான்:—

அன்புள்ள............................க்கு,

அடியாள் அநேக நமஸ்காரம். தங்கள் அன்பு நிறைந்த கடிதம் கிடைத்தது. அது மனதுக்கு மிகவும் ஆறுதல் அளித்தது. நம்முடைய இந்த நீண்டகாலப் பிரிவுக்கு ஒரு விமோசனம் கிடையாதா? என் இதயம் தங்களுடைய மதிமுகத்தைப் பார்க்கத் துடியாய்த் துடித்துக்கொண்டிருக்கிறது. நமக்குக் கல்யாணம் நடந்து இரண்டு வருஷம் ஆகியும் தங்களைக் காணும் பாக்கியமோ, தங்களுக்குச் சேவை செய்யும் சந்தர்ப்பமோ அடியாளுக்கு இதுகாறும் கிடைக்கவில்லை. இந்தத் தீபாவளிக்காவது நாம் ஒருவரையொருவர் சந்திக்கும் பாக்கியம் கிடைக்கும் என்று நம்புகிறேன், லீவு கிடைத்தவுடன் தாமதிக்காமல் புறப்பட்டு வந்துசேருங்கள். தங்கள் வரவை வழிமேல் விழிவைத்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன், அக்காளும் அரியலூரிலிருந்து வந்திருக்கிறாள். தங்களுக்கு எப்பொழுது லீவுகிடைக்கும்? இரண்டு நாள் முன்னதாகவே வந்துவிட ஏற்பாடு செய்யுங்கள். மனம் இருந்தால் மார்க்கம் உண்டு. ஆகவே அடியாளை மறக்காமல் அவசியம் இரண்டு நாட்கள் முன்பே வந்துவிடுவீர்கள் என்று மனப்பூர்வமாக நம்புகிறேன்.

இப்படிக்கு,
தங்கள் அடியாள்
தர்மு

கடிதத்தைப் படித்து முடித்ததும் மறுபடியும்சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டான் பிரணதார்த்தி. அப்பொழுது ஐந்து அடிக்க இரண்டே இரண்டு நிமிஷம்தான் பாக்கியிருந்தது. மணி ஐந்தடிப்பதும் டெலிபோன் மணி ஒலிப்பதும் சரியாக இருந்தது.

"ஹலோ! யார் பேசுகிறது?"

பிரணதார்த்திக்கு இரண்டுவார லீவு கிடைத்துவிட்டது!

## 2

தேவகோட்டைக்குப் புறப்பட வேண்டும் என்று பிரணதார்த்தியின் உள்ளம் ஒரேயடியாகத் துடித்துக் கொண்டிருந்தது. அவனுக்குத் தன் அகமுடையாளைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல்கூட அவ்வளவாக இல்லை. அவனுக்குத் தன் அரட்டைக் கல்லி மைத்துனியினிடம் அசாத்தியக் கோபம்! அவளுடைய வாய் அரட்டையையும் கொட்டத்தையும் வாய் அடி அடித்தே அடக்கிவிடவேண்டும் என்று அவன் உள்ளூரக் கறுவிக்கொண்டான்.

கல்யாணத்தின்பொழுது பிரணதார்த்தி ரொம்ப ரொம்ப சங்கோசியாக இருந்தான். அத்துடன் ஒடிந்து விழுந்துவிடுபவன்போல, அவ்வளவு ஒல்லியாகவும் இருந்தான், ஊதினால் ஒரு காததூரம் பறந்துவிடுவானோ என்றும் நினைக்கத் தோன்றியது. அதையெல்லாம் வைத்துக்கொண்டு அவனுடைய பெரிய மைத்துனி அவனைப் பரிகாசம் செய்து பிராணனை வாங்கிவிட்டாள். அதுவும் ஏசல் பாட்டுக்கள் இட்டுக்கட்டி எங்கும் தலை தொங்கும்படி செய்துவிட்டாள். சிற்சில சமயங்களில் இது மாதிரியான கேலி வார்த்தைகளும் பரிகாசச் சொற்களும் மனிதனுடைய மனத்தைப் புண்படுத்திவிடுவது இயல்புதானே? ஒரு அழகான பெண் ஒரு ஆண்பிள்ளையை ஏசுவது என்றால்?—அதுவும் யார்? சொந்த மைத்துனி! சொந்த மைத்துனி அப்படியெல்லாம் ஏசுவது என்றால் ஒரு மனிதனுக்குக் கோபம் வருமா, வராதா? நீங்களே சொல்லுங்கள்!

கல்யாணம் ஆனதும் பிரணதார்த்தி சென்னைக்கு வந்துவிட்டான். அவன் மாமனார் நாகபட்டினம் கோர்ட்டு வருமானம் பற்றாமல் நகரத்தார்களின் சீமையாகிற கோட்டைக்குச் சென்றுவிட்டார். இருந்தாலும் பிரணதார்த்தியினால் தன் மைத்துனியின் வார்த்தைகளை மறக்கமுடியவில்லை.

ஒருநாள் பிரணதார்த்தி தபாலாபீஸிலிருந்து திரும்பி வந்ததும் சாய்வு நாற்காலியில் சாய்ந்த வண்ணம் சற்றே இளைப்பாறலானான். அப்பொழுது திடீரென்று அவனுடைய மனத்தில் ஒரு யோசனை எழுந்தது. அவன் அந்த யோசனைப்படி, மனம் வைத்தால் மைத்துனியின் பரிகாசத்துக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடலாம். அடுத்த கணமே அவன் எழுந்து கடைவீதிக்குப் போனான். கையில் கரலாக் கட்டைகளுடன் திரும்பி வந்தான்.

அன்றுமுதல் அவன் தேகாப்பியாசம் செய்யலானான். பல யோகாசன நிபுணர்களைக் கலந்து

கொண்டு ஆசன வகைகளும் செய்யலானான். தேகத்துக்கு வலு ஊட்ட எண்ணி யாருக்கும் தெரியாமல் முட்டைகளும் 'அடிக்க'லானான். தொடர்ந்தேற்றியாகத் தேகாப்பியாசம் செய்ததில் அவன் கைகளுக்குப் பலம் ஊறிற்று. கால்களுக்குப் பலம் உண்டாயிற்று. யோகாசனத்தில் ஈடுபாடு கொண்டதன் பலன்தானோ, என்னவோ! யோகியைப் போலத் தாடியும் வளர்க்கத் தொடங்கிவிட்டான்.

இரண்டு வருஷங்கள் உருண்டோடிவிட்டன. இரண்டு வருஷங்கழித்துப் பார்ப்பவர்களால் பிரணதார்த்தியை அடையாளமே கண்டு கொள்ள முடியாது. அப்படி உருமாறி விட்டான். அவன் நெற்றிச் சுருக்கங்கள் மறைந்தன. கன்னங்கள் அதிரஸம்போல உப்பின. கை-கால் எலும்புகள் நல்ல வலுவுற்றன. பிரணதார்த்தி என்ற பெயர் அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. பீமசேனன் என்ற பெயர்தான் அவனுக்கு மிகவும் நன்கு பொருந்தும் போலிருந்தது. பிரணதார்த்தி என்னும் பெயரை மாற்றிப் பீமசேனன் என்று வைத்துக்கொண்டு விட்டால் என்ன என்று அவன் உள்ளத்திலே சிந்தனை ஓடிற்றோ, ஓடவில்லையோ! நமக்குத் தெரியாது. பீமசேனன் என்ற பெயர் பொருத்தமாக இருக்கும் போலத்தான் நமக்குத் தோன்றியது. அவன் குஞ்சம்மாளை—அதாவது தன் அரட்டைக்கல்லி மைத்துனியின் அதிகப் பிரசங்கித்தனம் செய்யும் வாயைத் தைத்துவிட்டுத்தான் மறு காரியம் என்று பிரயாணத்துக்கு ஆயத்தமானான்.

## 3

மறு நாள் காலை பத்து மணி சுமாருக்குப் பிரணதார்த்தி தேவகோட்டை ரோடு ஸ்டேஷனில் இறங்கினான். பிறகு பஸ் பிடித்து அவன் தேவகோட்டைக்குப் புறப்படும்பொழுது கிட்டத்தட்ட மணி ஒன்றரை ஆகிவிட்டது. அவன் நீண்ட ஷேர்வானியும் பைஜாமாவும் அணிந்திருந்தான். கையில் பிரம்பு சுழன்றுகொண்டிருக்க அவன் பஸ்ஸிலிருந்து 'ஆர்ச்'சுக்கருகில் உள்ள பஸ் ஸ்டாண்டில் இறங்கினான். இறங்கி இங்கும் அங்கும் சுற்றுமுற்றும் பார்த்தான். அவனை அழைக்க யாரும் வரவில்லை. அவன் முதல் நாளே புறப்படுவதற்கு முன்னால் தன் மாமனாருக்குத் தந்தி அடித்திருந்தான். தந்தி இலாக்காவின் ஊழல்தான் தெரிந்ததாயிற்றே! அவருக்கு அந்தத் தந்தி இடைக்கவில்லை போலும்!

ஒரு ஒற்றை மாட்டு வண்டிக்காரனைப் பிடித்து, "ஏன் அப்பா, உனக்கு வக்கீல் ராமசர்மா வீடு தெரியுமா?" என்று கேட்டான்.

"இந்த ஊரிலே இருந்துக்கிட்டு அதுகூடத் தெரியாமல் இருக்க முடியுங்களா?" என்றான்.

வண்டிக்காரனின் வார்த்தைகளைக்கேட்ட பிரணதார்த்தி வேறு பேசவில்லை. பேசாமல் வண்டியில் ஏறி உட்கார்ந்துவிட்டான்.

அரை மணி நேரத்துக்கெல்லாம் வண்டி திண்ணன் செட்டி ஊருணியருகில் உள்ள ஒரு வீட்டு வாசலில் போய் நின்றது. ஏழு எட்டு வயதிருக்கும், ஒரு பெண் வாசல் திண்ணையில் விளையாடிக்கொண்டிருந்தாள். வாசற்புறமிருந்த கிணற்றங்கரையில் வேலைக்காரன் ஒருவன் துணி துவைத்துக் கொண்டிருந்தான். பிரணதார்த்தி வண்டியிலிருந்து இறங்கி அவனைப் பார்த்து, "ஏன் அப்பா! இதுதானே ராமசர்மாவின் வீடு?" என்று கேட்டான்.

"ஆமாமுங்க!"

"ஐயா வீட்டிலே இருக்கிறாரா?"

"இல்லீங்க! வேங்கடாசலம் ஐயர் வீட்டுக்கு சீட்டாடப் போயிருக்காருங்க!"

"சரி, உள்ளே அம்மாகிட்டே போய்ச் சொல்லு, மாப்பிள்ளை ஐயா வந்திருக்கிறாங்கன்னு! என்றான்" பிரணதார்த்தி.

அதைக் கேட்டதுதான் தாமதம்; திண்ணையில் விளையாடிக்கொண்டிருந்த பத்து வயதுப் பெண் ஒரே ஓட்டமாக உள்ளே ஓடி மாப்பிள்ளை வந்திருக்கும் செய்தியை உரத்த குரலில் ஒலிபரப்பினாள்.

வேலைக்காரன், "மாப்பிள்ளை ஐயாவுங்களா? வாங்க" என்று கைகூப்பிக்கும்பிட்டான். பிறகு வண்டியிலிருந்து சாமான்களையெல்லாம் இறக்கினான், அதற்குள் அங்கே ஒரு சிறிய கும்பலே கூடிவிட்டது. வேலைக்கார முருகன் பிரணதார்த்தியை ஒரு அறைக்கு அழைத்துச் சென்றான்.

சிறிதுநேரத்துக்கெல்லாம் ஒரு சின்னப் பெண் வெள்ளி டம்ளர் ஒன்றைக் கொண்டு வந்து வைத்து, "மாப்பிள்ளை! சர்பத்துச் சாப்பிடுங்கள்!" என்றாள்.

வெய்யில் வெக்கையைத் தாளாத, பிரணதார்த்தி வெகு ஆவலுடன் வெள்ளி டம்ளரை எடுத்து ஒரு வாய் குடித்தான். குடலைக் குமட்டிக்கொண்டு வந்தது உப்புக் கரிப்பு. டம்ளரை ஒரு ஓரத்தில் 'நக்'கென்று வைத்தான். வந்ததும்வராததுமாக என்ன வேடிக்கை வேண்டிக்கிடக்கிறது!" என்று அவனுக்கு எரிச்சல் பற்றிக்கொண்டு வந்தது. இருந்தாலும் அவன் யாரிடம் தன் ஆத்திரத்தைக் காட்டிக்கொள்ளமுடியும்?

சிறிது நேரத்துக்கெல்லாம் கதவு திறந்தது. பரிசாரகன் உள்ளே நுழைந்து, "மாப்பிள்ளை வாளா? வாருங்கள், டிபன் செய்யலாம்!" என்று அழைத்தான். பிரணதார்த்தி எழுந்து போஜன சாலைக்குச் சென்றான். அழகான ஆசனம் போட்டு வெள்ளித்தட்டு ஒன்றில் நேர்த்தியான சிற்றுண்டி வைத்திருந்தது. பிரணதார்த்தி பேசாமல் கண்களைக்கூடக் கொட்டாதவாறு சிற்றுண்டித் தட்டையே பார்த்துக்கொண்டிருந்தான்.

இதற்குள்ளாகப் பக்கத்து அறையிலிருந்து மெட்டிகள் குலுங்க யாரோ நடந்து வரும் சத்தம் காதில் விழுந்தது. அப்பொழுது ஒரு சின்னப் பெண் உள்ளே நுழைந்து, "அத்திம்பேரே! நடு அக்காள் வருகிறாள்" என்றது.

குஞ்சம்மாள்தான் வருகிறாளோ என்று எண்ணினான் பிரணதார்த்தி. அடுத்த கணமே அவன் தன் சட்டைக் கைகளைத் தூக்கி முடித்து விட்டுக்கொண்டான். தன் பலம் பொருந்திய புஜங்களைக் குஞ்சம்மாள் ஒரு தடவையாவது பார்க்கவேண்டும் என்று அவனுக்கு அந்தரங்க அவா.

"கடைசியில் எப்படியோ உங்களுக்கு எங்கள் நினைவு வந்ததே!" என்று சொல்லிக்கொண்டே ஒரு யுவதி உள்ளே நுழைந்தாள். பிரணதார்த்தியின் முகத்தைப் பார்த்ததுதான் தாமதம்; வீறிட்டுக்கொண்டு சத்தமிட்டவாறு அவள் உள்ளே ஓடிவிட்டாள். அவள் குஞ்சம்மாள் இல்லை என்பதைப் பிரணதார்த்தி உடனே ஊகித்தறிந்துகொண்டுவிட்டான்.

அடுத்த சில கணநேரத்துக்கெல்லாம் பக்கத்து அறையில் பெண்கள் 'கசமுச' வென்று பேசும் குரல் கேட்டது.

"ஏண்டி? என்ன? ஏன் ஓடி வந்துவிட்டாய்?"

"அட கடவுளே! வேறு யாரோன்னா உட்கார்ந்திருக்கிறான்!"

"என்னடி இது உளறுகிறாய்? உனக்குப் பித்தம் கித்தம் தலைக்கேறிவிட்டதா என்ன?"

"ஊஹூம்!"

"என்னடி 'ஊஹூம்' வேண்டிக்கிடக்கிறது? சொல்லடி, நம்ம பஞ்சுதானே?"

"இல்லை?"

"இல்லையா? அப்படின்னா யாரு?"

"எனக்கு என்ன தெரியும்?"

"இதென்ன கூத்து! ஏதாவது கண்கட்டு வித்தைக்காரனா? இல்லை மோசக்காரனா, அல்லது பகற் கொள்ளைக்காரன்தானா?"

"ஆளைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது!"

"அம்மா! அவன் கையோடு துப்பாக்கி வேறு கொண்டு வந்திருக்கிறான், அம்மா!" என்றான் ஒரு பையன்.

அவன் கையில் கொண்டுவந்திருந்த பிரம்பைப் பார்த்த ஒரு பையன் "அவன் எத்தனை பெரிய தடிக்கம்பு கொண்டுவந்திருக்கிறான், தெரியுமா?" என்றான்.

"அப்படியா? அப்படியானால் நமக்கு ஒரு பெரிய ஆபத்துத்தான் நேரப்போகிறது, ஏ முருகா! சட்டுன்னு ஓடிப்போய் ஐயாவைக் கையோடு கூட்டிக்கொண்டு வா!" என்றாள் வீட்டுக்கு எஜமானி அம்மாள்.

வேலைக்கார முருகன் ஓடினான், ஓடினான்; அவ்வளவு வேகமாக ஓடினான். பிரணதார்த்தி சிற்றுண்டி அருந்தியவாறே பக்கத்தில் கிடந்த சில புஸ்தகங்களை எடுத்துப் பார்த்தான். அவற்றில் எம். ஆர். சர்மா என்று எழுதியிருந்தது, பிரணதார்த்திக்கு அடுத்த கணமே விஷயம் விளங்கிவிட்டது. அவனுடைய மாமனார் என். ராமசர்மா அல்லவா? தவறுதலாகத்தான் வேறு இன்னொருவருடைய வேட்டகத்துக்கு வந்துவிட்டோம் என்பதை அவன் உடனே உணர்ந்துகொண்டுவிட்டான். முகத்தில் முறுவலிப்புத் தாண்டவமாடச் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு சிறிது நேரத்திற்கெல்லாம் தன் அறைக்குச் சென்றான்.

## 4

வேலைக்கார முருகன் வேகமாக ஓடிவந்து தன் எஜமானருக்குச் சகல விவரங்களையும் தெரிவித்தான். விடுமுறை நாள் ஆதலால் அங்கே எல்லோரும் கூடியிருந்தார்கள். எம். ராமசர்மா என். ராமசர்மா இரண்டுபேருமே அங்கு வந்திருந்தனர். வேலைக்கார முருகன் வந்தபொழுது ஆட்டம் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. முருகன் இரைக்க இரைக்க ஓடிவந்து, "எசமான்! சட்டுப்புட்டுன்னு வீட்டுக்கு வாங்க!" என்றான்.

அவன் முகத்தைப் பார்த்த ராமசர்மா கதிகலங்கிப்போய், என்னடா விசேஷம்? யாருக்காவது உடம்பு கிடம்பு சரியில்லையா, என்ன?" என்று கேட்டார்.

"ஒரு திருட்டுப்பயல் வீட்டுக்குள்ளே வந்து புகுந்துக்கிட்டிருக்கானுங்க!" என்றான் முருகன்.

எல்லோரும் ஆச்சரியத்துடன் அவனைப் பார்க்கலாயினர். "திருட்டுப்பயலாவது, பட்



# பரிசு ரூ. 1000

(ஒரு நூதன கண்டு பிடிப்பு)

## மாய மோதிரம்

இந்த மோதிரம் அபூர்வ மந்திர சக்தியுடன் தயாரிக்கப்பட்டது. இது ஆச்சரியகரமான வேலைகளைச் செய்கிறது. எவரேனும் இம்மோதிரத்தை அணிந்துகொண்டால் எவ்வளவு கஷ்டமான காரியமாக இருந்தாலும் அல்லது தடுக்க முடியாத விபத்தாகஇருந்தாலும் வெற்றி பெறுவர். அது உங்களை எல்லாவிதமான ஆபத்துகளினின்றும் வியாதிகளிலிருந்தும் காப்பாற்றும். துர்கிரஹங்களின் தொந்தரவு நீங்கும். இம்மோதிரத்தை அணிபவர் தம் காதலரை (அவரானாலும் அவளானாலும் சரி) சுலபமாக வசப்படுத்தலாம். அவரானாலும் அவளானாலும் உங்களுக்குக் கட்டுப்பட்டு, தம் செய்கைக்காகப் பச்சாத்தாபப்படுவார். நீங்கள் காதல் உத்தியோகத்தில் வெற்றிபெற்று ஏராளமான சம்பத்தையும் அடைவீர்கள். இம்மோதிரம் உங்களுக்கு ஒரு மெய்க்காப்பாளனாக உதவும். இதை ஒரு முறை பரீட்சித்து இதன் ஆச்சரியகரமான பலன்களை முதல்இரவே காணுங்கள். விலை ரூ. *1—15—0* ஸ்பெஷல் ரூ. *3—0—0* மிக்க சக்தி வாய்ந்தது ரூ. *3—15—0*, போஸ்டேஜ் தனி. பலனளிக்காவிடில் விலை திருப்பியளிக்கப்படும்.

**Principal,**

SHINING MESMERISM HOUSE (C. K.)

**Kartarpur (E. P.)**

## பிரிய சகோதரிகளே!

நான் ஓர் நர்ஸ் அல்ல, டாக்டரும் அல்ல. எனக்கு வைத்தியமும் தெரியாது. நானே உங்களைப்போல் ஓர் குடித்தனப் பெண். எனது கல்யாணமான ஒரு வருடத்திற்குப் பின் துர்ப்பாக்கியத்தினால் லிகோரியாவும் (வெட்டை) சூதக வியாதியும் ஏற்பட்டு விட்டன. மாதவிடாய் நின்று விட்டது. அவ்வாறு ஏற்பட்டாலும் மிகுந்த வேதனையுடன் சொற்பமாகவே வெளி வந்தது. வெள்ளை நீர் (ஸ்வேதப்ரதர்) அதிகம் வெளி வருவதால் தினம் தினம் மிகவும் பலவீனம் அதிகரித்துக் கொண்டு வந்தது. முகம் வெளுத்து விட்டது. வீட்டு வேலை செய்யவும் முடியவில்லை. எப்பொழுதும் தலை கிறுகிறுப்பு இருந்து வந்தது. இடுப்பு வலியும் ஏற்பட என் சரீரமே கெட்டு விட்டது. என் கணவர் நூற்றுக்கணக்கான ரூபாய் செலவு செய்து மருந்து வாங்கிக் கொடுத்தும் பலன் இல்லை. இரண்டு ஆண்டுகள் மிகுந்த துக்கத்துடன் ஓடி மறைந்தன. நல்ல காலமாக ஒரு நாள் ஓர் சந்நியாசி பிச்சைக்காக என் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தார். நான் பிச்சை போட வெளியில் வந்ததும் அவர் என் முகத்தைப் பார்த்து, "அம்மா, உனக்கு என்ன வியாதி? இந்த வயதிலேயே உன் முகம் பஞ்சு போன்று இருக்கிறதே?" என்றார். நான் முழு விருத்தாந்தங்களையும் கூறினேன். அவர் என் கணவரைக் கூப்பிட்டு ஓர் மருந்து சொன்னார். அம் மருந்தை 15 தினங்கள் சாப்பிட்டதும் என் முழு வியாதியும் தீர்ந்து விட்டது. ஆண்டவன் அருளால் இப்பொழுது நான் பல குழந்தைகளுக்குத் தாயாக இருந்து வருகிறேன். இம் மருந்தினால் நூற்றுக்கணக்கான பெண்களுக்கு நன்மை செய்தும் வருகின்றேன். இந்த அற்புத மருந்தை இக்கொடிய ரோகத்தினால் வாடும் என் சகோதரிகளின் நன்மைக்காகவே அசல் விலைக்குக் கொடுத்து வருகிறேன். ஆண்டவன் எனக்குப் போதிய செல்வம் அளித்திருக்கிறார். இதன் மூலம் நான் லாபம் சம்பாதிக்க விரும்பவில்லை. ஒரு பெண்ணிற்கு 15 தின மருந்தின் அசல் விலை ரூ. *2—14—0* [ரூபாய் இரண்டு அணா பதினான்கு] தபால் செலவு தனி.

இத்துஷ்ட ரோகத்தினால் பீடிக்கப்பட்டவர்கள் உடனே எழுதுங்கள். என் கையால் மருந்து தயாரிக்கப்பட்டு வி. பி. பி. மூலம் அனுப்புகிறேன். தர்மத்தின் பொருட்டு அசல் விலைக்கே மருந்து கொடுக்கப்படுகிறது. அவசியம் கவனிக்க: இந்த ரோகத்திற்குத்தான் என்னிடம் மருந்து உண்டு. மற்ற வியாதியைப் பற்றிய மருந்திற்கு எழுதற்க.

**Shrimati. BIBI CHARAN PIARI**

**Sant Nagar (C. K.)** **Jullundur City.**

டப்பகலில் வீட்டுக்குள் வந்து புகுந்துகொள்ள வாவது?" என்றார் ராமசர்மா.

திருட்டுப்பயலோ, கொள்ளைக்காரனோ அல்லது பைத்தியக்காரனோ, தெரியாதுங்க. 'ஐயா மாப்பிள்ளை நான்' என்று சொல்லுகிறானுங்க!" என்றான் முருகன்.

அதைக்கேட்டு எல்லோரும் 'கடகட' வென்று சிரித்தனர்.

ராமசர்மா, "அவன் எப்பொழுதடா வந்தான்? இப்பொழுது என்னடா செய்து கொண்டிருக்கிறான்?" என்று கேட்டார்.

"இரண்டு இரண்டரை மணி சுமாருக்கு வந்தானுங்க. அவன் கையில் பெரிய தடி ஒன்றும் துப்பாக்கி ஒன்றும் இருக்குதுங்க. சமையல் அறைக்குள்ளே புகுந்து சாப்பிட உட்கார்ந்திருக்கிறானுங்க. வீட்டிலே அம்மாமார்களெல்லாம் ரொம்ப பயந்துக்கிட்டிருக்காங்க!" என்றான் வேலைக்காரன்.

"என்ன? துப்பாக்கி இருக்கிறதா? நீ வீட்டை விட்டு ஓடி வந்துவிட்டாயா?" என்று கேட்ட ராமசர்மா பறந்து விழுந்து கொண்டு பித்தனைப் போலத் தலைகால் தெரியாமல் ஓடலானார்.

வீட்டை அடைந்ததும் அடையாததுமாக "எங்கேடா அவன்?" என்று இரைந்தார்.

பிரணதார்த்தி வெளியே வந்து அவருக்கு நமஸ்காரம் செய்தான். "நீங்கள்தானே ராமசர்மா" உங்களிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்." என்று நயமாகச் சொன்னான்.

ராமசர்மாவுக்கு ஆச்சர்யம் தாங்கவில்லை. "தாங்கள் யார்?" என்று கேட்டார்.

"என் பெயர் பிரணதார்த்தி. என். ராமசர்மாவினுடைய மாப்பிள்ளை. நான் வண்டிக்காரனிடம் வக்கீல் ராமசர்மா வீட்டுக்கு ஓட்டுமாறு சொன்னேன். அவன் இங்கே கொண்டு வந்துவிட்டான். எனக்கு இப்பொழுதுதான் என் தவறு புரிந்தது. நீங்கள் வந்தபின் உங்களிடம் மன்னிப்புக்கேட்டுக்கொண்டு போக வேண்டும் என்று இவ்வளவு நேரம் காத்துக் கொண்டிருந்தேன்"

ராமசர்மா அதைக் கேட்டு வயிறு வெடிக்கச் சிரித்தார். பிறகு "இரண்டு ராமசர்மாக்கள் இருப்பதனால் கட்சிக்காரர்கள்தான் இவ்வளவு நாட்களாகத் தர்ம சங்கடப்பட்டுக்கொண்டிருந்தார்கள். எனக்கு வரவேண்டிய கட்சிக்காரர்கள் அவர் வீட்டுக்கும், அவருக்கு வேண்டிய கட்சிக்காரர்கள் என் வீட்டுக்கும் வந்து குழம்பிக்கொண்டிருந்தார்கள். இதுவரை மாப்பிள்ளைகள் இம்மாதிரி தவறிவந்ததில்லை. அந்தத் தவறுதல் இப்பொழுதுதான் முதல் தடவையாக ஏற்பட்டிருக்கிறது!" என்றார் ராமசர்மா.

"தேவகோட்டை வக்கீல்கள் பெருத்த-வழக்கும் பெருத்த ஊர் அல்லவா? இம்மாதிரி தவறுகள் ஏற்படுவது சகஜம்தான்!" என்றான் பிரணதார்த்தி.

"நீங்கள் கையோடு ஒரு துப்பாக்கி கொண்டு வந்து எங்களைக் கதிகலங்க அடித்து விட்டீர்களே."

"அது 'கேப்' வைத்துச் சுடும் விளையாட்டுத் துப்பாக்கி அல்லவா?" என்றான் பிரணதார்த்தி.

ராமசர்மா அப்பொழுதுதான் நிம்மதியான மூச்சுவிட்டார். பிறகு அவர் ஒரு வண்டி கொண்டுவரச் சொல்லிப் பிரணதார்த்தியை என். ராமசர்மா வீட்டுக்கு அனுப்பிவைத்தார்.

## 5

ராமசர்மா வீட்டுக்குச் சென்றதும் வேங்கடாசலம் அய்யர் வீட்டுச் சீட்டுக் கச்சேரி களைகட்டவில்லை. ஒரு கை குறைந்ததும் அவரவர்கள் சீட்டுக்கட்டை, கட்டிவைத்து விட்டுத் தங்கள் தங்கள் வீட்டுக்குப் புறப்பட்டு விட்டனர். என். ராமசர்மா இருந்த இடமோ புதுக்கியம்பனி. அவர் சைக்கிளை எடுத்துக் கொண்டு தம் வீட்டுக்கு வந்துசேர்ந்தார். காபி சாப்பிட்டுவிட்டுக் கையில் பேப்பருடன் தம் அறையில் வந்து உட்கார்ந்தார். அதே சமயம் அவர் வீட்டு வாசலில் ஒரு வண்டிவந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய பிரணதார்த்தி, "இதுதானே ராமசர்மா வீடு?" என்று கேட்டான்.

"ஆமாங்க!"

"மாப்பிள்ளை ஐயா வந்திருக்காங்கன்னு போய்ச் சொல்லு!"

மாப்பிள்ளை என்ற சொல்லைக் கேட்டதுமே ராமசர்மாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர் எழுந்து வாசலில் 'விடுவிடு' என்று வந்தார். ஆஜானுபாகுவான ஒருமனிதன் நின்று கொண்டிருந்தான். வண்டிக்காரன் பெட்டியை எடுத்துக் கொண்டிருந்தான். ராமசர்மா, இரைந்து, "யாரடா அங்கே?" என்று கூப்பிட்டார்.

பிரணதார்த்தி அவருடைய முகம் போயிருந்த போக்கைக் கண்டு கல்லாய்ச் சமைந்து விட்டான். ராமசர்மா கோபத்தை அடக்க மாட்டாமல், "காலிப்பயலே! போடா, இங்கிருந்து! உன் வேலையை இங்கும்காட்ட வந்து விட்டாயா? நானா ஏமாறுபவன்? போக்கிரி

ராஸ்கல்! மாமனுர் என்று சொல்லிக்கூப்பிட என்னைத்தான் பார்த்தாயோ?'' என்று இரைய ஆரம்பித்தார்.

அதற்குள் வேலைக்காரர்களும் வீட்டார்களும் கூடிவிட்டனர். ராமசர்மா அவர்களைப் பார்த்து, "ஏண்டா நின்றுகொண்டிருக்கிறீர்கள்? கல்தா கொடுத்துத் தள்ளுங்களேண்டா, இவனை!" என்று கடிந்துகொண்டார்.

பிரணதார்த்தி, "நீங்கள் தவருக எண்ணிவிட்டீர்கள், மாமா! நான் உங்கள் மாப்பிள்ளை பிரணதார்த்திஹரன்தான்!" என்ருன்.

"மோசக்காரப்பயலே! எனக்கு என் மாப்பிள்ளையை அடையாளம் தெரியாது என்ரு எண்ணிஞய்? என்னை அப்படி யெல்லாம் ஏமாறுபவன் என்று எண்ணுதே! என் மாப்பிள்ளை உன்னைப்போல அயோக்கியன் இல்லை. இப்பொழுது இங்கிருந்து போகிருயா? இல்லை, போலீஸைக் கூப்பிடட்டுமா?'' என்ருர் ராமசர்மா.



பிரணதார்த்தி அதற்குமேல் பேசாமல் வண்டியில் ஏறி உட்கார்ந்தான். பிறகு வண்டிக்காரனைப் பார்த்து, "பஸ் ஸ்டாண்டுக்குஓட்,

டப்பா, வண்டியை!" என்றான். வண்டி பஸ் ஸ்டாண்டை நோக்கிப் புறப்பட்டது.

ராமசர்மா உள்ளே வந்து நாற்காலியில் உட்கார்ந்தார். "ஏன்னா? உங்களுக்கு மூளை கிளை புரண்டுவிட்டதா, என்ன? வீட்டுக்கு வந்த மாப்பிள்ளையை இப்படி வாசலிலேயே நிறுத்தி அடித்து விரட்டிவிட்டீர்கள்!" என்று சொல்லிக்கொண்டே அவரருகில் வந்து நின்றாள் அவருடைய சகதர்மிணி.

"என்னது? மாப்பிள்ளையா? யார் மாப்பிள்ளை? யாரோ ஊர் சுற்றிக் காவாலிப் பயல் அல்லவா அவன்?"

"உங்களுக்கு எப்படித் தெரியும்?"

ராமசர்மா அன்று மத்தியானம் வேங்கடாசலம் ஐயர் வீட்டில் நடந்த விஷயத்தை விவரமாகச் சொன்னார்.

"இரண்டுபேருடைய பேரும் ஒன்றாக இருப்பதால் நம் மாப்பிள்ளை அங்கே தவறுதலாகப் போயிருக்கக்கூடாதா?" என்று சந்தேகத்தை எழுப்பினாள் சகதர்மிணி.

"ஆனால் நம் மாப்பிள்ளை வருவதாயிருந்தால் வருவதற்கு முன்னால் தகவல் கொடுத்திருக்க மாட்டானா? முதன்முதலாக நம் அகத்துக்கு வருகிறான். தகவல் கொடுக்காமல் வரவே மாட்டான். ஆகவே வந்தவன் யாரோ திருட்டுக் காவாலிப் பயல் என்றுதான் நினைக்கிறேன்!" என்றார் ராமசர்மா.

"தீபாவளிக்கு மாப்பிள்ளை வரப்போறது தான் நமக்கெல்லோருக்கும் தெரிந்துகிடக்கிறதே! ஆகவே தகவல் கொடுக்காமலும் வரலாம் அல்லவா?" என்றாள் அவருடைய சகதர்மிணி.

அதற்குள் குஞ்சம்மாள் அங்கே வந்து, "இப்பொழுது வந்தவன் கட்டாயம் பிரணதார்த்தியாக இருக்க முடியவே முடியாது. நான் இந்த ஜன்னல் வழியாக அவனை நன்றாய்ப் பார்த்தேன்!" என்றாள்.

"குஞ்சம்மாள் சொல்வதுதான் சரி. நம் மாப்பிள்ளை ரொம்ப ஒல்லியாயிற்றே! இவனோ பயில்வான் மாதிரி பருமனாக அல்லவா இருந்தான்! நம் மாப்பிள்ளை பீமசேனனைப்போல எப்படி ஆகமுடியும்? எனக்கு ஒன்றும் பிரணதார்த்தியின் முகம் மறக்கவில்லை!" என்று குஞ்சம்மாளை ஆதரித்துப் பேசினார் ராமசர்மா.

அதே சமயத்தில் வேலைக்காரன் ஒரு தந்தியைக் கொண்டுவந்து கொடுத்தான். அது பிரணதார்த்தி அனுப்பிய தந்தி. தந்தி இலாகாவின் அசகாயசூரத்தனம் யாருக்குத்தான் தெரியாது?

"அட! அவன் நம் மாப்பிள்ளைதான்!" என்றார் ராமசர்மா.

"அப்படியானால் இப்பொழுது என்ன செய்வது?" என்றாள் ராமசர்மாவின் சகதர்மிணி.

"பஸ் ஸ்டாண்டு பக்கம்தான் போயிருக்கிறான். நம் ஊரிலிருந்து பஸ்போகும் லட்சணம் தான் நமக்குத் தெரிந்த விஷயம் ஆயிற்றே! அப்படியே பஸ் கிடைத்துப் போயிருந்தாலும் சென்னைக்கு இந்நேரத்தில் வண்டி ஏது! இதோ போய் நான் மாப்பிள்ளையை அழைத்துவந்து விடுகிறேன்!" என்று கூறியவண்ணம் ராமசர்மா சைக்கிளை எடுத்துக்கொண்டு பஸ் ஸ்டாண்டுக்குப் புறப்பட்டார்.

திரும்பிவந்த பிரணதார்த்தி யாரிடமும் அந்தச்சம்பவத்தைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவில்லை. ஏனென்றால் அவன் காரணமாக எல்லோருமே வெட்கித் தலைகுனிந்துபோயிருந்தனர். ஒரு நாள் யாரோ ராமசர்மாவைப்பற்றிப் பேச்சு எடுத்தார்கள். அப்பொழுது பிரணதார்த்தி, "எனக்கு இன்னொருவருடைய வேட்டகத்தில் கிடைத்த வரவேற்பும் மரியாதையும் எத்தனையோ பேருக்குத் தன் சொந்த மாமனார் வீட்டிலேகூடக் கிடைக்காது!" என்று சொன்னான். அதற்குமேல் 'குட்'டை உடைக்கவில்லை.

(வங்காளிக் கதை ஒன்றைத் தழுவியது)




<u>தொடர் கதை</u>

## கே. எம். முன்ஷி — ஸுரேந்திரநாத் சாஸ்திரி

மொழி பெயர்ப்பு — கீழையூர் தி. சேஷாத்திரி

"பிறகு என்னதான் செய்யலாம் என்று சொல்கிறாய்?"

"எனக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றுகிறது." தாமோதரமேதா சாமந்தனைப் பார்த்துக்கொண்டு மெதுவாகச் சொல்ல ஆரம்பித்தார்:

"கஜினி அமீர் இதுவரை வீரர்களுடன் சண்டையிட்டிருக்கிறான். அவன் வெறுங் காற்றுடனும் மக்கள் இல்லாத வெற்றிடங்களுடனும் சண்டையிட்டதில்லை. அந்த எதிரிதான் அவனைத் தோற்கடிக்கமுடியும்."

" அதாவது......"

"அதாவது பட்டண் அதன் வழியையும் முற்றிலும் காலி செய்து விடவேண்டும். அவன் வந்து வேண்டுமானால் காற்றுடன் மோதட்டும்."

"அதைத்தான் நானும் சொல்கிறேன்." என்று சாமந்தன் ஆமோதித்தான்.

பீமதேவன் பெருமூச்சு விட்டார். "பிறகு நான் என்ன செய்வது? பயந்துகொண்டு உட்கார்ந்திருக்கவா?" என்றார்.

மேதா சிரித்துக்கொண்டே சொன்னார்: "இல்லை மகாராஜா, நீங்கள் எல்லாம் சைனியத்தை அழைத்துக்கொண்டு பிரபாசி செல்லுங்கள். உங்களுக்கு வெற்றி வேண்டும் என்றால் அவன் ஸௌராஷ்டிரக் காடுகளில் அலைமோதி அவதியடைந்து அழியவேண்டும்."

ராய் ரத்னாதித்யன், "ஆனால் பிரபாசி பட்டணத்தின் கோட்டை மிகவும் சிறியதாயிற்றே" என்று ஒரு கேள்வியைக் கிளப்பினான்.

"சிறியதாயிருந்தால் என்ன? பெரிதாக எவ்வளவு நேரமாகும்? அங்கே பகவானுடைய அருளும் குருதேவருடைய தூண்டுதலும் கிடைக்குமல்லவா? அங்கே சண்டையிடும் ராஜபுத்திர வீரர்கள் கோட்டையைக் காக்கவல்ல, இஷ்ட தேவதையின் புனிதமான கோயிலைக் காக்கவல்லவா சண்டையிடுவார்கள்? 'இங்கே வெற்றி அல்லது கைலாசத்தில்

இடம்.' இந்த ஆசையை வைத்துக்கொண்டு தலையைக்கூடப் பணயம் வைப்பார்களே."

பீமதேவனுடைய கண்கள் அகன்று ஒளியுண்டன. அவர் மீசையைத் தடவி விட்டுக் கொண்டார். அவர் புத்திக்கூர்மைக்கு ஒரு நல்ல உணவு ஏற்பட்டது, அதோடு ஜலத்தில் குளித்தெழும் ஒரு பெண்ணுருவம் அவர் கற்பனையில் தோன்றி, அதற்கு உயிரும் ஒளியும் ஊட்டிற்று. ஒரு நிமிஷத்தில் அந்த உரு கருத்தை அழித்து மறைந்தது.

"மேத்தாஜீ! ரொம்ப சரி. நான் என் இஷ்ட தேவதையருகில் நின்று அவன் அருள் கொண்டு சண்டை போடுவேன்; சத்துருக்களைச் சாடுவேன். உலகம் என்னுடைய மிகச் சிறந்த பராக்ரமச் செயல்களைப் பார்க்கட்டும்." பீமதேவனின் குரலில் பெருமை சந்தோஷத்தைப் பருகி மயங்கி ஆரவாரம் செய்தது.

சாமந்தன் சொன்னான்: "மேதாஜீ, உங்கள் ஆலோசனை மிகவும் அற்புதம். இந்தக் கடைசி முயற்சியில் நாம் முற்றிலும் இழந்தாலும் பரவாயில்லை. ஆயிரம் சண்டையில் செய்ய முடியாத ஓர் வேலையை இதில் செய்து காட்டிவிடுவோம்; என்றாலும் நான் இங்கே தனியாகத் தங்கிவிடுகிறேன்."

தாமோதர மேத்தா அவசரமாக, "இல்லை. சௌஹான் வீர, ! உங்களை இந்தவிதம் இங்கே சாகவிட மாட்டோம்," என்றார்.

"நானும் இப்படிச் சாக ஆசை கொண்டவனில்லை. என்னிடம் முடிந்த அளவு வீரர்களை விட்டுப்போங்கள். நான்தான் கோகாபாபாவின் பூதம் என்று தெரியுமே. அந்தப் பூத முறையில் நானும் என்னாலான உதவியைச் செய்துவைக்கிறேன்."

"சாமந்தா. நீர் என்னுடன் அல்லவா இருக்கவேண்டும்." என்று பீமதேவன் சொல்ல ஆரம்பித்தார்.

"இல்லை அரசே, கஜினி அரசன் வந்துவிட்டாலும் அவனை நான்தான் பார்த்துக்கொள்ள வேண்டும்."

"உமக்கென்று நான் விட்டுவைத்தால் தானே!" பீமதேவன் சிரித்தார்.

"பிறகு உங்கள் வாய்க்குச் சர்க்கரை!"

தாமோதர மேத்தா தொடர்ந்து யோசித்தார்: "நீர் சொல்வது சரிதான். நானும் கம்பாதம் துறைமுகத்திலிருந்து பிரபாசிக்கு வேண்டிய பொருளைச் சமுத்திரமார்க்கமாக அனுப்பிக்கொண்டிருப்பேன்."

"சரி. பிரபாசிப் பட்டணத்தை உடனே காலி செய்தாக வேண்டும்."

"அப்படியே ஆகட்டும்" என்று விமலர் ஏற்றுக்கொண்டார்.

## அத்தியாயம்—12

## பிரபாசியில் ஏற்பாடுகள்

பெரிய கோயிலின் மேல் வெளியில் ஒரு மூலையில் சௌளா நின்றிருந்தாள். அவள் கண்களில் துடிப்பு உயிர்கொண்டு குதித்தது. பட்டணிலிருந்து வரும் வழியைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய முகம் சிவப்பேறியிருந்தது. அவளுடைய உள்ளம் அமைதியிழந்து ஆரவாரம் செய்தது. பட்டண் நாதன், ருத்ரனின் அவதாரம் "பாணுவளி" பீமதேவன் வருகிறார், அவளைக் கபாலியிடமிருந்து காப்பாற்றினாரே அவர்தான்,... ஆம், அவரேதான். இல்லை. இல்லை. பீமதேவன் அவளைக் கட்டியல்லவா எடுத்தார். உடலின் ஒவ்வொரு அங்கத்தையும் அவள் தொட்டுப்பார்த்திருக்கிறாளே! அன்று இரவு இனிமையின் சாரமான நிலவு; நதியின் ஸ்நானம், கபாலியின் அலறல்; மயக்க நிலையிலே பார்த்த அந்த வீர எழில் கொண்ட முகம்; வீரத்தைக் காக்கும் மீசை; மின்னி மயக்கும் கண்கள்; அவளை ஊஞ்சலிட்டு ஆட்டின அந்தப் பெருங்கைகள்—ஆகா! அந்த மறக்கமுடியாத இரவு, வாழ்க்கையின் உயிர்ப்பு முழுவதையும் ஒரே அலையாக மாற்றி உணரவைத்த அந்த நிமிஷம், அதன் ஞாபகம் இன்று அவளை என்னவோ செய்கிறதே! அந்த இரவையே இதோ கொண்டுவந்து நிறுத்துகிறதே!

இரண்டு நாட்களாக அவளுடைய ஸோமநாதன் உருவம் மாறியிருந்தது. திரிசூலம் தாங்



கிய சம்பு பார்வதி பினகபாணியாக மாறித் தோற்றமளித்தார். அவருடைய கழுத்தும் கைகளும் நிலவு வெளிச்சத்திலே பார்த்தவை போலத் தோற்றமளித்தன. இதயத்திலே பக்ஷி சிறகடித்தது. அதை அமர்த்துவது மிகவும் கடினமாயிற்று.

வெகுதூரம் வரை 'தேலவாடா' விலிருந்து வரும் வழிதான் காணப்பட்டது. அதிலே நூற்றுக்கணக்கான வண்டிகள் ஆடி ஆடி வந்துகொண்டிருந்தன. அவைகளுக்குப் பிறகு புழுதிப்படை கிளம்பிற்று. காட்டிலிருந்து அநேக குதிரை வீரர்கள் வெளியேறி வந்தனர்.

சௌளாவின் ஆவல் அதிகரித்தது. நான்கு நான்கு, ஐந்து ஐந்து வரிசையில் குதிரை வீரர்கள் வந்துகொண்டிருந்தனர். சற்று நேரத்தில் சௌளாவுக்கு ஒரு சப்தம் போடாமல் இருக்கமுடியவில்லை. எல்லாக் குதிரைகளுக்கும் முன் வரிசையில் பொற்கடிவாளம், ஜேணம் முதலியவை தாங்கிய ஒரு வெண் குதிரையின்மேல் குடை சாமரம் தாங்கிய பீமதேவருடைய வாகனம் வந்துகொண்டிருந்தது. அவருடைய குதிரை கனைக்கும் போதெல்லாம் அவருடைய கிரீடம், காது, வாள்பிடி, ஜேணம் முதலியவைகளில் பதித்திருந்த மணிகள் சூரிய வெளிச்சத்தில் ஒளி மின்னின. அந்த வெளிச்சத்தில் பீமதேவனுடைய உருண்டு பருத்த முகம் கொஞ்சம் மங்கி அழகு காட்டிற்று. குதிரைகளுக்கும் சௌளாவை நினைத்துத்தான் அவசரம்போலும்! அவைகள் மிகவும் வேகமாய் வந்துகொண்டிருந்தன.

அருகில் வரவர, சௌளா பீமதேவனுடைய கவசத்தையும் பாணத்தையும் நன்கு பார்க்க முடிந்தது. அவருடைய எல்லையற்ற பலத்தையும் அவள் எண்ணி அளந்து பார்த்து அளவிலா ஆனந்தம் கொண்டாள்.

அவர் தம் பின்னால் சேனையாகிய கங்கையை அழைத்துவரும் பகீரதனைப்போலத் தோற்றமளித்தார். குதிரை யானை முதலியவைகளைக் கொண்ட அந்தச் சேனை நிமிஷத்துக்கு நிமிஷம் பெருத்து, ஆரவார அலையடித்து, ஆவேசத்துடன் வந்துகொண்டிருந்தது.

கோவில் சிகரத்தின் உயர்ந்த ஒரு வாசலிலிருந்து அவள் கீழே வெளிக் கோட்டை மேட்டை பார்த்துக்கொண்டிருந்தாள். பிரபாசியினுடைய முக்கிய வாயிலில் பட்டண் அரசனை வரவேற்க, குருதேவர்தாமே வந்திருந்தார். அதையும் அவள் பார்த்தாள். அருகிலேயே பதினெட்டு நாள் உபவாசத்தினால் மெலிந்திருந்த சிவராசியும் கையிலே சிவலிங்கம் தாங்கி நின்றிருந்தான், அவனுக்குக் குருதேவர் இட்டிருந்த பிராயச்சித்தம் இன்னும் பூர்த்தியாகவில்லை. கூடவே இன்னம் அநேக சிஷ்யர்களும் மற்ற நகர மக்களும் நின்று



கொண்டிருந்தனர். ருத்ரனுடைய அவதார மாக வந்த பீமதேவனுடைய வரவேற்புக்காகத் தான் அவ்வளவு பேரும் நின்றிருந்தனர்.

2

இரைக்க இரைக்க, கூச்சலிட்டுப் பறக்கும் அந்தக் கிளியை அவள் தாயின் குரல் தடுத்து நிறுத்திற்று. "சௌளா? எங்கே பறப்பு!"

"எங்கேயும் இல்லையம்மா? எங்கேயும் இல்லை" என்று சொல்லிக் கொண்டே சௌளா ஓடிக்கொண்டேயிருந் தாள். பிறகு ஏதோ எண்ணியவளாக நின்று கொண்டாள். அவள் உள்ளம் துடிப்பேற ஆரம்பித்தது. அவள் குதித்துச்சென்று அம் மாவைக் கட்டிக்கொண்டாள். "அம்மா. மத்யான வேளை நடனம் இன்று யாருடைய முறையம்மா" என்று அங்கலாய்ப்பாய்க் கேட்டாள்.

"ஏன்? இன்று குண்டலாவுடைய முறை."

"இல்லை அம்மா. இன்று நான் நாட்டிய மாடுகிறேன் அம்மா. இப்பொழுதே"

கங்காதேவி பார்த்தாள் அவளுடைய கண் கள், திடுக்கிடும் இதயம், ஏறி இறங்கும் மார்பு, அமைதியின்மையால் உடைந்து வரும் குரல்... அவள் அறிந்துகொண்டாள்.

"சரி, நீ தயாராகு. நான் குண்டலாவைச் சொல்லிச் சரி செய்துகொள்கிறேன்."

டங்காக்களின் கடகட சப்தம் அருகேயே கேட்டது, மக்களின் ஆரவாரமும் நெருங்கிக் கேட்டது. கோட்டை வாயிலிலிருந்து குருதேவ னும் பீமதேவனும் உள் நுழைந்தனர். மற்ற அரசர்களும் மந்திரிகளும் உடன் வந்தனர், சௌளாவின் இதயமும் குதிபோட ஆரம்பித் தது. கால்களின் வேகம் குறைந்தது. ஸ்வர மும் முறிய ஆரம்பித்தது. பேச்சில் ஆழ்ந்த குருதேவரும் பீமதேவனும் அருகில் வந்துவிட் டனர். அதே முகம், அதே கண்கள், அதே நடை, அதே கைகள்; ஆனால் அதே முகம் இப் பொழுது எவ்வளவு பயங்கரமாக இருக்கிறது? கண்கள் எதிலேயோ ஒன்றி, நடை அழுத்த மாய் இருக்கிறது? இவர் அந்த இரவு பார்த்த அந்தப் பீமதேவரே அல்ல! இவர் சிறந்த வீரர், சண்டைபோடக் கோபம்கொண் டவர். சௌளாவின் கால்களைத் தானே நர்த் தனம் செய்யவிட்டு இதயம் தனியாகப் பெரு மூச்சுவிட்டுக்கொண்டிருந்தது. கங்க சர்வக்ஞ ரும் பூரணவளியும் கோயிலுக்குள் சென்றனர். சௌளாவின் நம்பிக்கைகள் தகர்ந்தன. பீம



தேவனுடைய கண்கள் ஒரு தடவை அவள் மேல் தங்கினது என்னவோ வாஸ்தவம்தான். ஆனால் அது உடனே எழுந்துவிட்டது, சௌளா பெருமூச்சுவிட்டாள். முன் பின் காணாத பொருளைப் பார்த்து வழுக்கி எழும் கண்கள் போலல்லவா கிளம்பிவிட்டன! பீம தேவன் அவருடைய சௌளாவை அறிந்து கொள்ளவில்லை. அவளுடைய தாமரைச் சரீ ரத்தில் பீமதேவன் பனி தெளித்துவிட்டார். அவள் உணர்ச்சிகள் எல்லாம் ஒன்றிவிட்டன.

பீமதேவனும் மற்ற அரசர்களும் கடவுளைத் தரிசித்தனர். அவர் மலரடி பணிந்தனர், பாததீர்த்தம் வாங்கிக்கொண்டனர். சந்த னம் பூசி, மணியடித்துப் பிறகு கடைசிக் கீதம் ராஜஹம்ஸம் போன்ற அந்த இளநர்த்தகி யின் பாட்டையும் கேட்டனர்!

எல்லாரும் கர்ப்பத்துவாரத்துக்கு வெளியே வந்தனர். குருதேவர் கைதூக்கி எல்லோரை யும் அமைதியாயிருக்க உத்தரவு அளித்தார். நாட்டியமும் சங்கீதமும் மட்டும் தொடர்ந்து நடந்துகொண்டிருந்தன, பீமதேவன் புருவம் சுளித்தது. "நிறுத்து சங்கீதத்தையும்" என்ற உத்தரவு சிம்ம கர்ஜனையாய் வெளிவந்தது. அவர் அந்த நடனமாணைப் பார்க்காமலேதான் அப்படிச் சொல்லிவிட்டார்.! பாடகியும் நாட் டியப் பெண்ணும் நிறுத்தி நின்றனர்.

"குழந்தைகளே." என்று குருதேவர் தன் னுடைய மந்தமான அழுத்தக் குரலில் ஆரம் பித்தார். "பகவான் ஸோமநாதர் மிகவும் சங் கடமான ஒரு நிலைமையைக் கொண்டுவந்துதந்தி ருக்கிறார். இன்னும் எட்டுப் பத்து நாட்களுக் குள் யவனர்கள் இங்கே வந்து சேர்ந்து விடு வார்கள். நான் இன்றுமுதலாகப் பகவா னுடைய இந்தப் புனிதமான இடத்தின் சர்வாதி

காரத்தை மகாராஜா பீமதேவன் வசம் ஒப்பு வித்து விடுகிறேன். கடவுள் ஊழியத்தில் ஈடு பட்டிருக்கும் இந்த வீரர் சொல்வதை எல் லோரும் கேட்க வேண்டும். அது உங்கள் கட மையாகும். கடவுளின் அருள் இவருக்கு இருக் கிறது......"

எல்லோரும் இதைக் கவனத்துடன் கேட்ட னர். சிலருக்கு இதைக்கேட்டு மிகவும் நடுக் கம் ஏற்பட்டது. எல்லோருமே நிலைமையை ஒருவாறு ஊகித்துக்கொண்டனர்.

இதற்குப் பிறகு பீமதேவனுடைய அதிகா ரக் குரலில் உத்தரவு வெளியேறிற்று: "நான் நிமித்தம் மட்டும்தான். கடவுளின் விருப் பத்தை நிறைவேற்ற இருக்கும் ஒரு சாதனமே யாவேன். திரிபுர அரக்கனைவிடப் பொல்லாத வனை ஒரு அரக்கன், நம்முடைய வாசலிலே வந்து நிற்கிறான், கடவுள் அருள்பெற்று நாம் அதற்கும் ஓர் முடிவு சேய்வோம்" என்று சொல்லி நிறுத்திய பீமதேவன் ஒருவாறு நிறுத்திக்கொண்டு சபையைச் சுற்றுமுற்றும் பார்த்தார். அவர் கண்கள் மீண்டும் ஒருமுறை சௌளாவினுடைய உடலில் சென்றடைந்தன. ஆனால் அவைகள் ஊக்கம் கொள்ளவில்லை.



இரண்டு நாள்களாயின. கம்பாதத்தி லிருந்து சில வண்டிகள் வந்தன. நாளைக்கு இன்னம் சில வண்டிகள் வரும். இங்குள்ள பிராமணர்கள், பெண்கள், குழந்தைகள் இவ்வி டம் விட்டுப் போய்விட வேண்டும். போகின்ற வர்கள் தங்களுடைய சொத்தையும் முடிந்த வரையில் எடுத்துச்செல்லுங்கள், ஆனால் உணவுத் தானியங்களை இங்கேயேதான் விட்டுச் செல்லவேண்டும், சேனை இப்பொழுது எல்லாருடைய வீட்டையும் பிடித்துக்கொள் ளும்......" என்று கூறிவிட்டு மந்திரி பக்கம் திரும்பிய பீமதேவன், "மந்திரி! ஊர் முழுவ தையும் உடனே காலிசெய்துவிடு" என்ற அனு மதியையும் உத்தரவாகவே கொடுத்தார். மீண் டும் குருதேவரிடம் தலை வணங்கி, "குருதேவா! இந்த நாட்டியம், சங்கீதத்தையும் நிறுத்திவிட உத்தரவிட்டு விடுங்கள். பகவான் அமீரை நாசம் செய்து முடித்த பிறகு மீண்டும் இந்த முறையை ஆரம்பித்து விடலாம்" என்றார்.

இவ்வாறு சொல்லிவிட்டு, பீமதேவன் குரு தேவரைத் தொடர்ந்து மற்றவர்களுடன் வெளி யேறினார், அப்பொழுது அவர் தோற் றத்தைப் பார்த்தவர்கள், இந்த வீர அரசரின் ஆணையை மீறுவது எவ்வளவு ஆபத்து என்று எண்ணி அப்பொழுதே நடுங்கினார்கள்.

மக்களிடையே பரபரப்பு ஏற்பட்டது. சௌளாவுக்கு ஒரே மயக்கம். கண்களை மூடிக்கொண்டு அவள் தன்னுடைய வீட்டுக்கு வந்துசேர்ந்தாள். அவரவர்களுக்கு இருந்த நிலையில் இவள் துடிக்கும் உள்ளத்தை அறிய யாருக்கு நேரம்?

வீட்டுக்குச் சென்றடைந்த சௌளா நடன உடையைக் களையாமலேயே படுக்கையில் சென்று விழுந்து, 'ஓ' என்று அழ ஆரம்பித் தாள். சண்டை செய்ய வந்த ருத்ரபகவான் தன்னைப் பார்க்காமலேயே போய்விட்டார்! மோகனவாயில் திறந்தும் அவள் கண்கள் மூடிவிட்டனவே!

பாவம், சௌளா, கடவுள் தன் நிருத்தி யத்தையும் சங்கீதத்தையும் ரசிக்கவேயில்லை என்று கவலைப்பட்டாள். அந்த நிலையில் அவள் சங்கீதமும் நடனமும் முற்றிலும் வீண் என்றே அழுதாள். ஆனால் அவளுக்குத் தெரியாது. பதினேழு நாளாக உபவாசம் இருந்து ஆடிப்போன சிவராசியின் கண்கள் சௌளாவை விட்டு அகலவேயில்லை.

சிவராசியும் ஏதோ ஒரு மரியாதைக்காகக் குரு இட்ட பிராயச்சித்தச் சட்டத்தை ஏற் றுக்கொண்டான். ஆம், அதை மீறினால் பட்ட சிஷ்யப் பதவியும் கிட்டாமல் போய்விட்டால் என்ன செய்கிறது? ஆனால் அவன் உள்ளத்

தில் அவமானம் சொக்கப்பனையாக எரிந்து கொண்டிருந்தது. குருதேவர் அவனை அவமதித்துவிட்டார். திரிபுர சுந்தரியின் வழிபாட்டை இடையூறு செய்து நிறுத்திவிட்டார். இது மன்னிக்கமுடியாத பெருங் குற்றமாகும். மகாபாதமான செயல். அதுமட்டுமல்ல, இந்தக் குற்றத்தை அவர் தம்முடைய தாசி மகளைக் காப்பாற்ற என்று திட்டமிட்டுச் செய்திருக்கிருர். சிவராசி பிறகு அவரை எப்படிக் குருதேவர் என்று மரியாதையுடன் வந்தனை செய்வான்? இனி அவருக்குக் குரு பதவியிலிருக்க உரிமையே கிடையாது. இந்த எண்ணங்கள் சுழன்று அவன் உள்ளத்தை வாட்டிக்கொண்டிருந்தன.

உபவாச தினங்கள் அதிகரித்துச் செல்ல செல்ல, அவன் உள்ளமும் பிராயச்சித்தத்திஞல் தெளிவாக வரவர அவன் தன்னுடைய குருதேவருடைய அபராதத்தை மற்ருெரு கோணத்திலிருந்து பார்க்க ஆரம்பித்தான். அன்று உண்மையிலேயே சௌளா திரிபுர சுந்தரியாகியிருந்தாள். அந்தத் திரிபுரசுந்தரியினுடைய பூஜையைத் தடுத்து, குருதேவர் மிகப்பெரியதொரு பாதகச் செயலைப் புரிந்துவிட்டார். ஆகவே அவரும் பிராயச்சித்தம் செய்துதாஞகவேண்டும். அந்த மகா பாதகத்துக்காகத்தான் திரிபுர சுந்தரி கோபமடைந்து கஜினி அமீரை அனுப்பிவிட்டிருக்கிருள்.

போதெல்லாம் சிவராசியின் எதிரே சௌளா தான் தோற்றமளித்தாள்.

அன்று இரவு பூஜை செய்தபோது இருந்த ஆடிய உருவத்திலேயே சௌளா அவனுக்குத் தோற்றமளித்தாள். பகலும் இரவும் அந்த உருவம் வாய்திறந்து அவனைத் துன்புறுத்திற்று. அன்று பாதியில் நின்ற வழிபாட்டை நிறைவேற்ற அவன் உள்ளம் துடிக்க ஆரம்பித்தது. கனவிலேயும் எவ்வளவோ முறை அதை நிறைவேற்றிஞன். ஆனல் விழித்தவுடன் அது ஆகவில்லை என்று அறிந்தால் மிகவும் கஷ்டப்படுவான். கஜினி நெருங்கி வருகிருன் என்பதைக் கேள்விப்பட கேள்விப்பட அவனுக்கு சந்தோஷம் ஏறி வந்தது. இப்படிப்பட்ட ஒரு பிரளயம் ஏற்படாமல் மஹாமாயையின் சக்தி எப்படி வெளிப்படும்? அவள் கோபம் தான் எப்படி அடங்கும்? இவ்வளவில் பீமதேவனும் வந்து சேர்ந்தார். அவருடன் குருதேவர் பேசியதன் ஒருபகுதியையும் சிவராசி கேள்விப்பட்டிருந்தான். எல்லாரும் அங்கிருந்து கம்பாதத்துக்கு அனுப்பப்படுவர். குருதேவர் போகாவிட்டால் சிவராசி தான் அங்கே போய் லகுலேச மதத்தின் கொடியைப் பறக்க விடவேண்டும்; சௌளாவும் வருவாள்; குருதேவர் வரமாட்டார். பிறகு என்ன வேண்டும்? இடையே ஒரு சந்தேகம் பீமதேவனும் சௌளாவும் ஒருமுறை இரவில் சந்தித்தவர்க

அவனுடைய இந்த எண்ணம் நாளாக ஆக வலுவடைய ஆரம்பித்தது. நடக்கும் ஒவ்வொரு செயலும் திரிபுரசுந்தரியினுடைய தூண்டுதலாலேயே, (அவளுடைய ஆத்திரத்தின் விருப்பத்தாலேயே) நடப்பதாக எண்ண ஆரம்பித்தான். கஜினி வந்து குருதேவரையும் அவர் ஸோமநாதரையும் அழிக்கத்தான் போகிருன். சிவராசி, சர்வக்ஞன் பட்டத்துக்கு வரப்போகிருன். இதிலும் ஒன்றும் சந்தேகமில்லை. உயிருடன் இருந்து உலகைக் கவனித்து வரும் மஹாமாயை திரிபுர சுந்தரி எதையும் பொறுத்துக்கொள்வாள். தனக்கேற்படும் அவமானத்தைப் பொறுத்துக்கொள்வாளா?




மஹாமாயாவின் சக்தியைப்பற்றி எண்ணும்

ளாமே? அதைப்பற்றி என்ன? பீமதேவன் கம்பாதத்துக்கா போகப் போகிறார்?

போதாததற்கு அன்று காலை பீமதேவன் தான் சௌளாவைப் பார்த்தாரே. சிவராசியும் பார்த்துக்கொண்டுதானே இருந்தான். அந்தப் பார்வையில் ஆசையிருப்பதாகவா தெரிந்தது! சிவராசிதான் ஆத்திரம் தீர, எழுந்து பசித்து வாடும் உணர்ச்சிகள் உண்டு குளிர நிருத்தியத்தைப் பார்த்து மகிழ்ந்தான்.

ஆனால் பீமதேவன் அந்தத் தேவியின் நடனத்தைக் கொஞ்சம்கூடத் தயவில்லாமல் நிறுத்தினாரே. அப்பொழுது சிவராசிக்கு என்ன கோபம் வந்தது? குருதேவரும் அதற்கு உடந்தை! என்ன பாதகம்? இந்தக் குரு இனி வீழ்ச்சியடையாமல் என்ன செய்வார்?

பிறகு குருதேவரும் பீமதேவனும் கோயிலிலிருந்து வெளியே சென்றபோது அவனும் உடன் இருந்தான். படிகள் இறங்கும்போது குருதேவர் "சிவராசி, போ, பாரணைசெய்துவிடு. இந்த ஆபத்தான காலத்தில் எல்லாத் தர்மங்களும் மாறத்தான் வேண்டும். பிறகு வா." என்றார்.

சிவராசியும் நமஸ்கரித்து வெளியேறினான். பூர்வாங்கமான கிரியைகளை முடித்து அவன் பாரணைசெய்ய நினைத்தசமயம் அவனுக்கு மஹாமாயையின் நினைவு வந்தது. எந்தத் தேவியைக் குறித்துப் பூஜைசெய்ததற்காக அவனுக்கு உபவாசம் இருக்க நேர்ந்ததோ அந்தத் தேவியை மீண்டும் ஒருமுறை தரிசிக்காமல் அவன் எப்படி உபவாசத்தை முடிக்கமுடியும்? சௌளாவின் ஆசைதான் அவனைத் தூண்டிற்று என்றும் சொல்ல முடியாது. பிராயச்சித்தம் அவனை அந்த நிலைத்தரத்திலிருந்து உயர அழைத்துச் சென்றுவிட்டது. லகுலேச மதத்தின் குரு பட்டத்தில் இரண்டாவது படியில் நின்றான் அவன். பதினெட்டு நாட்கள் உபவாசம் இருந்தவன். அவன் புத்தி நிர்மலமாகி, மஹாமாயாவின் அந்தரங்கமான பக்தியின் உயிர்கொண்டு, தபஸ்வியான சிவராசியை ஸனாதனதர்மத்தை நம்பி நிறைவேற்றுவதற்குத்தான் தூண்டிக்கொண்டிருந்தது.

சிவராசி பேசாமல் கங்காதேவியின் வீட்டுக்குச் சென்றான்.

வீடு திறந்திருந்தது. அவன் உள்ளே சென்றான். அங்கே கட்டிலில் குப்புறப்படுத்து



அழுது அழுது களைத்த சௌளா அப்படியே தூங்கிக்கொண்டிருந்தாள். வெகுநேரம்வரை சிவராசி அங்கேயே நின்று அவளுடைய ஒவ்வொரு அங்கங்களையும் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் உடல் நடுங்க ஆரம்பித்தது. அவன் கண்களில் ஒரு புத்தொளி எழுந்து பரந்தது. திரிபுரசுந்தரியினுடைய மனித உருவத்துக்குச் செய்யவேண்டிய பூஜையை முடித்தாக வேண்டும். குருதேவர் இல்லாத சமயத்திலேயே செய்துவிடுவது நல்லது. கஜினி வந்துவிடப்போகிறான். பிறகு அவனுக்கு இந்தப் பூஜையை செய்து முடிக்க நேரம் கிடைத்துவிடும். ஆனால் இப்பொழுது இதயத்தின் சுமையைக் குறைக்க அவன் வழிதேட ஆரம்பித்தான். சௌளாவின் ஒரு கால் கட்டிலின் கீழே தொங்கிக்கொண்டிருந்தது. அவன் அந்தக் கால்களை ஒரு கணம் கண்களை நிறுத்திப் பார்த்தான். ரோஜாப்பூப்போன்ற பட்டுக் கால். அதில் சில நரம்புகள் புடைத்திருந்தன. அவன் அப்படியே குனிந்து மிகவும் வணக்கத்துடன் மஹாமாயாவின் கால்களை வணங்கினான். சௌளா திடுக்கிட்டு எழுந்தாள். உபவாசத்தில் வாடி மாறிய உருவத்துடன் பயங்கரமாய் நிற்கும் சிவராசியைக் கண்டு அவள் திடுக்கிட்டாள். 'ஐயோடி! அம்மாடி' என்று ஓர் அலறல் போட்ட அவள் ஒரு தாண்டலில் அறையின் வெளியேறி, சிம்மத்தின் வாயிலிருந்து தப்பும் ஓர் மான் போல் ஓட ஆரம்பித்தாள். சிவராசியும் வெளியேறினான். ஆம், கோபமடைந்திருந்த திரிபுரசுந்தரி பூஜையை நிறைவேற்ற ஏன் அனுமதிப்பாள்? அவனுக்கு மிகவும் துக்கமாய்ப் போயிற்று. சித்தேசுவரனையும் ஹரதேவனையும் அழைத்து வர ஆளனுப்பி விட்டு, அவன் தன் உபவாசத்தை முடித்துக்கொண்டான்.




4

அங்கே, வீட்டிலிருந்து ஓடிய சௌளா கோயிலுக்குள் வந்தாள். அவள் தாயார் வில்வ பத்திரங்களை வெளியேற்றிச் சுத்தம் செய்துகொண்டிருந்தாள்.

"அம்மா அம்மா! அவன் மறுபடி பின்னால் வந்துவிட்டானம்மா."

"யாரடி அது? பீமதேவனா?

"என்ன அம்மா, உளறுகிறாய்? சிவராசி தாண்டீ!"

"நீயும் ஒரு பைத்தியமடி. பீமதேவனைப் பார்த்தாயா?"

"உன்னோடு சொல்ல வந்தேனே!........" சௌளாவுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. அவள் கண்களில் நீர் நிறைந்தது. "நான்தான் அதிர்ஷ்டம் குன்றியவளாயிற்றே. எனக்குச் சுகம் வேறு கேடா?" அவள் அழ ஆரம்பித்தாள். பெண் கண்ணில் நீரைப் பார்க்கப்பயந்ததால் அவளைத்தேற்ற ஆரம்பித்தாள்.

"அம்மா. நாம் எல்லாம் நாளைக்குக் 'கம்பாதம்' போக வேண்டுமா, அம்மா?'

"சர்வக்ஞர் இஷ்டம்."

"அப்படியானால் சென்று அவரைக் கேட்கவேண்டாமா, அம்மா?"

"ஏன், எங்கேயாவது போய்விட்டால் போதும் என்று துடிக்கிறாயா?"

"என் சம்பு என்னுடையவரில்லை. இனி நான் என் நடனத்தில் அவரை ஈடுபடுத்த முடியாது. இனி நான் எங்கிருந்தால் என்ன? இறந்தால்தான் என்ன, உயிருடனிருந்தால்தான் என்ன?" அவள் குரல் தழுதழுத்து நடுங்கிப் போயிற்று.

"சரி சரி, வா போகலாம். போய்க் கேட்டுவிடலாம். வா" என்று சொல்லி, தாய் தன் மகளையும் அழைத்துக்கொண்டு குருதேவருடைய இருப்பிடம் சேர்ந்தாள். குருதேவர் தனிமையில் ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தார். அவள் எதிரே சென்று அமர்ந்தாள். சௌளாவும் அவள் அருகே உட்கார்ந்துகொண்டாள். தனித்தனி அங்கணங்களில் அமர்ந்திருந்தபடியால் ஒருவரை ஒருவர் பார்க்கமுடியாதுபோனாலும் ஒருவர் பேசினால் மற்றவர் கேட்கமுடியும்.

"பீமதேவா. கஜினி அமீர் வந்தால் என்ன? அவன் தந்தையே வந்தால் என்ன? கடவுள் சிலையை இங்கிருந்து அகற்றமுடியாது."

"ஆனால், குருதேவா, ஏதாவது ஒன்றுவிட்டு ஒன்று நடந்துவிட்டால்......"

"திரிபுராசுரனே ஒன்றும் செய்ய இயலாத சிவபிரானின் ஒளியின் எதிரே மனிதன் என்ன செய்யமுடியும்?"

மந்திரி விமலர் முறுக்கிட்டு, "ஆனால் அந்த அரக்கன் அமீர் அநேக சிவ மூர்த்திகளை உடைத்தெறிந்துவிட்டு வந்திருக்கிறானே. அவன் காலகாலனுக்குக் காலனாகவல்லவா வந்திருக்கிறானாம்?" என்றார்.

"சரிதான். உங்களுக்கெல்லாம் கடவுளிடத்தில் சிரத்தை குறைந்துவிட்டது. அதனால்தான் இப்படிப் பேசுகிறீர்கள். என் நம்பிக்கை குறையவில்லை. அது கொஞ்சம்கூட மாறவில்லை. என் கடவுள் ஆதி அந்தமற்றவர். அவரைத் தொந்தரவு செய்ய யாராலும் ஆகாது"

"குருதேவா, நீங்கள் அப்படிப் பேசக் கூடாது. உங்கள் பெருமையை நாங்கள் அறியோமா என்ன?"

"இல்லை அப்பா, நீங்கள் அமீருடைய அதிசய சக்தியை எண்ணிப் பேசுகிறீர்கள். நான் அதை எண்ணவேயில்லை. எம்பெருமானுடைய எண்ணமின்றி அணுவும் அசையமுடியாது. பிறகு இவன் யார்?"

ராய் சொன்னார்: "குருதேவா; நாங்கள் உலக வழக்கிலே உழல்கிறவர்கள். நாங்கள் வெற்றி தோல்வி இரண்டையும் எண்ணிப் பேசவேண்டியிருக்கிறது."

"வெற்றி தோல்வி! உண்மையறியாதவர் போடும் கணக்கு. ஆம், அதையும் செய்விப்பவன் போலாநாதன் தானே. நீ என்ன செய்வாய்?"

"குருதேவா, நாங்களும் அதை நம்பித்தான் இருக்கிறோம். எங்கள் உடலில் உயிருள்ள வரை கோயிலின் கொடியைக் காப்பாற்றி விடுகிறோம். நாங்களே இல்லாமல் போய் விட்டால்?" என்று ராயர் கேட்டார்.

"யார் யாரையப்பா பிடித்து வைத்திருக்க முடியும்? நீ சொல்வது எல்லாம் வீண் பிரமை? என்னுடைய பெருமானார் இங்கிருந்து அசைகிறவரல்ல. உன்னைப் போன்ற வீர புருஷர்கள் சாவுக்கும் துணிந்து நிற்கும்போது பிறகு ஏன் தோல்வியைப் பற்றிப் பேசுகிறாய்? சண்டை போடு. வெற்றிபெறு. கடவுள் துணை நிற்கிறார்."

"குருதேவா, உண்மை. நான் ஒப்புக்கொள்கிறேன். என் உள்ளத்திலிருந்தும் இம்மாதிரியான குரல்தான் எழுகிறது. எம்பெருமான் போலாநாதர் திரிசூலம் தாங்கித் தயாராய் நிற்கிறார். அவர் தமக்காகக்கூடவா வெற்றிபெற மாட்டார். என்றாலும் சண்டையின்போது மட்டும் லிங்கத்தை மட்டுமாவது அப்புறப் படுத்தியிருந்தால்......?"

என்று பீமதேவன் வேண்ட ஆரம்பித்தார். குருதேவர் அவரை அடக்கி,

"அது மட்டும் முடியாது அப்பா. சிருஷ்டிக் காலத்தில் தானே வெளியான அந்த லிங்கம் பிரளய காலத்திலும் இங்கேதான் இருக்கும்."

"அப்படியானால் சரி, குருதேவர் மட்டுமாவது கம்பாதம் செல்லலாமல்லவா? தர்மத்தின் பாரம் முழுவதும் தங்கள்மேல் இருக்கிறதே."

குருதேவர் அழுத்தம் காட்டும் மெலிந்த குரலில் "குழந்தைகளே நீங்கள் இன்னம் என்னை அறியவில்லை. எனக்கு இந்த மதத்தின் சர்வக்ஞர் என்ற பட்டமோ அல்லது இந்தக் குரு பதவியோ பிரியம் என்று எண்ணுகிறீர்களா? நான் என் கடவுளுடைய அடிமை. அவர் எங்கே இருக்கிறாரோ அங்கேதான் நானும் இருப்பேன். அவரை விட்டுப் பிரிந்த வாழ்க்கையை நான் கற்பனையிலும் கழிக்க முடியாது."

"என்றாலும் சண்டையிடும் இடத்தில் தபஸ்விகள் இருப்பது சரியா? எங்களுக்குத்தான் சண்டையிடுவது கடமை,"

"பீமதேவா! தபஸ்விகளுக்குக் கடமை என்று ஒரு இடம் தனியாக உண்டா? அவர்களுக்கு எந்த இடத்தில்தான் வேலை இல்லை? தபஸ்வி இல்லாத இடத்தில் புண்ணியம் எப்படி வரும்? புண்ணியம் இருக்கும் இடத்தில்தான் வெற்றி கிடைக்கும்."

தமிழ் நாடு — ஆந்திர ஜில்லா எங்கும் திரள் திரளான மக்கள் கண்டு களிக்கும்



ப்ரதிபாவின்

# சொப்பன சுந்தரி

தமிழ் & தெலுங்கு...



அஞ்சலிதேவி.. ஜீ. வரலக்ஷ்மி...

நாகேஸ்வரராவ்...சிவராவ்...முக்காமலா...

Studio VAUHINI

டைரக்ஷன், தயாரிப்பு.... ஜி. பலராமய்யா



"ஆனால்........."

"அது சரி. இந்தப் பேச்சை இத்துடன் விட்டு விடு. சாமந்தனும் இப்படித்தான் பிடிவாதம் பிடித்தான். நான் என்னவோ முடிவு செய்துவிட்டேன் அப்பா. சிவலிங்கம் இருக்குமிடத்தில்தான் நானும் இருப்பேன். மிலேச்சன் என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும். தேவனுக்கும் அந்த மிலேச்ச னுக்கும் இடையே ஒரு மனிதக் குஞ்சுகூட இல்லாதுபோனாலும் நான் இருக்கத்தான் போகிறேன். என்னுடைய தலையில் ஈசுவரன் என்னென்ன எழுதியிருக்கிறானோ, யார் கண் டார்கள்?"

கங்கசர்வக்ஞருடைய மதுரமான மொழி களைக்கேட்ட கங்காதேவி தன் கண்களைத் துடைத்துக்கொண்டாள். பீமதேவன் முதலிய வர்களும் அந்தக் கிழவருடைய தந்நம்பிக்கை யையும் அசைவற்ற தன்மையையும் கண்டு விம்மிதம் அடைந்தனர்.

கொஞ்சநேரம் சென்று சர்வக்ஞர் சொன் னார்:- என்னுடைய எல்லாச் சிஷ்யர்களையும் அழைத்துச் சென்றுவிடு. அவர்கள்தான் லகு லேச சம்பிரதாயத்தின் தூண்போன்றவர்கள். அவர்கள் தவத்தையும் நிஷ்டையையும் காப் பாற்றித் தந்தாகவேண்டியது கடமை. சிவராசி நீ ககனராசியையும் மற்றோரையும் அழைத் துக்கொண்டு போ!"

சிவராசி, "கட்டளைப்படி, "குருதேவா" என்று வணங்கினான். அவனுக்கு அடுத்தபடி ககனராசியானபடியால் அவனும் ஒன்றும் பேசாமலே கட்டளைக்கு வணங்கி, சிரமசைத் தான்.

மந்திரி விமலர் "நான் இன்றிரவே வியா பாரிகளை அனுப்பிவிடப் போகிறேன்" என் றார்.

"நாளைக் காலையில் பிராமணர்களை அனுப்பி விடுகிறோம்."

"ஆம், எல்லாரையும் அனுப்பிவிடு. எனக்கு ஒருவரும் வேண்டாம்." குருதேவர் சொல்லிவிட்டார்.

சிவராசி படபடப்பை முடிந்தவரை அடக் கிக்கொண்டு — "குருதேவா, கங்கா முதலிய மற்ற நாட்டியப் பெண்களையும் அழைத்துச் செல்லவேண்டியதுதானே?" என்றான்.

"ஆமாம் அந்தப் பெண்கள், பாவம் இங் கிருந்து என்ன செய்வார்கள்? கங்காவிடமும் சொல்லிவிடு."

குருதேவருடைய இந்த முடிவுக்குப் பதில் வாசற்படியருகிலிருந்து, 'கங்காதேவி இவ்விடம் விட்டு அசையவேமாட்டாள்' என்று வரவே எல்லோரும் திடுக்கிட்டனர். இடுப்பிலே கையைத்தாங்கி சாக்ஷாத் சண்டிகாவைப்போல் நிற்கும் அவளைக்கண்டு அரசர்கள் எல்லோ ருமே விழித்துப் பார்த்தனர்.

"குருதேவ... பகவானுடைய காலடிகள் தான் தங்களுக்கு உகந்த இருப்பிடம். தங்கள் காலடிதான் என் சதம்."

சர்வக்ஞர் சிரித்தார். 'கங்கா, இங்கே பெண்கள் எப்படியிருக்க முடியும்? நீ போய்த் தான் ஆகவேண்டியிருக்கும்."

"எங்களுக்கும் எங்கள் கடமை தெரியும். உங்களுக்குமட்டும்தான் விரதம். எங்களுக்கு ஒன்றும் இல்லையா?"

ராய் — "ஆனால் புருஷர்கள் நிலை வேறல் லவா? சண்டைக் காலங்களில் பெண்களுக்குத் தானே பயமதிகம்."

"அதனால்தானே ஆயிரக்கணக்கான பெண் கள் நெருப்பைச் சதம் என்று அடைய நேரிட் டது."

எனக்கு நெருப்பும் வேண்டாம். என்னு டைய உயிர் குருதேவருடைய காலடிகளில் இருக்கிறது.

குருதேவர் கண்கள் சற்றுநேரம் அவள் உள் ளத்தைத் துழாவின.

"சரி விமலா. இவளை இங்கேயே இருக்க விடு. சரி, கங்கா உன் இஷ்டப்படியே ஆகட் டும். ஆனால் சௌளாவை அனுப்பிவிடலா மல்லவா?"

அதற்குப் பதில் ராசியே தந்தான். "ஆம். இளம் பெண்கள் இங்கிருப்பது சரியல்ல."

கங்கா தன் புத்திரியைப் பார்த்தாள்.

சௌளா சற்று நேரத்தில் உருமாறி நின் றாள். உதட்டை மடித்து வாய் மூடி ஒளியொழு கும் கண்களுடன் அவள் குருதேவரையும் பீம தேவனையும் மாறி மாறிப் பார்த்தாள். பிறகு சிவராசியையும் பார்த்தாள். பிறகு கழுத்திலே கைகளை வைத்து ஓர் பெருமூச்சு விட்டாள்.

கங்க சர்வக்ஞரும் கேட்டார், ஆனால் அதற்குப் பதில் அவள் கண்கள் அழுது வெறி கொண்டு சொல்லின.

பிறகு அவளும் அழுதுகொண்டே நிறுத்தி நிறுத்தி "நீங்கள் எல்லோரும் சேர்ந்து என்னை எல்லா விதத்திலும் ஏழையாக்கி விட்டீர்கள்.

என் சிவபிரானை என்னிடமிருந்து பிரித்து விட்டீர்கள். என் நாட்டியத்தையும் ஒழித்து விட்டீர்கள். இனி நான் உயிருடன் எதற்கு இருக்கவேண்டும். என்னையும் ஒழித்து விடுங்கள்" என்று சொல்லிக்கொண்டே எழுந்த அவள் உணர்ச்சி வேகத்தால் கண்களை மூடிக் கொண்டு ஆடிக் கீழே விழுந்தாள். பீமதேவன் உள்ளத்தில் அவரறியாமல் தங்கி மறைத்துக்கொண்டிருந்த ஒரு திரை விலகிற்று. அந்த இரவு, அந்த நிலவு, அந்த முகம், அந்தச் சரீரம்! அவர் உள்ளம் மின்னுணர்ச்சி கொண்டு எழுந்தது. ஒரே தாவலில் எழுந்த அவர் அவளை அப்படியே வாரி எடுத்தார். எல்லோரும் கொஞ்ச நேரத்துக்குச் சண்டையை மறந்து விட்டனர்.

பீமதேவன் அவளை எடுத்து அவள் தாய் மடியில் படுக்கவைத்தார். கங்கசர்வக்ஞர் உதடுகள் தர்மாகவே பிரிந்தன.

"பக்தி இருக்கும் இடத்தில் பிராணனை ஒருவரும் லக்ஷியம் செய்வதில்லை. சிரத்தையுள்ளவர்கள் இங்கேயே இருக்கட்டும். பக்தர்களைக் கடவுளிடமிருந்து பிரிப்பது மகாபாதகமான செயலாகும்" என்றார் அவர்.

பீமதேவனும் 'சரி' என்று ஆரம்பித்தார். அவர் உள்ளம் ஏதோ சுமையைத் தாங்கியதாகத் தெரிந்தது. "நான் விரும்புவதற்கு விரோதமாக ஏதாவது தடங்கல் செய்ய வந்தே திருகிறது. குருதேவா, என் எண்ணத்தைக் காரியரூபமாக நிறைவேற்ற உத்தரவு தருவீர்களா?" என்றுகேட்டு அவரைப் பார்த்தார்.

"ஆம். நான் இனிப் பேசவே போவதில்லையே, அதுதான் என் அதிகாரம் முழுவதையும் உனக்கே தந்து விட்டேனே! இனியும் என்னை என்ன கேள்வி?" என்றார்.



பீமதேவன் கங்காதேவி வீட்டை அடைந்தார். அவருடன் அந்தரங்கமான வீரர்கள் சென்றார்கள். வாசல் மூடியிருந்தது, மாடத்தில் ஒரு விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அவர் சென்று கதவைத் தட்டினார். உள்ளிருந்த கங்கா, "யாரது இந்த வேளையில்?" என்று கேட்டாள்.

இரண்டு மாதத்துக்கு முந்தி இருந்த பீமதேவனல்ல இப்பொழுது அவர். அவர் இந்தச் சமயம் சர்வாதிகாரி. அவருக்கு ஒரு கவலையும் இல்லை.

"நான்தான் பீமதேவன். சௌளாவைப் பார்த்துவிட்டுப் போக வந்தேன்." கங்கா கலவரம் அடைந்தாள். "யார் பீமதேவ மகாராஜரா!" கங்கா உள்ளே சென்று பெண்ணை எழுப்பினாள். இருவரும் ஏதோ பேசினர். பிறகு கங்கா கதவைத் திறந்து 'சாளுக்கிய மன்னரே, வாருங்கள் உள்ளே' என்றழைத்தாள்.

"வீரா, உள்ளே வா. கதவண்டை இருந்து பார்த்துக்கொள்.' என்று உத்தரவிட்டுப்பீமதேவன் மேலேறிச்சென்றார், கங்காவைத் தொடர்ந்து.

"சௌளா இப்பொழுது சௌகரியமாயிருக்கிறாள். அவள் இயற்கையே அப்படித்தான். திடீர் திடீர் என்று மயக்கம்அடைந்துவிடுகிறாள். அதுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது.வாருங்கள், அமருங்

கள் தெய்வமே.'' என்று உபசரித்தாள் கங்கா தேவி.

பீமதேவன் கண்கள் சுற்றுமுற்றும் பார்த்து ஏதோ கேட்பதை உணர்ந்த கங்கா தேவி "சௌளா உடை மாற்றப் போயிருக்கிருள். இதோ வந்துவிடுவாள்'' என்ருள்.

சௌளாவும் அறையிலிருந்தபடியே வாயில் வழியாகச் சண்டைக்குத் தயாராய் ருத்திர பகவானைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தாள். அவள் தேவதுந்துபி முழங்குவதைக் காதால் கேட்டாள். அவளுடைய தவத்தை மகிழ்ந்த அவளுடைய பிரபு மனித உரு எடுத்து கஜினி அமீருடைய செருக்கொழிக்க வந்து நிற்கிருர். அவள் மனம் இப்படிச் சுற்றிக்கொண்டிருக்கும் போதே அவள் மெல்லிய விரல்களும் உடை மாற்றுவதில் ஈடுபட்டுக்கொண்டிருந்தன. உடை மாற்றி முடிந்தது. ஆனல் அவள் கால்கள் எழ மறுத்தன.

கங்கா தேவி "சௌளா, வா பெண்ணே" என்றழைத்தாள்.

சௌளா தைரியத்தை வருவித்துக்கொண்டு அங்கே நின்ருள். இப்பொழுது கண்கள் மேல் எழ மறுத்து நின்றன.

"வாடி அசடு!'' என்ருள் மீண்டும் கங்கா.

அவள் வந்தாள், அமுதச் சங்கீத ஒளி பரவ—அப்ஸர குமாரி போல் அழகுக் கண் அம்புகளால் பீமதேவனைத் துடிக்கவைத்துக் கொண்டு—வெட்கத்தின் சேஷ்டைகளால் அவர் தாகம் அதிகரிக்க அவள் சிலம்புகள் ஒலித்தன. அப்படியே கால்கள் மின்னின. அவள் அவர் காலிலே விழுந்து பாததூளியை எடுத்துச் சிரஸிலே தாரணம் செய்துகொண்டாள்.



"சௌளா! நீ அன்று இரவு சொன்னயே சீக்கிரம் திரும்பி வா! என்று. அதை நான் மறக்கவில்லை!'' என்றார் பீமதேவன். சௌளா குனிந்த தலையின் நீர் சொரியும் கண்களை மேலே தூக்கி, தான் முன்னறிந்து நேசித்த பீமதேவனுடைய அன்பை ஏற்றுக்கொண்டாள்.

"நான் மறக்கவில்லை'' என்றார் மீண்டும் அவர்.

"நீங்கள் கோவிலில் எழுந்தருளியபோது நான்தான் நடனம் ஆடிக்கொண்டிருந்தேன்.'' சௌளா குரலில் வேதனையுடன் குறையும் கலந்திருந்தது.

"அதுவா, நான்தான் தெரியுமே. நான் உன்னைப் பார்க்கவில்லை. எனக்குத்தான் 'ஒருமதி' யாயிற்றே'' என்று சொல்லி, கொஞ்சம் சிரித்து, பீமதேவன் மேலே சொன்னார்.

"அது என்னுடைய பிசகுதான். இனி நீ சற்று நேரம் கடவுளுக்கெதிரே நடனமாடலாம். அதற்கு அனுமதி கொடுக்கிறேன். அதைச் சொல்லிப்போகத்தான் நான் இங்கே வந்தேன்,''

"அந்தக் காளமுகனிடத்திலிருந்து சௌளாவைக் காப்பாற்றித் தந்தீர்களே! அதற்கு நாங்கள் என்ன பிரதி செய்யப்போகிறோம்?''

"சே, அது என் கடமை அல்லவா! பெண், பசு, பிராமணன் மூவரையும் காப்பாற்ற வேண்டியது ஒரு வீரனின் கடமைதானே.''

சௌளாவின் கண்கள் கேட்டன: "அந்த முறையில்தான் அதாவது கடமையை எண்ணித்தான் நான் காப்பாற்றப்பட்டேனா?''

பீமதேவன் இதயம் இதைப் படித்துக் கொண்டது. அவர் இதய வீணையில் ஒரு கம்பி துடித்து எழுந்தது. ஆனால் இது காதல்புரியும் நேரமல்ல. எழுந்தார் அவர். "சரி நேரமாய்விட்டது. வேலை இருக்கிறது; வருகிறேன்'' என்று கிளம்பினார்.

கங்காவும் எழுந்தாள். "மகாராஜா, பிறகு ஒருமுறை எங்களுக்குத் தரிசனம் தருவீர்களா?'' என்று பிரார்த்தித்தாள்.

பீமதேவன் தயங்கினார். இந்த ஊர்வசியைத் தோற்கடிக்கும் அழகின் சக்தியை விட்டு அவர் எப்படிப் போவார்?

"பிரபாசியில் நாளைமுதல் ஒரு பெண்ணும் இருக்கப்போவதில்லை. நீங்கள் இருவர்மட்டும் தான் இருப்பீர்கள். ஆகவே நீங்கள் வந்து கோயிலுக்குள் நாங்கள் இருக்குமிடத்தில்தான் இருக்கவேண்டும். எங்களைப் பார்த்துக் கொள்ளவேண்டும்.''



கங்கை இதைக் கேட்டு மிகவும் உவந்தாள். சௌளாவின் ஆனந்தம் ஊமையாகி நின்றது. பீமதேவன் வாக்கை நிறைவேற்ற நல்ல காரணம் கண்டுபிடித்தார்! 'நாளைக் காலையிலேயே உங்கள் வீட்டிற்குப் படைவீரர்கள் தங்க வந்துவிடுவார்கள்' எனறு ஒரு அம்பு விட்டுவிட்டுத் திரும்பினார் வீரர். "இதற்கென்ன இவ்வளவு அவசரமோ?" என்று பதிலம்புவிட்டன சௌளாவின் கண்கள்.

7

சிவராசி மிகவும் களைத்துப்போயிருந்தான். இவ்வளவு நாள் உபவாசமிருந்து இன்றுதான் நிறுத்தினான். அத்துடன் நாம் போவதா இல்லையா என்ற கவலையும் அவனைக்குடைய ஆரம்பித்தது.

நடுப்பகல் வரை பகவானுடைய சேவையும் குருபக்தியும் ஒரு தட்டில்; குருதேவரில்லாது தானே செய்யும் பாசுபத மதப் பிரசாரம், திரிபுரசுந்தரியின் பூஜைக் குறைப் பூர்த்தி, இரண்டும் மற்றொரு தட்டில் இருந்தன. ஆனால் இப்பொழுது சௌளாவின் நினைவு அதிகப் பளுவுள்ளதாக ஆகிவிட்டது. குருதேவர் செய்த பாபம் அவனுக்கெதிரே கோரரூபம் கொண்டு தாண்டவமாடிற்று. அவர் தாம் பாவம் செய்ததுமன்றி அவனையும் அநியாயமாகப் பிரயாச்சித்தம் செய்ய வைத்துவிட்டார். ஆனால் கஜினி ஜயித்து, பிரபாசியைப் பிடித்துக்கொண்டால் பாசுபதமதம்? குருதேவர்தான் அடம்பிடிக்கிறார். தானுமா பிடிப்பது? ஆனால் தான் மட்டும் கம்பாதம போய், சௌளா இங்கேயே தங்கிவிட்டால் என்ன பாபம், அந்தப் பூஜை முடிவுறுதே, அதற்கு என்ன செய்வது? இப்படிப் பின்னி அவிழ்த்து மீண்டும் பின்னியவாறே சிவராசி உள் கோட்டைக்குள் நுழைந்தான். இந்தப் பவித்திரமான இடத்தில் இன்று பக்தகணங்கள் நிற்கவில்லை. படை வீரர்கள் ஆயுதம் தாங்கிக் காவல் புரிந்தனர். அதைக் கண்டு அவனுக்குத் தாளமுடியாத வருத்தம் ஏற்பட்டது. "ஆகா! என் தவம் முடிவுற்று, சௌளாவுக்கும் பூஜை நிறைவேறிவிட்டால் கஜினி அமீர் தானாகவே சாம்பலாகிவிடமாட்டானா?" என்று எண்ணிய அவன், "அந்தப் பூஜையை நிறைவேற்றுவது எங்ஙனம்?" என்று கவலைகொள்ள ஆரம்பித்தான்.

[தொடரும்]

Edited & Published by N. R. Ramanujan & Printed by S. Rangaswami at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

இணையில்லா
வாசனை
தயாரிப்புகள்




டி.எஸ்.ஆர்

அரைக்கீரை விதை தைலம்

சந்தனாதி
தைலம்

கோகுல் ஹேர்
ஆயில்







FAS.

டி. எஸ். ஆர். & கோ., கும்பகோணம்.

The Cauveri Colour Press, Kumbakonam.